# பேராசிரியர் முத்துசிவன்

## நினைவு மலர்




வெளியீடு :

அழகப்பா கல்லூரி, காரைக்குடி.

1955

# பொருளடக்கம்



## I பாராட்டுரைகள்



## II புலவர்களின் கட்டுரைகள்



## III (i) ஆ. மு. வின் நூற்பகுதிகள்

## (ii) கவிதைப் பகுதிகள்



## (iii) மாணவரின் திறனாய்வுக் கட்டுரைகள்

# FOREWORD

It is a melancholy duty to write a foreword to this Commemoration volume. The passing away of a friend is always an occasion of mourning. But the grief is all the greater when the hand of death falls on one in the full glory of early manhood. In the demise of Prof. Muthusivan a very promising career has suddenly been cut short.

But Prof. Muthusivan's life was not only one of promise, it was also one of achievement. His profound scholarship and his gift of elegant expression both as a writer and as a speaker, had made his name a household word wherever Tamil is spoken and understood. He was frequently invited by Tamil Associations in Delhi, Bombay, Calcutta, Jamshedpur, Colombo, Jaffna and other places to address them and to participate in their celebrations. His services to Tamil will be remembered long not only in Tamilnad but wherever Tamilians live.

But we in this college have lost in his death not only a Tamil scholar and savant but one of the pillars of this institution. He joined this college at the time of its inception and till the last day of his life he identified himself completely with every one of its activities. As head of this institution, I have always found in him a loyal and indefatigable colleague who cheerfully took upon himself not merely the duties pertaining to his department, but the burden of a great deal of extra-curricular work. And, then, he had such high integrity of character, such a warm and soft heart, and such a sweet and amiable disposition that he made himself universally popular both among his students and his colleagues.

The present volume is a modest attempt to preserve the memory of this great son of Tamilnad; it is a spontaneous tribute of esteem and affection from his students, colleagues and friends.

***A. N. Tampi,***

*Principal.*

# பேராசிரியர் முத்துசிவன்

## நினைவுச் செயற் குழு

புரவலர்கள் :

**டாக்டர். ராம. அழகப்ப செட்டியார்** M.A., D. Litt., L. L. D., Bar-at-Law

**திரு. க. வீ. அள. மு. ராம. ராமனுதன் செட்டியார்**

தலைவர் :

**திரு. ஏ. என். தம்பி,** B. A. (Oxon) Bar-at-Law, Dip.-in-Edn. (Oxford)

துணைத்தலைவர் :

**திரு. வ. சுப. மாணிக்கம்** M. A., M. O. L.

செயலாளர்கள் :

**திரு. சு. குழந்தைநாதன்** B. A.

,, **வெ. கண்ணன்** IV B. A.

உறுப்பினர்கள் :

**திரு.** D. **பாண்டியன்** IV B. A.

,, C. **சிவசுப்பிரமணிய பிள்ளை** IV B. Sc.

,, Rm. V. **சேதுராமன்** III B. Com.

,, S. **ராமகிருஷ்ணன்** II Cl.

,, K. N. **வள்ளியப்பன்** I Cl.

# நன்றியுரை

"நினக்கென வரைந்த ஆண்டுகள் எல்லாம்
மனக்கினி தாக வாழிய"

என்ற சாத்தனர் வாழ்த்துப்படி, தமிழ் இனிக்க, தம்மொடு பழகியோர் நினைவினிக்க, தம்சொற்கேட்டோர் செவியினிக்க, தம்மனம் இனித்து வாழ்ந்தவர் பேராசிரியர் முத்துசிவனர். பல்லாண்டு வாழ்ந்து தமிழ் மதியாய் அறிவுக்கதிர் வீசத்தக்க அவர், மின்னற் கீற்ருகக் கவிதை யொளி காட்டி மறைந்தாரேனும், உரிய வாழ்நாளில் சொல்லாலும் எழுத்தாலும் அவர் செய்த தமிழ்த் தொண்டு பெரிது.

முத்துசிவனரின் மறைவு யாரும் தடுத்தற்கு அரியது; என்ருலும் அவர் வாழ்ந்த வாழ்க்கை எல்லாராலும் நினைத்தற்குரியது. பயன்தந்து வாழ்ந்திறந்தாரைப் பயன்பெற்று வாழும் மக்கள் நன்றியொடு நினைத்துக்கொள்ள வேண்டும். இந்நன்றியின் உருவமாக, ஆ. மு. வுக்கு நினைவுத் தமிழ் மலர் ஒன்று கல்லூரிப் பெயரால் வெளியிட வேண்டும் என்று முதல்வர் உயர்திரு. தம்பி அவர்களின் உள்ளத்துத் தோன்றியது. அவ்வுள்ளத்தின் செயற்பாடே இந்நினைவு மலர். வாடாத் தமிழ் மலர் தொடுக்கும் வழிகூறி, மலர்க் குழுவுக்குத் தலைவராய் வீற்றிருந்து, முன்னுரை வரைந்துதவி, சிறியேங்களைப் பேருக்கப் படுத்திய கல்லூரி முதல்வர் அவர்கட்கு எங்கள் நன்றியும் பணிவும் முதற்கண் உரியன.

இந்நினைவு மலர் 1. பெருமக்களின் பாராட்டுரைகள், 2. தமிழ் அறிஞர்களின் கட்டுரைகள், 3. முத்துசிவனரின் நூலுரைகள் என மூன்று பகுதிகள் கொண்டது. கல்லூரித் தோன்றலும் கல்வி வள்ளலும் ஆய டாக்டர் அழகப்ப செட்டியார் அவர்கள் முத்து சிவனரின் பண்பியலைக் கூர்ந்தறிந்தவர்கள். அவர்கள் தம் பாராட்டுத் தந்தியை முதலாகப்பெற்று முதற்பகுதி தொடங்குகின்றது. பேராசிரி யரின் வாழ்க்கையைப் பலதிறத்தால் கண்டு பாராட்டுரை தந்தருளிய பெருமக்கட்கெல்லாம் நன்றியுடையோம்.

இரண்டாம் பகுதி ஒன்பது கட்டுரைகள் கொண்டது. 'வினையான் வினையாக்கிக் கோடல்' என்றபடி, தமிழ் வளர்த்த முத்துசிவனர்க்குச் செய்யும் நன்றிப்பணியும் தமிழ் வளர்ப்பதாகவே அமையவேண்டும் என்று கருதினேம். நினைவு மலர் நீடித்து நிற்கும் வாடாத் தமிழ்மலராக விரிய வேண்டும் என்று விரும்பினேம். எம் விருப்பத்திற்கு இசைந்து தமிழகத்தின் பெரும் புலவர்கள் இம்மலருக்கென்றே புதுவதாகப் பல்பொருள் பற்றிக் கட்டுரைகள் எழுதி நல்கினர். தமிழாசிரியர்க்கு மலர் எடுக்கும் எங்கள் வினையைத் தமிழ்ப் பணியாகவே மதித்து எழுத்துக்கொடை வழங்கிய அறிஞர்கட் கெல்லாம் தனிப்பெரு நன்றியுடையோம்.

மூன்றாவது பகுதி முத்துசிவனாரின் நூற்பகுதி, கவிதைப் பகுதிகளையும், மாணாக்கரின் திறனாய்வுக் கட்டுரைகளையும் கொண்டது. இப்பகுதிகளைக் கற்ற அளவிலேயே, ஆ. மு. எதனையும் நன்கு அலசிப் பார்க்கும் எண்ணாளன், ஆய்ந்து கண்டதை மனம் பதிய எழுத்துப் படுத்தும் கலையாளன், புதிய கருத்துக்களை அள்ளித்தரும் கொடையாளன், கல்லூரியும் நாமும் நினைவு மலர் தொடுக்கத்தக்க புகழாளன் என்று தெளியலாம்.

இம் மூன்றாம் பகுதியின் மற்றொரு கூறு அழகப்பா கல்லூரி மாணவர்களின் கட்டுரைகளாகும். கவிதைபற்றியும் வாழ்க்கை பற்றியும் பேராசிரியர் எழுதிய திறனாய்வு நூல்களுக்கே ஒரு திறனாய்வு எழுதத் துணிந்தனர் மாணவர். இவ்விளைஞர்களின் புலமை முயற்சி வளர்க. இந்த ஆய்வுக் கட்டுரைகளைக் காண்பவர் இக்கால மாணவர்களிடை தமிழ் வளர்ந்து வரும் பாங்கினை அறிந்து கொள்வர். இம் மலர்க்கு இங்ஙனம் எழுத்து வகையால் உதவி செய்த சில மாணாக்கர்க்கும், பொருள் வகையால் உதவி செய்த அனைத்து மாணாக்கர்க்கும் மறவாத நன்றியுடையோம்.

இந்நினைவு மலர் அழகுற்றுத்திகழப் பல வகையாலும் உதவி செய்தவர் பலர். இம் மலரில் வரும் நிழற் படங்களிற் பல அழகப்பா கல்லூரி ஆண்டு மலர்களில் முன்னரே வெளியாயிருந்தவை. திரு. சா. கணேசன் அவர்களும், இலங்கைத் தமிழ்ப் பேராசிரியர் திரு. கா. பொ. இரத்தினம் அவர்களும் தந்துதவியன சில. ஆ. மு. குடும்பத்தார் தந்தவை சில. இவர்கட்கெல்லாம் எங்கள் நன்றி.

நினைவு மலரின் அமைப்புப்பற்றி அவ்வப்போது அறிவுதவிய நண்பர்கட்கும், தமிழ்த் துறையாசிரியர்கட்கும், குழுவுறுப்பினர்கட்கும் நன்றியம். மலர்க்குழுவின் செயல் முறைக்குத் துணைசெய்த கல்லூரி அலுவலக மாந்தர்க்கும், ஓர் உறுப்பினர்போல் ஒத்துழைத்து எல்லா வகையாலும் ஆர்வத்தொடு உதவி செய்த தலைமை அலுவலகர் திரு. ரெங்கன் அவர்கட்கும் நன்றியுணர்வுடையோம். காரைக்குடி சௌத் இந்தியா அச்சகச் செயலர் திரு. முத்து எங்கள் மனமுவப்ப இம்மலரை அச்சியற்றித் தந்தனர். அவர்க்கு நன்றி.

வள்ளல் அழகப்பாவின் வளருந்தனிக்கொடையால் பிறந்த இக்கல்லூரிக்குத் தமிழ்ப்பேராசிரியராகத் தொடக்க முதலே தொழி லாற்றியவர் முத்துசிவனார். ஆசிரிய வினையை வாழ்க்கைப் பணி யாகவும் அழகப்பா கல்லூரியைத் தம் தொண்டுகளமாகவும் துணிந்தவர் முத்துசிவனார். இத்தமிழ்ப் புலவர்க்கு உலகுபுகழ் அழகப்பா கல்லூரி நினைவு மலர் எடுப்பது நாடறியத் தமிழை உயர்த்தும் பெருஞ் சிறப்பன்றோ!

வணக்கம்.

அழகப்பா கல்லூரி,
7—3—1955.

சு. குழந்தைநாதன்
வெ. கண்ணன்

# பேராசிரியர் ஆ. முத்துசிவன்








"தாய்மொழியைப் புறக்கணித்து வாழ்ந்தநாடும் இல்லை;
தாய்மொழியைப் பாராட்டி வீழ்ந்தநாடும் இல்லை."

— முத்துசிவன்.

தோற்றம்: 15-11-1910 மறைவு: 23-9-1954

# வள்ளல் அழகப்பாவின் தந்திச் செய்தி

DR 34 Tokyo    Date 25 - 9 - 54

PRINCIPAL TAMPI,
ALAGAPPA COLLEGE, KARAIKUDI.

I TOOK LEAVE OF PROFESSOR MUTHUSIVAM BUT NOT FOR EVER. A LIGHT OF LEARNING AND CHEER HAS GONE FROM OUR CAMPUS. MY GREATEST SHOCK. KINDLY CONVEY SINCEREST SYMPATHY BEREAVED MEMBERS.

**CHETTIAR.**

டோக்கியோ 25 – 9 – 54

**முதல்வர் தம்பி,**
**அழகப்பா கல்லூரி, காரைக்குடி.**

பேராசிரியர் முத்துசிவனிடம் என்றைக்குமா விடைபெற்று வந்தேன். அறிவொளியும் மலர்ச்சியும் நம் எல்லையகத்திலிருந்து போய்விட்டது. எனக்குப் பேரதிர்ச்சி. இழந்தோர்க்கு என் உள்ளார்ந்த இரங்கலைப் புலப்படுத்திக் கொள்ளுங்கள்.

**செட்டியார்.**

# அருமையான மனிதர்

க. வீ. அள. மு. ராமநாதஞ் செட்டியார்
செயலாளர்,
டாக்டர் அழகப்ப செட்டியார் கல்வியறநிலையம்.

பேராசிரியர் முத்துசிவன் ஒரு அருமையான மனிதர். என்றும் புன்முறுவல் பூத்த முகமும் தூய உடைகளும் காண்போர் எவரையும் வசீகரிக்கும். நான் அவரை முதன் முதல் 1946ல் அறிவேன். காரைக்குடியில் சிறப்பாக நடைபெறும் கம்பன் திருநாளில் தவருமல் கலந்துகொள்ளும் அவரை நான் சந்தித்ததும் அங்குதான். அவருடைய தோற்றமும், பேச்சும், பேச்சின் இடையில் இசையுடன் பாடும் இயல்பும் எனக்கு மிகவும் பிடித்திருந்தன. பின்னர் அவர் நமது கல்லூரியின் தமிழ்ப் பேராசிரியராக அமர்ந்ததுமுதல் நான் அடிக்கடி அவரைச் சந்திக்கும் வாய்ப்பிருந்தது. அன்பும் பணிவும் தோன்ற அவர் நடந்துகொள்ளும் முறை அவருடைய பண்பு பெரிதும் பிரகாசிக்க ஏதுவாயிருந்தது. கல்வி அறிவு பெருகிக்கொண்டிருந்தும் அவரிடம் அடக்கம் குடிகொண்டிருந்தது. தெய்வ பக்தியும், சேவை உணர்ச்சியும் நிரம்பியிருந்தமையால் அவருடைய பேச்சிலும் எழுத்திலும் ஒரு கவர்ச்சி இயல்பாகவே இருந்தது. பழைமையை உதாசீனம் செய்யாமல் புதுமையின் சிறப்பியல்களை எல்லாம் தழுவிக்கொள்ளும் பெற்றி உடையவராயிருந்தார். போட்டி ஆட்டங்களிலும், பொழுது போக்குச் சாலைகளிலும் அவர் நடந்துகொள்ளுவதைப் பார்த்தால் அவரை ஒரு பேராசிரியர் என்று நம்பமுடியாது. அவ்வளவு எளிமையாகவும், உத்ஸாகமாகவும் காணப்படுவார். அவருடைய இந்தக் குணச் சிறப்பே அவரை வெளி மாகாணங்களிலும் வெளிநாடுகளிலும் பிராபல்யமுள்ளவராக ஆக்கியது என்பது என் கருத்து.

மொத்தத்தில் அவர் நல்ல கல்வியறிவும், எளிமையும், திறமையும், கனிவும், தெளிவும், உறுதியும் உள்ளவராக விளங்கினர். அவருடைய தொடர்பு நமது கல்லூரிக்கு ஒரு பொலிவையே தந்துகொண்டிருந்தது. இன்று அவர் நம்மிடையில் இல்லை. ஆனல் அவருடைய நல்லெண்ணமும், அவரைப் பற்றிய நமது எண்ணமும் என்றும் முதிராப் பசுமையாய் இலங்கும் என்பது என் நம்பிக்கை.

முத்துசிவனின் புத்திர புத்திரிகள் கல்வியறிவு ஒழுக்கங்களில் மாண்புடையவர்களாகித் தந்தை பெயர் சொல்லத்தக்கவர்களாய் வாழ்ந்து அன்னவர் பிரிவால் ஏற்பட்ட நஷ்டத்தை ஈடுசெய்ய வேண்டும். ஆண்டவன் அருளும் அன்பர்கள் துணையும் நம் விருப்பத்தைப் பூர்த்திசெய்யட்டும்.

வாழ்க முத்துசிவன்—வளர்க முத்தமிழ்.

# AS I KNEW HIM

*by Dr. K. P. K. Menon,*
*Professer of English, Alagappa College.*

"But O the heavy change, now thou art gone,
Now thou art gone and never must return."

September 23, 1954 will ever be remembered by me as one of the darkest days of my life, for on that day passed away one whom I knew and esteemed as a student, colleague and friend.

My first acquaintance with Mr. Muthusivan dates from the period when he was a student of the Tamil Honours classes of the Annamalai University from 1932 to 1935. I was myself then staying in the University Hostel, and I knew him personally as I knew most of the inmates of the Hostel. But Mr. Muthusivan made himself known to every one as a student leader. He had the honour of holding many of the elective offices open to students, and, above all, that of the Chairman of the University Union. I particularly remember the occasion when he presided over a meeting at which the late Mr. S. Satyamurti made one of the most stirring speeches I have ever heard.

I lost touch with Mr. Muthusivan after he left the University in 1935. But I had not forgotten him, and it was, therefore, a most pleasant surprise for me when, on August 11, 1947, the day on which the Alagappa College was inaugurated, I met him in a new capacity as my colleague and as the Head of the Department of Tamil. During the last seven years and more, we have had occasion to come into very intimate contact, and I have always found him a loyal and obliging friend and a cordial and helpful colleague. In the last few months of his life we were neighbours, and I could not have wished for a more neighbourly neighbour than he. I had the melancholy privilege of attending on him on his last day and in his last moments. How I wish that it had been given to me to serve him in some other way!

By Mr. Muthusivan's death Tamilnad has lost a deep and sane scholar, a graceful writer, and an elegant speaker. Of his scholarship I am by no means competent to pronounce judgment. But I know enough of him to affirm that there was nothing of the narrow Tamil scholar in him except his scholarship in Tamil. His love for his mother tongue did not blind him to the beauty of other languages. On

the other hand he knew that one who knew only Tamil knew little of Tamil. He had a keen appreciation of the beauty and the richness of English language and literature, and he believed that contact with other languages would only nourish and invigorate his own language.

This literary and linguistic cosmopolitanism was of a piece with his own tolerant and broadminded outlook on life in general. He was no purist or Puritan. He loved fine clothes, and fine food; he could enjoy a cigar as well as a game of tennis; and he was a connoisseur and no mean practitioner of the art of music. There was nothing of the cynic in him, and less of the stoic than of the epicurean.

The gift of good humour is a prized possession and Mr. Muthusivan was richly endowed with it. He could laugh over a joke even when it was at his own expense—indeed, he had the rare gift of being able to laugh at himself. I remember a story he once told me. One day he was sitting without his cap in the pial of his house. A student who knew him well came in and asked him whether Prof. Muthusivan was at home. Mr. Muthusivan answered that he was, went into the house, put on his cap, and came out. The student then had his talk with Prof. Muthusivan. This capacity for self-ridicule encouraged his friends to cut jokes against him without fear of causing resentment. I myself was once cruel enough to ask him whether he wore his cap, as well he might, even when he was having his hair cut. His answer was a most hearty laughter.

Mr. Muthusivan went through life with a never-failing smile on his face. His cheerfulness never left him, and it was his great good fortune that till his last breath he had not the faintest notion that his end was near. A few moments before he passed away he expressed his fear (hope, to the rest of us who were hoping against hope) that it would take a few more hours for him to be well once again! Even after his pulse had practically stopped and his end was expected any moment, he was solicitous in offering seats to those who came to see him. Good men are the salt of the earth, and Mr. Muthusivan was one of God's good men.

The manner of his passing away reminds one inevitably of the transience of human life and the ever present possibility of death:

> "For what is your life? It is even a vapour, that appeareth for a little time, and then vanisheth away."
>
> "As for man his days are as grass! as a flower of the field, so he flourisheth.
> The wind passeth over it, and it is gone; and the place thereof shall know it no more."

# பேராசிரியர் முத்துசிவனார் வாழ்வியல்

( வித்துவான் வ. சுப. மாணிக்கம், எம். ஏ., எம். ஓ. எல்.,
தமிழ்ப் பேராசிரியர், அழகப்பா கல்லூரி. )

**" யாரொடும் பகை கொள்ளலன் என்றபின்
போரொடுங்கும் புகழொடுங்காது "**

என்ற கம்பரின் வாழ்வுரைக்குத்தக வாழ்க்கை நடத்தியவர் பேராசிரியர் முத்துசிவன். உறைப்பான கொள்கையினர் எனினும், தம் கொள்கைக்குப் புறத்தவரை மதித்து உறவாடி மகிழும் பரந்த நோக்கினர்; 'நல்லது செய்தல் ஆற்றீராயினும் அல்லது செய்தல் ஓம்புமின்' என்னும் சங்கச் செய்யுட்குச் சான்றானவர்; பிறர் யாரையும் நோவச் செய்யாத, ஒருகால் செய்தாரேல், மறித்துத் தம்மையே நொந்துகொள்ளும் மென்மையினர்; அறியாமையால் சிலர் தம்மைக் குறைகூறினும், நீர்கிழிய எய்த வடுப்போலப் பதிவுசெய்து கொள்ளாச் சால்பினர்; எப்பட்டத்தினராயினும், எப்பதவியினராயினும், எப்பொருள் நிலையினராயினும் அவரோடெல்லாம் எளிதில் அணுகிப் பழகவல்ல இயற்கையினர். பண்புக் கொள்கலனான முத்துசிவனார் 15-11-1910-ல் திருநெல்வேலியிற் பிறந்து, 1930-ல் நாகர்கோவிலில் தமக்கு இனியகாதலியை மணந்து மக்கள் எண்மரைப் பெற்று, 1935-ல் அண்ணாமலை நகரில் பீ. ஏ. ஆனர்சு என்னும் தமிழ்ப் பட்டம் எய்தி, திருநெல்வேலி மதுரைத்திரவியம் தாயுமானார் இந்துக் கல்லூரி, காரைக்குடி அழகப்பா கல்லூரிகளில் ஆசிரியத் தொழிலியற்றி, இமயமுதல் இலங்கைவரை தம் நாப்பறைகொண்டு தமிழ் முரசோச்சி, ஐயகோ! 44 வயதுக்குள், 23-9-54 இரவு 9-30 மணிக்கு அழகப்பா கல்லூரி வேலியகத்துத் தம்மில்லத்து மறைந்தார் என்பது உறுதி. அவரொடு நெருங்கிப்பழகி அளவளாவினர்க்கு அவர் இறந்து பட்டதான எண்ணம் இன்னும் தோன்றமாட்டேன் என்கின்றது ஆதலால், பிறந்து மறைந்தார் என்பது உறுதி என இங்குத் தெளிவு செய்யவேண்டியதாயிற்று.

## 2

ஆங்கிலத்தை முன்வைத்துத் தமிழ் வளரவேண்டும் என்பது பேராசிரியர் ஆ. மு. வின் வேட்கை. ஆங்கில நூல்களின் பெருக்கத்

தையும் அமைப்பையும் கவர்ச்சியையும் காணும் போதெல்லாம் அவர்க்குத் தமிழ்நினைவும் தமிழர்மேல் சினமும் உண்டாய்விடும்.

"வெள்ளைக்காரர்களுடைய சாம்ராஜ்ய விரிவுபோன்றே அவர்களுடைய நூல்களும் விரிவடைந்து அலமாரி அலமாரியாக நிறைந்து கிடப்பதைக் காணலாம். தமிழ் நூல்களோ என்றால், ஒளிவிரோதியான பலகைக் கதவைக்கொண்ட பத்தாம் பசலி அலமாரி ஒன்றில், மாற்றாந் தாய் வளர்த்த பிள்ளைகள் போன்று வத்தலும் தொத்தலுமாகக் காட்சியளிப்பதைக் காணலாம்" (அசோகவனம்)

பாரதியார் பாடல்களை உள்ளம் உருகக் கற்றவராதலின், 'பிறநாட்டு நல்லறிஞர் சாத்திரங்கள் தமிழ் மொழியிற் பெயர்த்தல் வேண்டும்' என அடிக்கடி எண்ணுவர். அசலும் நகலும், கவிதை, அசோகவனம், கவிதையும் வாழ்க்கையும் என்ற தலைப்பு உடைய ஆ. மு. வின் நூல்கள் தமிழில் புதுத்துறை வகுத்த நூல்களாகும். 'துறையும் புதிது முறையும் புதிது' என அவரே ஒரு நூலின் முகவுரையில்கூறுகின்றார். இத்துறை திறனாய்வுக்கலை என்று பெயர் பெறும். இலக்கியத்தைப் பல கூறுகளாக ஆராயும் இக்கலை நம் நாட்டில் மெதுவாகவே வளர்கின்றது. புலவர்களைத் தெய்வப் புலவர்களாகப் போற்றிவரும் இந்நாட்டில் திறனாய்வுக்கலை வேகமாக வளராது என்பது வெளிப்படை. மேனாட்டில் கிளைத்துப் பெருகிய இவ்வாய்வுத் துறையை இக்காலத் தமிழ் நாட்டிற்கு ஏற்பக் கையாளுவது எப்படி என்று வழிகாட்டியவர் ஆ. மு. ஆவர்.

தமிழ்க்கன்னி இடையறாது ஆங்கிலத்தோழியோடு உறவாட வேண்டும் என்பது பேராசிரியரின் வாய்மொழி. ஆங்கிலம் கற்றுவரும் தமிழ்ப்புலவர்களைக் காணுங்கால் பெருமகிழ்ச்சி அடைந்து ஊக்குவர். ஒருவன் தமிழ்ப்பற்று இக்காலத்துத் தமிழ்படிக்கும் அளவோடு நின்றுவிடுமாயின் தமிழை வளர்த்தல் அவனால் இயலாது என்றும், தமிழ் வளர்ப்பி பல துறைகளைக் கற்றுகவேண்டும் என்றும் அடிக்கடி சொல்லாடுவார். இப்போது பீ. ஏ. வகுப்பில் மூன்றாம் பகுதித் தமிழ் எடுப்பவர் இரண்டாம்பகுதி நான்குமணி நேரத் தமிழும் எடுத்துப் படிக்கவேண்டும். இதுமிகை என்பது பேராசிரியர் கருத்து. பீ. ஏ. பெருந்தமிழ் வகுப்பு தமிழ் மொழிக்கும் பயன்படவேண்டும்; மாணவர்கட்கும் கவர்ச்சியாக அமைய வேண்டும். இந்நோக்கத்தோடு இப்போது முப்பகுதிகளாக உள்ள பீ. ஏ. அமைப்பை ஒரு பாதி ஆங்கில இலக்கியமும் ஒரு பாதி தமிழ் இலக்கியமும் ஆக இருபகுதிப்படுத்த வேண்டும் என்று சென்னைப் பல்கலைக் கழகத் துணைவேந்தருக்கு ஒரு கடிதம் எழுதினர். இங்ஙனம் இருமொழியும் சமநிலையில் பயின்றவர்களே தமிழாக்கம் செய்ய முடியும் என்று கருதினர்.

தமிழின் குறையை உணர்ந்திருந்த பேராசிரியர் இலக்கியச் செல்வத்துத் தமிழின் நிறையையும் உணர்ந்திருந்தனர். தில்லியில்

நடந்த தமிழ் விழாவுக்குச் சென்றிருந்த சமயம், அவர் இந்தி மொழி யாளர் ஒருவரோடு உரையாட நேர்ந்தது. இந்தி பொதுமொழியாகும் தகுதிபற்றி, இந்தியாளர் சிறப்பித்துப் பேசினர். பிற இந்தியமொழி மொழிகளின் சிறப்பை அவர் அறிந்திலர் என்று நம் பேராசிரியர் மனத்துப்பட்டது. 'பத்து ரூபாய்த்தாள் உடையவன் ஒரு ரூபாய்த் தாள் உடையவனை மதிக்கவேண்டும் என்று எதிர்பார்க்கலாமா? ஒரு ரூபாயாளன் தன்னை மதிக்கவேண்டும் என்றன்றோ பத்துரூபாயாளன் எதிர்பார்ப்பான்? என்று ஒட்டணிபட வினவினர். தமிழ் வளர்ச்சிக்கு இந்தி தரக்கூடிய செல்வம் யாதும் இல்லை. இந்தி வளர்ச்சிக்கு வழங் கத்தகும் சரக்கு தமிழிடம் உண்டு என்று விளக்கிக்கூறினர். இந்திய நாட்டிற்கு ஒரு பொதுமொழி வேண்டும் என்ற அன்பு நோக்கத்தால் தென்னாட்டவர் இந்தியைப் பொது மொழியாக ஏற்றுக்கொண்டுளர். இவ்வடிப்படையை நினைத்துத் தென்னாட்டு மொழிகளின் தொன்மை யையும் பெருமைகளையும் நீங்கள் உணர வேண்டும் என்று இடிப்புரை செய்தனர். "எல்லா இந்திய மொழிகளுமே காலத்துக்கேற்ற வளர்ச்சி இல்லாதன. நம்முள் பெருமைப் பறையடித்துக்கொள்வதில் பொரு ளில்லை. ஆங்கிலத்தைப் பார்த்து நம் மொழிகளை வளர்க்க வேண்டும்' என்று அந்நண்பர்க்கு அறிவுறுத்தினர்.

## 3

தமிழாசிரியர்கள் ஒதுங்கி ஓடாது எல்லா நிகழ்ச்சிகளிலும் கலந்து திகழ வேண்டும் என்பது ஆ. மு. வின் அறிவுரை. கல்லூரி யிலாயினும் உயர்நிலைப்பள்ளி முதலியவற்றிலாயினும் நாடகத்தில், இசையரங்கில், கவியரங்கில், பேரவையில், சமூகப் பணிக்குழுவில், ஆடிடங்களில் பங்கு பற்றித் தமிழுக்குச் செல்வாக்குக்கொணர வேண்டும் என்பர். ஆ. மு. மாணவப் பருவத்தும் ஆசிரிய நிலையிலும் பல நிகழ்ச்சிகளில் உணர்ச்சியோடு கலந்து கொண்டவர். தமிழ் கற்றவர்க்கு டென்னிசு ஆடத்தெரியும் என்று காட்டுவதற்காகவே தாம் அதனைப்பழகி விளையாடுவதாகக் கூறுவர். பிறர் யாரும் தமிழுக்கு ஓர் இழுக்குக் கூறும்படி தமிழாசிரியர்கள் நடையுடை யிருத்தலாகாது என்ற கருத்தால், எப்போதும் தூய நல்லாடை அணிந்து பொலிவர். தமிழின் சிறப்புப்பற்றி அவர் கருதிய மதிப்பீடு கள் வியப்புக்குரியன. தமிழாசிரியராகிய நீங்கள் சிகரெட்டு குடிக்க லாமா? என்று யாரேனும் கேட்டால், கேட்டவரை அருவருத்துப் பார்ப்பர் ஆ. மு. தமிழாசிரியராகிய உங்கட்கும் கோபம் வரலாமா? என்று 'ஒருவர் கேட்டுவிட்டார். நம் பேராசிரியருக்கு அதனல் ஏற்பட்ட சினத்துடிப்பு மறுநாள் வரை நீங்கவில்லை. சிகரெட்டுக் குடிப்பது அவனவன் தனிப்பழக்கம். சினம் வருவது அவனவன் பிறவிக்குணம். இவற்றைத் தமிழோடு தொடர்புபடுத்திப் பேசலாமா? தமிழாசிரியரை உலகம் எவ்வளவு கேவலமாக மதித்துப் பொருந்தாத கேள்வி கேட்கின்றது? பிறதுறை ஆசிரியர்களின் பழக்க வழக்கங் களை அவர்கள் கற்ற துறையோடு சேர்த்துக் கேட்பதுண்டா?

என்றெல்லாம் கொதிப்பர். எனினும் அறியாது கேட்டவர்களை இகழ்ந்துகூறிக் கொதிப்படையச் செய்யார். பண்டிதர் என்று தமிழாசிரியர்கள் அழைக்கப்படுவதைப் பொறார்; உயிர் துடிப்பர். அச்சொல்லுக்கு ஒரு காலத்து நல்ல பொருள் இருந்திருக்கலாம்; இப்போது ஆசிரிய இனத்துள் தாழ்த்தப்பட்ட வகுப்பினர் என்பது அதன்பொருள். என்னைக் கொல்லவேண்டும் என்று விரும்பினல் வேறொன்றும் வேண்டாம்: 'பண்டிட்' என்று நூறுமுறை சொல் லுங்கள். என்னுயிர் தானே போய்விடும்' என்று ஒரு முறை ஆணித் தரமாகப் பேசினர். அச்சொல்லால் அவ்வளவு தூரம் மானம் இழந் திருக்கின்றேன் என்று வெளியிட்டனர்.

## 4

ஆ. மு. வொடு சில்பொழுது உரையாடிய அளவிலேயே அவர் தம் தமிழ்க் கொள்கைகள் வெளிப்பட்டுவிடும். அங்ஙன் கொள்கை தழுவிப் பேசும் கூறுடையவர். தமிழ்ப்பாட நூல்கள் குறித்து அவர் நொந்து ஏங்கிப்பேசும் ஆர்வமொழிகள் யார் மனத்தையும் கொள்ளை கொள்ளாமற் போகா. பாடநூல் என்பது ஆசிரியன் சொல்லிக் கொடுத்து மாணவன் கற்றுக்கொள்ளக்கூடிய கருத்துச் செறிவுடைய தாய் இருத்தல் வேண்டும். சொல் புதிது பொருள் புதிதாக அமைய வேண்டும்; ஆசிரியன் உதவியின்றி மாணவனே படித்துக் கொள்ளக் கூடிய நூல்கள் பாடமாக வந்துவிடுதலால் அன்றோ மாணவர்கள் தமிழ் வகுப்பைப் புறக்கணிக்கின்றனர். தமிழ்ப் பாடங்களைத் தாமே படித்துக்கொள்ளலாமென்று ஒதுக்கஞ் செய்கின்றார். இதனல் மாணக்கர்தம் தமிழ்மொழியறிவு வளராது தேய்கின்றது. புதுச் சரக் கற்ற இந்நூல்களைப் பாடஞ்சொல்லும் ஆசிரியர் மாணக்கர்களை மகிழ் வூட்டவும் அவர்பால் மதிப்புப் பெறவும், பிறகருத்துக்களை வலிந்து கொண்டுவந்து வகுப்பை நயப்படுத்த வேண்டியதாகின்றது என்றெல் லாம் கூறி ஆ. மு. அல்லற்படுவர். நான் மாணவனக இருந்தபோது பாடமாகவந்த சில தமிழ் நூல்களைக் கசந்து படித்தேன். ஆசிரியன் ஆனபின் இருமுறை அவற்றைப் பாடஞ்சொல்லிக் கொடுத்தும் விட்டேன். மீண்டும் அவை பாடநூலாக வரத் தயங்கவில்லை. தமிழ் நாட்டில் பொருள் பொதிந்த புது நூல்கள் அருகி விட்டனவோ? எனக்கவல்வர். டாக்டர் மு. வரதராசனர் எழுதிய 'தமிழ் நெஞ்சம்' என்னும் நூல் பாடமாக அமைந்தபோது, என ஆசிரியத் தொழிலில் இன்றுதான் நல்லதொரு நூலைக் கற்பிக்கும் பேறுபெற்றேன் என்று புகழ்ந்து ஆறுதல் எய்தினர். நல்ல நூல் எனப்படுவது சில அடிகளே னும் கருத்தோட்டம் நிரம்பியதாய், சொற்சுருக்கம் உடையதாய், விளக் கத்துக்கு விரிந்து கொடுப்பதாய் இருத்தல் வேண்டும் என்பர்.

பாடநூல்கள் நிரம்பிய பக்கங்கள் கொண்டனவாதல் வேண்டும் என்பது ஆ. மு. வின் மற்றொரு கருத்து. மாணக்கரின் அறிவுக்குக் கருத்துத் தீனி நிறையக் கொடுக்கவேண்டும் என்பர். பக்கங்களைக்

குறைத்து மிகச்சில நூல்களையே மாணாக்கர்களைப்படிக்கச்செய்வதால், அவர்தம் அறிவுவிளையாட்டிற்கு இடப்பரப்பு போதாது என்பர். பல பெரு நூல்களைத் திறந்து படிக்குமாறு பாடத்திட்டம் அமையின், மாணாக்கர்க்கு அறிவுத் தினவு எழும்; பரந்த பயிற்சியால் மொழிச் செம்மை தானே அமையும் என்பர். சின்னச் சின்ன அடிகளில் இலக்கணம் பயிற்றும் கல்விமுறை அவர்க்குப் பிடிப்பதில்லை. 'நிரம்பிய பெரு நூல்களைப் பயிலவிடுங்கள்; இலக்கணப்பிடிப்பு இயல்பில் அமைந்துவிடும்' என்பது அவர்தம் கல்விக் கோள்.

**5**

பேராசிரியர் ஆ. மு. என்றும் உணர்ச்சிமிக்க இளைஞர். மாணவ பருவத்தினர்க்கு முன்னின்று வகுப்பு நடத்துவது அவருக்கு ஒரு பேரின்பம். தன்னை மறந்து ஆர்வம் எழச் சிரிப்பித்துச் சொல்லும் இயல்பினர்; எல்லா மாணவர்களோடும் தொடர்புகொள்வான் பல வகுப்புக்கள் பாடம் எடுத்துக்கொள்ளும் அன்பினர்; எப்படியேனும் மாணாக்கரிடை அறிவுத்தீயை மூட்டிவிடவேண்டும் என்று நாள் தோறும் துடிப்பவர். 'முன்பெல்லாம் இளைஞர்கள் பிறந்து வளர்ந்தனர்; இப்போது வளர்ந்தே பிறக்கின்றனர்' என்று அடிக்கடி கூறுவர். மாணவரைப் பேசவும் எழுதவும் பாட்டியற்றவும் ஊக்குவர். யாரையும் மட்டம்தட்டி முன்னேற்றம் குறைக்கும் சிறுமையை அவர் வாழ்க்கை கண்டதில்லை. 'குற்றஞ்செய்யும் பருவம் அது. நாம் அப்பருவத்து எவ்வளவு குறும்பு செய்தோம்' என்று எண்ணிப் பொறுமை காட்டு வர். விடுமுறை கேட்கவந்த ஒருமாணவனை 'நீ எந்த ஊரிலிருந்து வருகிறாய் சொல்' என அதிரக்கேட்டார். அவன் தன்னூரைச் சொன்னான். 'அந்த ஊர் மாணவனாயின் இப்படித்தான் வேண்டாது விடு முறை எடுப்பான். எனக்குத்தெரியும். இனி விடுமுறை கேளாதே இன்று தருகிறேன்' என்று கடிந்து கூறினர். அம்மாணவன் சென்ற பின்பு, சிரித்துக்கொண்டு விடுமுறை முதலில் எடுக்கும் போதே இப்படி கண்டிப்புச் செய்தால்தான், எடுத்ததற்கெல்லாம் விடுமுறை கேட்க அஞ்சுவர். அவர்களுக்கு நன்மை என்று கூடஇருந்தவர் களிடம் கூறினர். இங்ஙனம் மனத்துள் அன்புவைத்து மாணாக்கரைக் கடிந்துகொள்வது அவர்தம் தொழிலியல். கட்டுரை யெழுதித் தாம் பெற்ற வருவாயை மாணாக்கர்க்கு உதவியருளினர்; தம்மொடு பழகி யோரிடம் சொல்லி உதவிவாங்கியும் கொடுத்தனர் என்றால் ஆ. மு. வின் மாணவப் பற்றுக்கு வேறு சான்று வேண்டாவே. மாணவ நலத்தில் அக்கறை கொண்ட பேராசிரியர் ஆ. மு. வுக்கு அழகப்பா கல்லூரி மாணாக்கர்கள் நன்றிகாட்ட மறக்கவில்லை. இந் நினைவு மலர் வெளியீட்டுக்கு மூலதனம் அனைத்து மாணவரும் தந்த தனிப்பெருந் தொகையே என்று சொல்லிக்கொள்வது என் நன்றிக்கடனாகும். உதவியருளிய நம் மாணாக்கர்களைப் பாராட்டி வாழ்த்துகின்றேன்.

## 6

முத்துசிவனர் தமிழுக்கு வாய்த்த பிறவிச் சொற்பொழிஞர்; செம்மேனி எம்மான் என்று பாராட்டத்தகும் சிவப்பொலிவினர்; கலகலெனச் சிரிக்கும் இனிய முகத்தினர்; பூசினற்போல வடிவொழுங்குபட்ட மெய்யினர்; ஒரு கூட்டத்தில் இவர் யார் எனச் சுட்டி வினவத்தகும் செம்மாந்த தோற்றத்தினர்; தம் கல்வி மாசற்றதெனக் காட்டுவார்போலத் தூய வெள்ளுடையினர்; நெடுந்தொலைவினரையும் கேட்பிக்கும் கணீரென்ற குரலினர்; மேற்கோட் செய்யுட்களைப் படியாது பாடிக்காட்ட வல்ல இசையறிவினர்; வேண்டியபோது ஆடியும் அசைந்தும் கருத்து விளக்கம் செய்யவல்ல மெய்ப்பாட்டினர்.

மேடைக்கு ஏற்ற பல்வகைப் பண்பியலும் வாய்ந்த ஆ. மு. சொற்பொழிவு ஆற்றிய உயர்நிலைப் பள்ளிகள் பல; கல்லூரிகள் பல; கழகங்கள் பல; அவைகள் பல; பம்பாய், பூனா, கல்கத்தா, தில்லி முதலிய இந்தியப் பிற பகுதிகளிலும் சென்று ஆற்றிய உரைகள் பல. ஓராறு திங்களுள் இலங்கைக்கு மும்முறை அழைக்கப்பட்டு ஆண்டு நிகழ்த்திய பொருளுரைகள் பலப்பல. இயலோடு இசையும் மெய்ப்பாடும் விரவ உரை நிகழ்த்துபவராதலின், ஆ. மு. வின் பேச்சு எளிய அறிவினர்க்கும் விளங்கும். வாழ்க்கை நடப்புக்களைப் பொருத்திப் பொருத்திக் கவிதை விளக்கஞ் செய்பவராதலின், ஆ.மு.வின் உரை அழுத்தமாகவும், இன்சுவைத்தாகவும், சிரிப்பாகவும் இருக்கும். இடையிடையே ஆங்கில மேற்கோள் காட்டி வலியுறுத்தி உரையாற்றும் வழக்கினராதலின், ஆ. மு. வின் சொற்பொழிவு தமிழ்கல்லா ஆங்கிலத் தமிழர்க்கு ஆர்வம் ஊட்டும். நம் பேராசிரியர் சொற்பொழிவுத்துறை பற்றி "மேடைக்கலை" என ஒரு நூல் எழுதியுள்ளனர். ஒரு கலை பற்றி இலக்கணம் கூறும் திறமை வேறு; அவ்விலக்கணப்படி நடந்து காட்டும் திறன் வேறு. இவ்விரு திறப்பாடுகளும் ஒருவரிடத்தே காண்பது அரிது. மேடைக்கலைக்கு இலக்கணம் வகுத்த முத்துசிவனர் அக்கலைக்கு இலக்கியமும் ஆயினர். கருவில் சொற்றிருவுடைய ஆ. மு. வுக்கு அண்ணாமலைப் பல்கலைக் கழகம் ஒரு பயிற்சிக்களம் ஆயிற்று. ஆங்கிலம், தமிழ் என்ற இரு மொழிகளிலும் சொல்லாண்மை பெற்றுத் தேர்வில் நின்று வென்று அண்ணாமலைப் பல்கலைக் கழகப் பேரவைத் தலைவராய்த் திகழ்ந்தார்.

ஆ. மு. தம் சொற்பொழிவை மிகவும் செப்பஞ் செய்துகொண்டு பேசும் இயல்புடையவர். நூற்றுக்கணக்கான பொழிவுகள் ஆற்றியிருந்தும், திடீரென மேடையேறிப் பேசத் தயங்குவர். எங்ஙனம் தொடங்குவது, எச்செய்யுட்களைக் கூறுவது, எம்மேற்கோள்களை இடைமடுப்பது, எங்ஙனம் முடிப்பது எனவாறு வரம்புபடுத்தி முற்றும் எழுதிக்கொள்வர். அவர் எழுதிக்கொள்ளும் தாள்கள் சிறு சிறு துண்டுகளாகவே இருக்கும். சில வரிகளை அடித்தல் கிறுக்கல் செய்தால் பெயர்த்து வேறொரு தாளில் எழுதிக் கோடற்கும், வேண்

டாத பகுதிகளை எடுத்தெறிதற்கும் சிறு துணுக்குகளே இடங் கொடுக்கும் என்பர். செப்பஞ்செய்த பகுதிகளை பன்முறை படித்து மனத்தில் நிறுத்திக்கொண்டு பேசிப்பார்ப்பர். இங்ஙனம் அவர் எழுதிவைத்துப் பேசிய பல பகுதிகளே பின்னர் நூலுருவம் பெற்றன. ஆ. மு. வின் பேச்சுநடையும் எழுத்துநடையும் ஒன்றாகக் காணப் படுவதற்கு இது ஒரு காரணமாகும்.

நண்பர்களோடு அளவளாவுங்காலும், மாணக்கர்க்குப் படிப் பிக்குங்காலும், மக்கட்குச் சொற்பொழியுங்காலும், பேராசிரியரின் ஒரு தனியியல்பு வெளிப்பட்டுவிடும். தம் வாழ்க்கையிலோ, பிறர் வாழ்க்கையிலோ நடந்த நிகழ்ச்சிகளை இயைத்து இயைத்துப்பேசுவர். அவர் தம் இயல்பு அறியார்க்கு அவர் பேச்சு முறை தற்புகழ்ச்சிபடத் தோன்றும். 'கவிதையும் வாழ்க்கையும்' என ஒரு பெருநூல்வரைந்த ஆசிரியன் தான் நுகர்ந்த கவிச்சுவைகளைத் தான் பட்ட வாழ்வு நுகர்ச்சிகளோடு தொடர்பூட்டிப் பேசாதிருக்க ஒல்லுமா? அங்ஙன் பேசக்கூடாது என எதிர்பார்க்கலாமா? தன்னை உளப்படுத்துவது கவிஞன் இயல்பு. எனினும் தன்னிகழ்ச்சிகளைத் தற்புகழ்ச்சியாக உலகம் கருதிக்கொள்ளும் என்பதை ஆ. மு. அறியாதார் அல்லர். என் வாழ்க்கையில் நடந்த "இந்த இரு நிகழ்ச்சிகளையும் வெறும் உதாரணங்களாகவே பாவித்துக்கொள்ளும்படி அன்பர்களை வேண் டிக்கொள்கிறேன்" என்று மேடைக்கலை நூலில் எழுதி யிருக்கின்றார். அவர் பொழிவுகளைக் கேட்டாரும், நூல்களைக் கற்றாரும், 'இவர் இலக்கிய நெறிகளை உலக நடப்புக்களொடு ஒத்திட்டு அளவுகாணும் சுவைஞர்' என்று பாராட்டுவர்.

## 7

ஆ.மு. தம்சொற்பொழிவுகளால் இலங்கைத்தமிழர் நெஞ்சங்களைக் கொள்ளை கொண்டுவிட்டார். ஆறு திங்களுள் மும்முறை சென்று உரைகள் பல ஆற்றினர். இலங்கையில் தமிழுக்கு நல்கும் சிறப்புக் கண்டு இறும்பூது எய்தினர். தமிழாசிரியர்க்கு அந்நாடு செய்யும் பெருமைப்பாடு கண்டு கழிபேருவகை கொண்டனர். தமிழாசிரியரைச் செய்தியாளி வந்து காட்சி காணல், அவரைக் கேள்வி கேட்டு விடை களைப் பதிப்பித்தல், நிழற்படம் எடுத்து நாடறியச் செய்தல், அவர் உரைகளுக்கு முதலிடம் கொடுத்து வெளியிடல் என்றிவையெல்லாம் கண்ட பேராசிரியர் இலங்கையை மனமாரப் பாராட்டினர். தமிழ் பிறந்த தாய்நாட்டில் தமிழிருக்கும் கீழ்நிலையை ஒத்துப்பார்த்து நாணினர்.

கொழும்பு பாரதி இளைஞர் சங்கத்தார் 1953 டிசம்பரில் நடத்திய பாரதி விழாவில் கலந்துகொள்ள நம் பேராசிரியர் முதன் முதலில் இலங்கைக்கு அழைக்கப்பட்டார். அது சமயம் கொழும்பு வெள்ள வத்தை சம்மாங்கோட்டு விநாயகர் கோயிலில் திருவெம்பாவைப் பூசை

வழிபாட்டில் கலந்துகொண்டு உள்ளம் உருக்கும் ஒரு சொற்பொழி வாற்றினார். இப்பொழிவுபற்றி 'ஈழகேசரி' எழுதிய கருத்துரை பின்வருமாறு:

"திருவெம்பாவைப் பூசையின் பின்னர் பேராசிரியர் திரு. முத்துசிவன் சிறிது நேரம் உருக்கமாகப் பேசினர். தமது சொந்த அனுபவத்தை எடுத்துக்காட்டித் திருவாசகம் மக்கள் உள்ளத்தை உருக்கும் விதத்தைத் தெள்ளத் தெளிய விளக்கிக் காட்டினர். அத்துடன் திருவாசகப் பாடல்களை உருக்கத்துடன் பாடிக்காட்டினர். திரு. முத்துசிவன் திருவாசகத்தில் தம் உள்ளத்தையே பறிகொடுத்த பக்தர் என்பது நன்கு புலனாயிற்று........திரு முத்துசிவன் கோயிலிற் பேசியதைக் கேட்ட பல அன்பர்கள் இப்பெரியாரைக்கொண்டு திருவாசகம் என்னும் பொருள்பற்றிப பல சொற்பொழிவுகள் ஒழுங்குசெய்தால் எவ்வளவு நல்லது என வாய்விட்டுச்சொன்னர்கள்."

ஈழகேசரி வரைந்த மதிப்பு மிகையும் குறையும் அன்று; பட்டாங் காகும். உரை முடிந்தவுடன் திருவெம்பாவை பேசுதற்கு அழைத்த செட்டியார் அன்புக் காணிக்கையாக ஒருதொகை ஆ. மு. வுக்கு நல் கினர். முத்துசிவனர் எட்டுக் குழந்தைக்குத் தந்தை. குடும்பத்தைக் காக்கும் நினைவு எப்போதும் உடையவர். மாதச் சம்பளம் வருமுன்னே வரவு செலவுத் திட்டம் கணிப்பவர். பொருட் செலவுபற்றி ஏதேனும் பேச்சுவந்தால் நான் பல பிள்ளைகுட்டிக்காரன் என்று வெளிப்படை யாகச்சொல்லுபவர். செட்டியார் இலங்கைத்தாள் ரூபாயாகக்கொடுத்த வுடன் அதனைப் பெருது ஆ. மு. ஒன்று வேண்டிக்கொண்டனர். 'இந்த ரூபாய் இந்தியாவில் கிடைக்கும்படி நீங்கள் அருளவேண்டும். இந்தியத்தாளாக அங்கு கிடைத்தால் என் மக்களின் படிப்புச் செல வுக்குப் பயன்படும்' என்று தம் கருத்தை வெள்ளையாகக் கூறினர். ஆ. மு. வின் திருவெம்பாவை உரையில் உருகியிருந்த செட்டியார் அத்தொகையைச் சென்னையிற் பெறுமாறு அருளினர். இந்நிகழ்ச்சி பேராசிரியரின் குடும்பப் பற்றையும் கரவில் நெஞ்சத்தையும் காட்டி நிற்கின்றன.

1954 - ஏப்பிரல், மே திங்களில் இரண்டாவது மூன்ருவது முறை யும் இலங்கைக்குச் சென்று சிலப்பதிகாரம், திருக்குறள் பற்றி உரை யாற்றினர். தமிழ் மறைக் கழகத்தின் தலைவரான பேராசிரியர் கா. பொ. இரத்தினம் அவர்கள் இலங்கையில் நம் ஆ. மு. வுக்கு நெருங்கிய நண்பர். அவர் வேண்டுகோட்கு இணங்கித் தமிழ்மறைக் கழகத்தின் இரண்டாவது திருக்குறள் மாநாட்டிற் கலந்துகொண் டனர். பேராசிரியர் ஆ. மு. வின் இலங்கைச் செலவு பற்றிய குறிப் புக்களை எனக்கு உதவிய கா. பொ. இ. அவர்களுக்குப் பெரிதும் நன்றியுடையேன். ஆ. மு. வின் பல கொள்கைகளை அவர் வாயி லாகவே கேட்டு 'சுதந்திரன்' என்னும் கொழும்புச் செய்தியிதழ் 20 — 12 — 53 நாட்பதிப்பில் வெளியிட்டிருக்கக் காண்கின்ருேம்.

"தாய்மொழி தனியாட்சி செலுத்தும் போதுதான் மக்களின் கலாச்சாரம் வளர, கலை ஓங்க முடியும்; ஆனால் இந்தப் பிரிவினை இந்திய மக்களின் ஒற்றுமையைப் பாதியாதபடி அறிஞர்கள் பார்த்துக் கொள்ள வேண்டும்" என்பது ஆ. மு. புலப்படுத்திய கொள்கைகளுள் ஒன்று.

## 8

ஆ. மு. எழுதிய நூல்கள் பல. அசோகவனம், அசலும் நகலும், கவிதையும் வாழ்க்கையும், மேடைக் கலை, மின்னல் கீற்று, கவிதை, அமரகவி பாரதி, மதம் வேண்டுமா? நடராஜ தத்துவம் என்பவை அச்சாகி வெளிவந்துள்ளன. கலிங்கத்துப்பரணி (விளக்கமும் விமர்சனமும்) நந்திக்கலம்பகம் (விளக்கமும் விமர்சனமும்) காவ்யரசனை என்பன இன்னும் பதிப்பாகா நூல்களாகும். இவ்வுரைநடை நூல்கள் ஒரு புறம் இருப்ப, காரைக்குடிக் கம்பன் கழகத்து ஆண்டு தோறும் கவியரங்கேறி அவர் பாடிய கவிகள் பல. வானொலியிலும் பல கவியரங்குகளிலும் கலந்து கொண்டு பாடிய கவிதைகள் பல. ஆ. மு. வின் நூல்களையும் கவிகளையும்பற்றி விரித்துரைக்க இது இடமன்று; எனினும் சில பண்பினை ஈண்டுச்சுட்ட விரும்புவல். ஆ. மு. கவிதைக் கடலாடிக் கற்பனை வானத்துப் பறக்கும் உணர்ச்சிப் பிறப்பினர். அவர்தம் உரையாடலிலும் சொற்பொழிவிலும் எழுத்திலும் கற்பனைத் திறம் பொலியக் காணலாம். உவமைப்படுத்து உருவகமாக்கித்தம் கருத்துக்களை வெளியிடுவர். கவிதைக் கலையில் ஊறியவராதலின், எப்பொருளையும் இயல்புநடையிற் கூறாது இலக்கியநடையிற் கூறுவர். அங்ஙனம் பிறரும் பேசக் கேட்பரேல் பாராட்டி அகமகிழ்வர். கருத்திலும் கருத்தை வெளியிடும் முறைக்குப் பெருமதிப்பளிப்பர். இயல்பாக உரையாடாது எழுவாய் பயனிலை செயப்படு பொருளோடு முழுமுழுச் சொல்லாக யாரும் பேசினால், பாடப்புத்தகம் வாய்திறந்தாற் போல என்று நகைப்பர். நீண்ட தொடர்களாக யாரும் பேசினால், தென்குமரி முதல் திருவேங்கடம் வரை என்று கேலி செய்வர். மடங்காது விறைப்பாகப் பேசினால், கோடி வேட்டிபோல என்று நகுவர். மாறிய நிலைக்கு ஏற்ப மாறாத குணத்தவரை, கோயிற் பூசாரி அரசனுக்கும் விபூதிதானே அள்ளிக்கொடுப்பான் என்று பழக்கவடிமை சுட்டுவர். பாட்டின் ஓசை இன்பத்தில் திளைப்பவர்களை 'அசுணமாக் கூட்டத்தார்' என்றும், நிலையான பாட்டுக்களை 'மார்க்கண்டரகங்கள்' என்றும் உருவகிப்பர். இறக்கம் மிக்கு சீனி குறைவான காப்பியை 'நஞ்சு' என்றும் சீனி மிகுந்த காப்பிக்குடியரை வாழ்க்கையைத் துய்க்கத் தெரிந்தவர் என்றும் சொல்லுவர்.

உவமை, உருவகம், கற்பனை பொதுள வரும் ஆ. மு. வின் பேச்சு யாரையும் கவர்ந்துவிடும். மார்பு வலிக்கின்றது என்றும், இவ்வலி தன்னை ஒருநாள் கொன்றுவிடும் என்றும் அடிக்கடி கூறிக் கொள்வர்.

"அடப்பண்ணி வைத்தார் அடிசிலை உண்டார்
மடக்கொடி யாரொடு மந்தணங் கொண்டார்
இடப்பக்க மேயிறை நொந்தது என்றார்
கிடக்கப் படுத்தார் கிடந்தொழிந் தாரே"

என்ற திருமந்திரம் தம் வாழ்வில் ஒருநாள் மெய்யாகும்என்று விரிப்பர். உடனிருந்தோர் இதனையும் கற்பனைப் பேச்சாக எண்ணிய துண்டு. சொற்பொழிவுக்குச் செல்லுமிடந்தோறும் மருந்துகளும் உடன் கொண்டு செல்வர். சிறு குழந்தைகள் வீடு கட்டிச் சமைக்கும் விளை யாட்டுச் சமையலில் நெருப்பு மட்டும் உண்மையானாற்போல, ஆ. மு. வின் கற்பனைப் பேச்சுக்களுள் நெஞ்சு வலிமட்டும் முழு மெய்யானது என்று அவர் இறப்பால் அறியலானோம். மார்பு வலியினர் மிதிவண்டி ஊரக்கூடாது என்றும், சிகரெட்டு ஊதக்கூடாது என்றும் மருத்து வர்கள் சொல்லியதை ஆ. மு. கடைப்பிடிக்கவில்லை. 'செய்தக்க வல்ல செயக்கெடும்' என்ற வள்ளுவம் யாரை விட்டது? நெஞ்சுவலி தன்னைக்கொல்லும், கொல்லும் என நாள்தோறும் கூறிய ஆ. மு. 22-9-54 இரவு 12 மணி முதல் 23-9-54 இரவு 9-30 மணிகாறும் மார்பு வலிப்பட்டும் சாவு வரும் என ஒரு சொல்லும் சொல்லவில்லை என்றால், இதுதான் மாயையின் விளையாட்டோ?

பேராசிரியர்தம் உரைநடை ஒரு தனிப் போக்கு உடையது. ஆங்கிலம் பிறமொழிச் சொற்களைத் தழுவிக்கொண்டு வளர்ந்தது போலத் தமிழின் வளர்ச்சிக்கும் பிறமொழிக் கலப்பு வேண்டும் என்று மனமாரக் கருதியவர். அவர் பேச்சு எழுத்து நடைகள் கலப்புத் தமிழின என்றாலும், கருத்தைப் பதிக்கவல்ல அழுத்த நடைகளாகும். 'இன்று வைதீகக் கோட்டைகள் பல தகர்ந்திருக் கின்றன. மாமூல் தடங்கள் பல மறைந்திருக்கின்றன. பொய்ம் மாயச்சூழல் பல புகைந்திருக்கின்றன; என்று அமரகவி பாரதி நூலில் எழுதிச் செல்கின்றார். ஆ. மு. இயல்பிலே கவிதொடுக்கும் ஆற்றல் வாய்ந்தவர். இசையறிவுடையராதலின், ஓசையில் நின்றே பாடல் இயற்றும் வன்மை பெற்றவர். இதனால் அவர் உரை நடைத் தொடர்கள்கூட சொற்சுருக்கமும் எதுகை மோனையும் கவிச்சுவையும் திகழக்காணலாம். சில வருமாறு:

'உள்ள அழகை உடையழகு திருத்துகின்றது'
'தாராக் கோழியினிடம் தங்க முட்டையை எதிர்பார்ப்பது'
'ஒரு முறை உள்ளதை உள்ளபடி கூறுவது'
'மற்றொன்று உள்ளதை உணர்ந்தபடி கூறுவது'
'புழு நிலையிலிருந்து புத்த நிலை வரை'
'கொசுவைக் கொல்லக் கோதண்டமா வேண்டும்'




கல்லூரிப் பேரவைக்குழு 1949 - 50

New Studio, Karaikudi.

பேராசிரியர் ஆ. மு. வும் முதல்வர் திரு. சூரியநாராயணுவும்

உரைநடைப் பகுதிகள் பிறர் எடுத்து வழங்கும் தகுதியில் திட்ப நுட்ப மாக அமைய வேண்டும் என்பது ஆ. மு. வின் கொள்கை.

## 9

அழகப்பா கல்லூரி 1947ம் ஆண்டு நிறுவப்பெற்றது. தொடக்க முதலே கல்லூரியின் தமிழ்ப் பேராசிரியர் ஆனார் நம் ஆ. மு. வள்ளல் அழகப்பாவின் தூய பெருங்கொடை அவரை மருளச்செய்து விட்டது. சங்கத்தமிழ் வள்ளல்கள் அளவிறந்தகொடை செய்தார்கள் என்ற வரலாற்றை அழகப்பாவின் கொடையால் நம்பவேண்டியதிருக் கின்றது என்பர். அவர்தம் கல்லூரிப்பற்று குடும்பப் பற்றுக்கு நிகரானது. ஒருதமிழ்ப் பெருமகன் கல்வித் திருப்பணிக்குத் தாம் ஈட்டிய, ஈட்டும் செல்வமெல்லாம் வாரி வாரி வழங்கும்போது, நாம் எவ்வளவு அக்கரையாகப் பணிசெய்து கடனாற்ற வேண்டும் என்று ஈடுபாட்டோடு அடிக்கடி சொல்வர். பூதங்கள் ஓரிரவிற் கட்டினாற் போலும் கல்லூரிக் கட்டிடப் பெருக்கங்களையும் பலதுறை வளர்ச்சி களையும் தமக்கேயுரிய கற்பனை முறையிற் புகழ்வர். கல்லூரியையும் வள்ளல் அழகப்பாவின் வரையா வண்மையும் பேச நேரும் போதெல் லாம் ஆ. மு. வின் இயல்பான உணர்ச்சி பொங்கிப் பெருகி கவிதைச் சொற்களாக வந்துவிழும்.

டாக்டர் அழகப்ப செட்டியார் அவர்கள் கல்லூரி நிறுவிய பின் ஐரோப்பிய நாடுகள் பலவற்றையும் சுற்றிப்பார்த்துத் திரும்பிவந்த ஞான்று, 12-9-1951-ல் கல்லூரி மாணவர்களும் ஆசிரியர்களும் ஒரு பாராட்டிதழ் நல்கினர். முதற்கண் ஆங்கிலவிதழ் படிக்கப்பட்டது. அதன் மொழிபெயர்ப்பான தமிழிதழைப் பேராசிரியர் ஆ. மு. படித் துக் கொடுத்தனர். சில தமிழ்ப்பகுதிகள் வருமாறு :-

"1952-ல் இக்கல்லூரியைக் காணவரும் ஒருவன் கல்லூரியின் எல்லையை அணுக அணுக, வலப்பக்கத்தில் விண்ணடர்ந்து வியனுறத் தோன்றும் மூன்று மாணவ இல்லங்களைக் காண்பான். இடப் பக்கத்தில் மாணவர்களின் வளர்ச்சியிலே கண்ணும் கருத்துங்கொண்டு விளங்கும் ஆசிரியர்களின் இல்ல வரிசைகளைக் காண்பான். இன்னமும் நெருங்க நெருங்க வனப்புறப் படர்ந்து கிடக்கும் விளையாட்டுத் திடல் களைக் காண்பான். அப்பால் ஒருசார் வண்ணமுறத் தோன்றும் பலதகர் விளையாட்டு மன்றம் காண்பான். மற்றொருசார் எண்ணரிய நூல்களைக்கொண்டு மிளிரும் நூல் நிலையம் காண்பான். அதனையடுத்து அணிபெறத் தோன்றும் பிரசங்க மன்றம் காண்பான். அப்பால் இரண்டையும் இணைத்து நிற்கும் எழிலார்ந்த நிர்வாக மண்டபம் காண்பான். இன்னமும் செல்லச் செல்ல இக்கட்டிடங்களை மையமாகக் கொண்டு இருமருங்கும் வளைந்து செல்லும் வீதிகளிலே இடதுபுறம் திரும்பின் வளமான தொழிற் கல்விக்குத் தகுதியாக்கும் விஞ்ஞானக் கலை முழங்கும் நான்கு மண்டபங்களைக் காண்பான். வலதுபுறம்

திரும்பின் பண்புக்கலைகள் முழங்கும் பிரமாண்டமான கல்மண்டபம் காண்பான்.

"தாங்கள் ஐரோப்பிய நாடுகளைக் கண்டபின் நவநவமான இலட்சியங்களை உளங்கொண்டே வந்திருக்கிறீர்கள். கற்பனை வளமும் செயலாற்றலும் நிறைந்த தாங்கள் தங்களுடைய தங்கக் கனவுகளை யெல்லாம் தகவுடைய நனவாக்குவீர்கள். இந்தக் கல்லூரியின் நன்மையிலும் வளர்ச்சியிலும் தாங்கள் கொண்டுள்ள ஆர்வத்தின் அளவு எங்களுக்கும் உண்டு........நம்முடைய நாட்டிற்கு இவ்வாறு தன்னலமற்ற முறையில் பணிசெய்வதற்குரிய வாய்ப்பையும் வளத்தையும் வளர்ந்து பெருகும் வாழ்நாளையும் தங்களுக்கு மேலும் மேலும் அருளிக்கொண்டேயிருக்க ஆண்டவனை வேண்டுகிறோம்."

இக்கவர்ச்சி நடைப் பகுதிகள் பொலிந்த இன்தமிழ்ப் பாராட்டிதழைப் பெருமிதத்தோடும் கனீர்க்குரலோடும் பாடல்போல் ஆ. மு. படிக்கக்கேட்ட அழகப்ப வள்ளல் பெருமகிழ்வெய்தி, 'எது மூலம் எது மொழிபெயர்ப்பு' என அறியேன் என்று ஆ. மு. வின் தமிழ் நடையைக் கூட்டத்தே பாராட்டினர். முதலாளி பாராட்டக்கேட்ட தொழிலாளிபோல, வள்ளல் பாராட்டச் செவியுற்ற புலவன் மகிழ்ச்சிக்கு ஓரளவில்லை.

## 10

டாக்டர் அழகப்ப செட்டியார் அவர்கள் சப்பான் சென்றிருந்த அமயம் பேராசிரியரின் மறைவு நிகழ்ந்தது. இத்துயர்ச் செய்தியைத் தன்னூரின் முதற்செய்தியாக கேட்ட கல்லூரித் தோன்றல் திடுக்கிட்டு இரக்கம் எய்திக் கல்லூரி முதல்வர் தம்பி அவர்கட்கு ஒரு தந்தி விடுத்தனர். அதன் பொருள் வருமாறு:

"பேராசிரியர் முத்துசிவனிடம் என்றைக்குமா விடைபெற்றுவந்தேன்! அறிவொளியும் மலர்ச்சியும் நம் எல்லையகத்திலிருந்து போய்விட்டது. எனக்குப் பேரதிர்ச்சி. இழந்தோர்க்கு என் உள்ளார்ந்த இரங்கலைப் புலப்படுத்திக்கொள்ளுங்கள்"

கூலியாசானாக இன்றி அழகப்ப வள்ளலின் கொடையை உணர்ந்து கல்லூரி வளர்ச்சியின் காதலாசிரியனான ஆ. மு. வின் குடும்ப நிலையை வள்ளலும் கல்லூரி ஆட்சிக் குழுவும் மறக்கவில்லை. இங்குக் கல்லூரி வகுப்புக்களிற் பயின்று கொண்டிருக்கும் பேராசிரியர் மக்கள் இருவரின் படிப்பு முழுச் செலவை உண்டி, உறையுள், சம்பளம் உட்படக் கல்லூரி தந்தை நிலையில் நின்று ஏற்றுக்கொண்டது. இவ்வருட்கொடை ஆசிரிய உலகைப் பெருமைப்படுத்திச்செய்த அருங் கொடையாகும்; ஏனைய கல்வி நிலையங்கட்கு ஓர் எடுத்துக்காட்டாகும். இக்குடும்பக் கொடையால், வள்ளல்பால் கல்லூரி ஆசிரியர்களுக்கு

ஏற்பட்டிருக்கும் நன்றிப் பேருணர்வை அவர்தம் சார்பாளியாக ஈண்டு புலப்படுத்திக்கொள்ளல் என் கடனாகும்.

கல்வியறநிலையச் செயலாளர் உயர்திரு க. வீ. அழ. ராம. இராமநாதன் செட்டியார் அவர்கள் ஆசிரியர்களோடு நெருங்கிப் பழகும் எளிமையினர். ஐயா அவர்கள் ஆ. மு. வின் சொல்லாற்றலை யும் உள்ளப் பண்பையும் நன்கு அறிந்தவர்கள் ஆதலால் 'தெய்வபக் தியும் சேவை யுணர்ச்சியும் நிரம்பியிருந்தமையால் அவருடைய (ஆ. மு. வின்) பேச்சிலும் எழுத்திலும் ஒரு கவர்ச்சி இயல்பாகவே இருந்தது' என்று பாராட்டுரை வழங்கியுள்ளனர். பேராசிரியர் முத்துசிவனார் வாழ்வாங்கு வாழ்ந்த பெருமகன் என்று உலகம் அறிந்து கொள்ளுதற்கு ஐயா அவர்களின் பாராட்டுரையே போதும்.

## 11

அழகப்பா கல்லூரி முதல்வராக இப்போது வீற்றிருக்கும் உயர் திரு ஏ. என். தம்பி அவர்கள் இயல்பாகவே தமிழ்ப் பற்றுக் கொண் டவர்; கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளையின் பல்லாண்டு நண்பர்; கவிமணியால் பாராட்டுரைநல்கப்பெற்ற பெருமையாளர்; தாம் கல்வித் துறைத்தலைவராய் இருந்தபோது திருவிதாங்கூர் நாட்டில் பல தமிழ்ப் பள்ளிகள் தோற்றியவர்; மலையாளத்தாய் மொழியினராயினும், தமிழை யும் தாய் மொழியாகப்போற்றி நல்ல தமிழ் பேசவல்ல பெருமகன்; தமிழ் பழம்பெருமையை எய்த வேண்டும் என்னும் அவாவினர். இத் தகைய தமிழ் நலங்கள் வாய்ந்த கல்லூரி முதல்வர் தம்பி அவர்கள் தமிழ்ப் பேராசிரியரோடு நெருங்கிப் பழகியதில் வியப்பில்லை. மேலும் முத்துசிவனார் மேலவரொடு இணக்கமாகவும் பணிவாகவும் நம்பிக்கை யாகவும் நடந்துகொள்ளும் பண்பினர். ஆதலின், கல்லூரி முதல் வர்க்கு நம் பேராசிரியர்பால் தனி யீடுபாடு இருந்தது. 'நான் தமிழில் பேசினாலும் முத்துசிவன் என்னோடு ஆங்கிலத்திற்றான் பேசுவர். அதனால் அவரிடமிருந்து நான் நல்ல தமிழ் கற்றுக்கொள்ள முடிய வில்லை' என்று தம்பி அவர்கள் ஒரு கூட்டத்துச் சொல்லியதுண்டு.

முத்துசிவனார் இறந்த அன்று கல்லூரி முதல்வர் சென்னைக்குச் சென்றிருந்தனர். மறைவுச் செய்தி கேட்டு, தாம் இதுவரை இருந்த எத்துணையோ கல்வி நிலையங்களில் இனையதொரு அல்லற்செய்தி இது காறும் நிகழ்ந்ததில்லையே; கேளாதது கேட்டேனே என்று கவன் றனர். தம் முதுமைத் தளர்ச்சியையும் பாராது, உடனிருந்த உயர் திரு சா. கணேசன் அவர்களோடு வானூர்தி ஏறிவந்து நெஞ்சுக்கு நெடுந்தாரை கண்பொழிய, அழுகைப்பூசல் பெருகிட, செக்கச் சிவந்த முத்துசிவனாரின் பொன்மேனி பிணமாய்க் கறுத்துக் கிடந்ததைக் காணப்பொறாது கண்டனர். நெடுந்தொலையிலிருந்து ஓடோடிவந்த இவ்விரு பெருமக்களின் வரவு,

'செல்வக்காலை நிற்பினும்
அல்லற்காலை நில்லலன் மன்னே'

என்னும் பழைய நிகழ்ச்சியை மெய்ப்பிக்கின்றது.

கல்லூரியின் இரண்டாம் பருவத் தொடக்க நாள் 11-10-54 பேராசிரியரின் மறைவு நினைவாக விடுமுறையாயிற்று. இவ் விடுமுறைக் காரணத்தைக் கூற முதல்வருக்கு வாயெழவில்லை. நெஞ்சத்துயர் அவ்வளவு பெருகியிருந்தது. மறுநாள் கவிமணிக்கும் பேராசிரியர்க்கும் இரங்கற் கூட்டம் நடைபெற்றது. இருவர்க்கும் நட்பினராய தம்பி அவர்கள் அக்கூட்டத்து மொழிந்ததாவது:-

'கவிமணி நாட்டுக்கும் மொழிக்கும் பெருந்தொண்டு செய்தவர். தொண்டாற்றிப் பழுத்த கிழவர். பிறந்தவர் ஒருநாள் இறப்பது இயற்கை. ஆதலின் பயன்செய்து வாழ்ந்து முதிர்ந்த கவிமணி மறைவுக்கு ஆறுதல் அடைய இடனுண்டு. முத்துசிவனோ பெருந்தொண்டு செய்தற்கேற்ற நல்லிளமைப் பருவத்தினர். ஆக்கம் பல செய்தற் கேற்ற அறிவுப் பக்குவம் எய்தியவர். வெண்ணெய் உருகிப் பெருகிய நிலையில் தாழி உடைந்ததுபோல ஆயிற்று. காலம் அல்லாக்காலத்து இறக்கத்தகா ஒருவர் இறந்தது ஆறுதலுக்குரிய நிகழ்ச்சியன்று. தமிழ்நாட்டிற்குப் பெரும் இழப்பாகும். மேலும் பல அலுவல்கள் நிறைந்த எனக்குத் துணைபுரிந்து வலக்கையாயினர். நானும் ஒரு நல்ல துணையை இழந்தேன். தாம் சொற்பொழியச் சென்ற இடமெல்லாம் கல்லூரியின் பெருமையையும் சேர்த்துப் பரப்பிவந்த பேராசிரியர் முத்துசிவனார்க்கு ஏற்ற நினைவுச் சின்னங்கள் ஆக்கவேண்டும்' என்று கழிபேரிரக்கமும் கண்கலக்கமும் செய்ந்நன்றியுணர்வும் புலப்படக் கல்லூரி முதல்வர் சொல்லாற்றினர். ஆ. மு. மறைந்த இருபது நாட்குப் பின்னர்க்கூட, ஒரு வேலையின் நிமித்தம் முத்துசிவத்தைக் கூப்பிடு என்று மெய்மறந்து வாயெடுத்த தம்பி அவர்கள் 'முத்து' என்று வாய்விட்டுச்சொல்லி நிறுத்திக்கொண்டனர் என்றால், முத்துசிவனார் இறந்ததான ஓரெண்ணம் கல்லூரி முதல்வர்க்குத் தோன்றவில்லை என்பதுதானே கருத்து.

வள்ளல்பால் பெருமதிப்பும் கல்லூரிமேற் காதலும் தொழிலிற் செம்மையும் மேலவர்க்குப் பெருநம்பிக்கையும் உடைய பேராசிரியர் முத்துசிவனார்க்குத் தம்மால் இயன்ற சில நினைவுச் சிறப்புகளைச்செய்ய வேண்டும் என்று கல்லூரி முதல்வர் எண்ணினர். கல்லூரியின் பல கழகச் செயலாளர்களைக் கூட்டி ஒரு குழு அமைத்தனர். முத்துசிவனார் நினைவு மலர் ஒன்று வெளியிட வேண்டும் என்பது அவர்தம் முதல் எண்ணம். அவர்தம் தூய எண்ணப்படி, சிறந்தவர்களின் பாராட்டுரைகளையும், தமிழ்நாட்டுப் பெரும் புலவர்களின் கட்டுரைகளையும், ஆ. மு. வின் அரிய நூற்பகுதி பாடற் பகுதிகளையும் பெற்று இம்மலர் விரிகின்றது.

## 12

முத்துசிவனாரின் சொந்த ஊர் காரைக்குடி என்னுமாறு, பதியெழுவறியாப்பற்றும், பலர்தம் உறவும், பிணைந்த நட்பும் இந்நகர்க்கண் உடையவராய் இருந்தார். அழகப்பா கல்லூரி தோன்றிப் பேராசிரியர் ஆவதற்கு முன்னே காரைக்குடிக் கம்பன் கழகத் தொடர்பு அவர்க்கு இருந்தது. உயர்திரு. சா. கணேசன் அவர்களின் பெருநட்பு வாய்க்கப்பெற்றிருந்தார். தம் வாழ்க்கையை முன்னேற்றிய ஓர் துணைவர் என சா. க. அவர்கள்பால் என்றும் நன்றித் திட்பம் உடையவராகவும் இருந்தார். கம்பன் கழகத் தொடர்பாலும் காரைக்குடி வாழ்க்கையாலும் திருவாளர்கள் மெ. நா. சித; அபிசீனியா நா; ராய. சொ; சொ. முரு; கி. நா; காந்தி மெ; தி. நா; மரு. சு. மா; ரெ. முத்துக்கணேசன் என்ற பல அன்பர்களின் கேண்மையும் அவர்க்கு ஏற்பட்டது. முன்னெல்லாம் காரைக்குடிக்குச் சொற்பொழிவுக்கென வந்து போய்க்கொண்டிருந்த அவர், கல்லூரிப் பேராசிரியரான பின்றை காரைக்குடியிலிருந்து சொற்பொழிவுக்குப் போய்வரும்படியான இடமாற்றம் ஏற்பட்டது. அழகப்பா கல்லூரி தன் பெருமையோடு காரைக்குடிப் பெருமையையும் சேர்த்துப் பரப்புமாப்போல பேராசிரியர் ஆ. மு. அவ்விரண்டின் பெருமையையும் தாம் செல்லுமிடமெல்லாம் இணைத்துப்பரப்பினார். காரைக்குடி நகரின், நகர்ப்புற வூர்களின் அறிவுத்தரம் ஆ. மு. வின் பல சொற்பொழிவுகளால் சில மடங்கு உயர்ந்துள்ளது என்பது மிகையன்று. சிறிதோ பெரிதோ கல்வியறிவுடையவர்கள் ஆ. மு. வின் பொழிவுகளைச் செவிமடுத்து மடுத்து ஓரளவு கேள்வியறிவு உயரப்பெற்றார்கள் என்பதும் மிகைமொழியன்று.

ஆண்டுதோறும் நடைபெறும் கம்பன் திருநாளில் சொற்பொழிவு, பட்டிமண்டபம், கவியரங்கம் எனப் பல நிகழ்ச்சிகளிலும் கலந்து பணியாற்றுவர் ஆ. மு. இரண்டாண்டுகட்கு முன்னர் 'கம்ப தத்துவம்' என அரிய புதியதோர் உரையாற்றினர். இப்பொருளை விரிவுபடுத்திப் பெருநூலாக்க வேண்டும் என்பது பலர் தம் வேண்டுகோளும் அவர்தம் விருப்பமும் ஆகும். கம்பர் தம் பெருங்காப்பியத்தைப் பல கோணத்து நின்று ஆராய்ந்து ஒரு பெரிய திறனாய்வு வரைய வேண்டும் என்பது அவர்தம் விழைவு. காரைக்குடி இந்து மதாபிமான சங்கம், செட்டியார் நலஉரிமைச் சங்கம், கதிரேசன் கழகம் முதலான கழகங்களில் தொடர்பு கொண்டு பணியாற்றினர். முத்துசிவனாரை அறியாத காரைக்குடி வாழ்நர் யாரும் இருப்பரேல் அச்சிலர் படிப்பு மணம் யாதும் அறியாதவர் என்பது வெள்ளிடை. இங்ஙனம் தம் தமிழ்ச் செல்வத்தைப் பொழிந்து காரைக்குடியின் அறிவு வளத்தைப் பெருக்கிய முத்துசிவனார் மறைந்த அன்று ஊர்ப் பெருமக்கள் திரளாகவந்து இறுதிப் பணிவு காட்டினர். ஊரறிய உழைத்த புலவன் யாரும் அறியாவகை வீந்தது கேட்டு நினைந்து நினைந்து புலம்பினர். தம் நண்பனைக் காணாது நண்பன் இருந்த

உடலைக்கண்ட சா. க. உள்ளந்தான் நின்று உச்சியளவும் நெஞ்சாய் உருகி, உடம்பெல்லாம் கண்ணாய் அழுதனர். ஊரவரெல்லாம் உறவினராய் ஈமச்சடங்கிற் கலந்து நன்றிகாட்டினர். தொண்டின் புகழையும் அன்பின் உருக்கத்தையும் அன்று உருவ வடிவிற் கண்டோம். அருள் நெறித் திருக்கூட்டம் தோன்றிய பின்னர், அதன் இன்றியமையாப் பரப்பாளருள் ஆ. மு. வும் ஒருவர். 'மதம் வேண்டுமா?' 'நடராஜ தத்துவம்' என்ற பெயரால் பேராசிரியர் எழுதிய நூல்கள் இத்திருக்கூட்டத்தின் சார்பில் வெளியிடப்பட்டன. இத்தொண்டுகளின் செய்ந்நன்றியாக, குன்றக்குடி மடம் ஆ. மு. இறந்த ஞான்று, பட்டுச்சாத்தி மலரணிந்து பெருமை செய்தது.

## 13

கம்பரும், பாரதியாரும் பேராசிரியர் ஆ. மு. வின் இலக்கியத் தெய்வங்கள். கம்பரின் பரந்த உலகியற் புலமையிலும் பாரதியாரின் ஞான நோக்கிலும் பேராசிரியர் தம் நெஞ்சைப் பித்தாக்கிக் கொண்டவர்.

> 'அலங்கலிற் றோன்றும் பொய்ம்மை யரவெனப் பூதம்ஐந்தும்
> விலங்கிய விகாரப் பாட்டின் வேறுபாடுற்ற வீக்கம்'
>
> 'சாணினும் உளன் ஓர் தன்மை அணுவினைச் சதகூறிட்ட
> கோணினும் உளன்'

எனவரும் கம்பர் பகுதிகளை இற்றைய விஞ்ஞான வளர்ச்சியொடு பொருத்திக்காட்டி அணுவிளக்கம் செய்யும் புத்தறிவினர். தம் வாழ்க்கைப் பெரும்பகுதியில் தமிழ் இலக்கியங்களை ஆய்வுக் கண்கொண்டு திறனூல்கள் பல எழுதிய ஆசிரியர், வாழ்க்கைப் பிற்பகுதியில் அவ்விலக்கியங்களை விஞ்ஞான, சமயக் கண்களால் ஆராய்ந்து புத்தம் புதிய கருத்துக்கள் தோன்றச் சொற்பொழிந்தனர். கட்டுரைகள் வரைந்தனர். இத்துறையை அறிந்து வளர்க்க, விஞ்ஞான சமய நூல்கள் பலவற்றை ஆங்கிலத்துப் படித்தனர்.

பாரதியார் என்றால் ஆ. மு. வின் உள்ளப் பூரிப்புக்கு ஓரெல்லையில்லை; உணர்ச்சிக் கடலுக்கோர் கரையில்லை. "தேச விடுதலை ஒன்றை உணர்த்தவே அவர் தோன்றவில்லை. வாழும் வகையை உணர்த்தவே அவர் தோன்றினர்." என்று உண்மை விளம்பி பாரதி கொள்கை பலவற்றைக் கடைப்பிடித் தொழுகினர்.

> "காக்கை குருவி எங்கள் ஜாதி—நீள்
> கடலும் மலையும் எங்கள் கூட்டம்."

என்ற அன்புலகப் பாட்டில் அவர்க்கு நிரம்பிய பற்றுண்டு. பாரதியார் கவிகளைப் பயின்று தோய்ந்து இசைத்துப் பல்காலும் உரை

யாற்றிய ஒருவர்தம் வாழ்க்கை தடத்தோடியாக இருக்கமுடியாது. பழமை யறுத்துப் புரட்சிகள் சிலவேனும் கலந்த புது வாழ்க்கையாகவே இருக்க முடியும். "அழுகல் மயமான பிற்போக்கு ஆசாரங்களிலிருந்தே நம்மை விடுதலை செய்வதற்குத் தோன்றியவர்" என்று தெளிந்த ஆ. மு. பெண்ணினம் ஆணினம்போலப் பெருங்கல்விகற்க வேண்டும்; தொழில் பார்த்துப் பொருளீட்டும் தகுதி பெறல் வேண்டும். நிலையாமை சான்ற உலகத்தில் கணவன் வருவாயையே நம்பி மனைவி குடும்பம் நடத்துதல் இக்காலத்துக்கு ஏற்றதன்று என்பர். இவ்வொரு நோக்கத்தால், தம் பொருள் நிலைக்கு அப்பாற்பட்டிருந்தும், உறவினர்கள் எதிர்ப்புச் செய்தும், தம் மகளைப் பல்கலைக்கழகப் படிப்பு படிக்க வைத்தனர். தம் வருவாயில் பெரும்பகுதி தம் மக்கள் கல்விக்கெனச் செலவிட்டனர்.

## 14

ஆ. மு. புதிய நட்பினர்களையும் புதிய கொள்கைகளையும் புதிய நூல்களையும் புதிய நடைகளையும் புதிய புற நாகரிகங்களையும் தழுவிக் கொள்ளும் பசிய உள்ளத்தினர். அறிவிற்குப் பொருத்தம், காலத்திற்கு ஏற்பு என்று தெளிந்தால் அகத்தையோ, புறத்தையோ மாற்றிக் கொள்ளும் பதவிய ஒழுக்கத்தினர். காலந்தோறும் வரும் புதிய உடைத் தோற்றங்களை விரும்பி மேற்கொள்பவர். தன் இளமையின் கட்டுடலையும் முதுமையின் ஒட்டுடலையும் ஒத்திட்டு, 'இனி நினைந்து இரக்கமாகின்று' என்று சங்கப்புலவர் ஒருவர் சொல்லியது போல, ஆ. மு. மாணவப் பருவத்துத் தமக்கிருந்த அடர்ந்த அழகிய மயிர் வனப்பினையும், பேராசிரியப் பருவத்துப் பாலைவனம் போலிருக்கும் தலை வெளிமையையும் ஒப்பிட்டு இரங்கி உரையாடுவார். தம்தலை மேன்மையை மறைக்கவும் அதனை வெயில் உறுத்தாது காக்கவும் வேண்டி, முப்பத்தேழு ஆண்டுக்குப்பின் காந்திக் குல்லா அணிந்தனர். 'என் குல்லாவைககண்டு என்னை ஒரு கட்சிப்பார்வை பார்க்கின்றனர்; என் தலை நிலைமை அவர்கட்குத் தெரியுமா?' என்று விளையாட்டாகச் சொல்வர். பண்டிதமணியின் கைத்தண்டு போல ஆ. மு. வின் குல்லாவும் அவர்க்கும் பலர்க்கும் நகைப்பொருளாக உதவியது. இலங்கைக்குச் சென்றிருந்த அமயம் 'முத்துசிவன் தேசிய விடுதலை இயக்கத்தில் சேர்ந்திருந்தவரோ' என்று சிலர் தம்முள் பேசிக்கொண்டனர். அதனைச் செவிப்பட்ட ஆ. மு. சிரித்துக்கொண்டே, 'அப்படி ஒன்றுமில்லை. என்தலை வழுககை. பனி, வெயில் இவை தாக்காமல் இருக்கவே இந்தகுல்லாய் அணிந்துள்ளேன்' என்றார். சொற்பொழிந்து கொண்டிருந்தபோது, கூட்டத்தொருவர் 'உங்கள் தலைபோல் வறண்டு போயிருந்தது என்று சொல்லுங்கள்' என்றார். எதனையும் கவிதை நோக்கிற் காணும் பெரும் பண்புவாய்ந்த ஆ. மு. அவர்கள் 'மிகவும் நல்லது; என் தலை கருத்தைத் தெளிவாக்க உவமையாகவாவது பயன்பட்டது கண்டு மகிழ்ச்சியடைகின்றேன். நண்பரின் தலை அதற்காவது பயன்படுமா என்பது ஐயம்' என்று கூட்டத்தைக் 'கொல்' எனச் சிரிப்பித்தனர்.

இந்நிகழ்ச்சிகள் ஒருபாலாக, இவற்றுக்கு அடிப்படையான ஆ. மு. வின் உளப்புதுமையை, சாந்துணையும் கற்றுக்கொண்டிருந்த அறிவுத்தேட்டத்தை, காரணங்காணின் கருத்து மாற்றிக்கொள்ளும் அறிவு நெறியை நாம் நினைக்கவேண்டும். தமிழ் பிறமொழிக் கலப்பு இன்றித் தனித்தியங்கும் ஆற்றலுடைய தொன்மொழி என்பதனை அவர் நன்கு அறிந்திருந்தனர். உலக மொழிகளெல்லாம் மொழிக் கலப்புற்று வளர்ந்திருக்கின்றன என்றும், தமிழ்ப் பற்றில்லாரையும் வயக்கிப் பற்றுப் படுத்தற்குப் பன்மொழிக் கலப்பு ஒருவழி என்றும் அடிக்கடி ஏதுக்கூறுவர். சிலதிங்களாக இக்கொள்கையில் அவர்க்கு ஒரு மாற்றம் அரும்பிக்கொண்டிருந்தது. தனித்தியங்கவல்லா மொழிகளையெல்லாம் கூடியவரை தனித்தியக்க அவ்வம் மொழியாளர் பாடு பட்டுவரும்பொழுது, தனித்தியங்கும் ஆற்றலுடைய தமிழ் ஏன் கலப்பெய்த வேண்டும் ? பலரை நோக்கிக் கலந்து கலந்தெழுதியதால், என்னையிற்று, ' தமிழுக்குத் தானே இயங்கும் திறம் இல்லை என்றும், தமிழில் எதனையும் சொல்ல முடியுமா? என்றும் சிலர் துணிந்துகூறப்புறப் பட்டு விட்டனர். இவ்விழிவுரையையும் கேட்க நேர்ந்ததே' என்று நொந்தனர். தமிழின் தனியாற்றலை அறியச்செய்தாலென்ன என்று வீறிட்டனர்.

> "சொல்லவுங் கூடுவதில்லை--அவை
> சொல்லுந் திறமை தமிழ்மொழிக்கில்லை
> மெல்லத் தமிழினிச் சாகும்—அந்த
> மேற்கு மொழிகள் புவிமிசை யோங்கும்
> என்றந்தப் பேதை யுரைத்தான்"

என்று வெகுண்டு கொட்டிய பாரதி முழக்கத்தைப் பல்காலும் கேட்டு ஊறிய முத்துசிவனார் 'தனித் தமிழாற்றலை நாம் காட்டினலென்ன' என்று எண்ணங் கொண்டது இயல்பே யன்றோ !

## 15

அண்ணாமலைப் பல்கலைக் கழகத்து பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியார், நாவலர் ந. மு. வேங்கடசாமி நாட்டார், நாவலர் டாக்டர் ச. சோமசுந்தர பாரதியார், சொல்லின்செல்வர் ரா. பி. சேதுப்பிள்ளை என்றபெருந்தமிழ்ப்புலவர்களின்மாணாக்கராய நம்ஆ.மு.ஆயிரக்கணக் கான இளைஞரின் பேராசிரியர்; பல்லாயிர மக்களின் கேள்வியாசிரியர்; பல இலக்கியங்களை விளக்கஞ்செய்த திறனாசிரியர்; பல் பொருள்பற் றிப் பாடல்யாத்த புலமையாசிரியர்; அசோகவனம் முதலான பனுவல் பல ஆக்கிய நூலாசிரியர்; இவ்விலக்கியப் பாடல் இவ்விசையிற்பாட வேண்டும் என இசை வகுத்து எழுதியதோடன்றிப் பாடியும் காட்ட வல்ல இசையாசிரியர்; காந்திக் குல்லாவைக் காணநேரின், முத்துசிவனாரோ என்று இன்றும் ஒரு மயக்கங்கொள்ளும் எம்போன்ற நண்பர்

களின் உடனாசிரியர்; யார்க்கும் பொருந்த அறவுரைகூறி வாழ்விக்கும் பெருநோக்குடைய நல்லாசிரியர்; ஏறத்தாழ இருபது ஆண்டுகளாகத் தமிழ் பரப்பிய தொல்லாசிரியர்; தமிழ்நாடு எனச் சொல்லும் இந்நாட்டில் இன்னும் எத்துணையோ ஆண்டுகள் தமிழ் பரப்பவேண்டிய, தமிழ் பரப்பத்தக்க ஒரு பேராசிரியர். பல்பெருமை சான்ற ஆசிரியப் பெருந்தகை, 'குடம்பை தனித்தொழியப்புட் பறந்தற்றே' என்றாங்கு, உயிர்ப் பறவை மார்புச் சிறகினை வலிந்து அடித்துக்கொண்டு இரவிற் பறந்தோட, புகழுடம்பிற் காணப்பட்டார்.

## 16

முத்துசிவனார் புகழுடலின் தோற்றமே இந்நினைவு மலராகும். அறிவும், திறமும், அன்பும், அடக்கமும், சொல்லாண்மையும், மொழித் தொண்டும் உடைய தமிழாசிரியன் தன் புகழ்மணம் பரவ அழகப்பா கல்லூரி தொடுத்த இம்மலர்ப்பணி தமிழ்த்தாய்க்குச் செய்யும் திருப்பணி. தமிழ் மொழி வளர்த்த தக்கார்க்குத் தக்காங்குச் செய்யும் கைம்மாறு. புலவனை மதிப்பதே மொழியை மதிப்பதாகும். ஆதலின் மறைந்த பேராசிரியர்க்கு மலரணிந்து தமிழை உயர்த்தும் இந்நன் முறை உரிமைபெற்ற நாட்டிற்கு வழிகாட்டியன்றோ.

அரிய உரிய சிறப்புக்கள் பெற்று வாழ்வாங்கு வாழ்ந்த தமிழ்ப் பேராசிரியர் முத்துசிவனாரின் சொற்பொழிவுத்திறம் மாணக்கர்க்கு வாய்ப்பதாகுக. அன்னவரின் தொழிற்பற்று ஆசிரியத் தொழிலாளி கட்கு அமைவதாகுக. அன்னவர் தொடங்கிய திறனாய்வை அறிஞர் கள் வளர்ப்பார் ஆகுக. அன்னவரின் இயற்கைத் தாய்மொழிப்பற்றும் அறிவும் தமிழர் எனப்படுவார்க்கெல்லாம் உண்டாகுக. யார்க்கும் தீங்கு நினையா அவர் தம்மனத் தூய்மை மக்கட்கெல்லாம் பிறப்பதாகுக.

முத்துசிவனார் புகழ் வழிகாட்டுக.

அழகப்பா கல்லூரி வாழ்க.

தமிழ் வளர்க.

# கலைத் தந்தை

சு. குழந்தைநாதன், பீ. ஏ.
தமிழ்த் துணையாளர், அழகப்பா கல்லூரி

செப்டம்பர் 23ம் தேதி இரவு 9-30 மணிக்கு நெஞ்சு வெடிக்கும் செய்தியொன்று பரந்தது, பேராசிரியர் முத்துசிவனர் இருதய நோயால் காலமானரென்று. நினைக்க முடியவில்லை; நம்பவும் முடிய வில்லை அச்செய்தியை. ஆனாலும் உள்ளமுலுக்கும் அச்சம்பவம் நடந்துதான் விட்டது. அழகப்பா கல்லூரியை அழகுபடுத்திவந்த மணி விளக்கு அவிந்துவிட்டது. மோகனப் புன்சிரிப்பால் எல்லோரையும் மெய்சிலிர்க்க வைத்த பேரொளி மங்கி மறைந்துவிட்டது ஒரு நொடியில். தமிழகத்தின் இலக்கியப் பாதையில் வளரும் வழிக்கு எல்லையமைத்து நின்ற வரலாற்றுக்கல் வலியிழந்து வீழ்ந்துவிட்டது. கவிதைச் சோலையில் தேன்பருகி "எட்டுத் திசையும் எட்ட இன்ப முரசு கொட்டி, மட்டு நேர்ந்த தமிழை வாரி வாரிக் கொட்டி வந்த" இரசனைக்குயில் இறகிழந்து மறைந்துவிட்டது........இன்னும் எப்படி எப்படிச் சொல்வதென்றே புரியவில்லை, தெரியவில்லை. அவ்வளவு விரைவில் வரலாற்றுப் பேரேட்டில் தன் வாழ்க்கைப் பகுதியை முடித்துக்கொண்டார் பேராசிரியர்.

பேராசிரியர் முத்துசிவன்........அனைவருக்கும் இதமளிக்கும் அன்புப் பெயர் அது; தமிழர்கள் வாழும் பகுதிகளில் எல்லாம் தமிழ்ச் சங்கம் ஊதிய பெயர் அது; மேடைகளில் எல்லாம் மின்னெனப் பொலியும் கருத்தோட்டங்கள் உதிர்த்த கவின்பெயர் அது; வகுப் பறையில், வாதமேடையில், இலக்கியமன்றில், கவியரங்கில் எங்கெல் லாம் தமிழ் வளர்ந்ததோ அங்கெல்லாம் 'தமிழுக்குத் தகும் உயர் வளிக்கும்' தலைப் பெயராக விளங்கியது அது.

தமிழகத்தில் படர்ந்துவந்த இருட்காட்டை அழித்து ஒளி விளக்கம் தந்து நின்ற அவர் மறைந்துவிட்டார்; தமிழ்த் தாயைத் தவிக்கவிட்டு அமராகிவிட்டார் என்பதை எண்ணும்பொழுது இதயம் வெடிக்கிறது; எண்ணம் சிதைகிறது; நீர் நிறைகின்றன கண்கள்; நினைவிழக்கின்றது நெஞ்சம். 'நாற்பது வருட வாழ்க்கை நமக்கு மூலத்தைக் கொடுக்கிறது; அடுத்த முப்பது வருட வாழ்க்கை உரையைக் கொடுக்கிறது' என்றான் ஆர்தர் ஷோபனே. சிறந்த மூலத்தை, செம்மை நிறைந்த சீலத்தைத் தந்துவிட்டு அதற்கு உரை யெழுதும் முன்பு உயிர்நீத்து விட்டார் பேராசிரியர். அவர் 1910-ம் ஆண்டு நவம்பர்த் திங்களில் பிறந்தார். சரியாக 43 ஆண்டுகளில் தமிழ்த் தாய்க்குப் பேரணிகளும், பெருநிதியமும் தரப்போகின்ற தன்

விழைவைச் செயலாக்குமுன் காலனின் கொடுங்கரங்கள் அவரைப் பற்றிவிட்டன. அவரால் அழகுபெற இழைக்கப்பட்டுவந்த ஆபரணங்கள் பல முற்றுப்பெறாத நிலையில் அவர் கரங்களிலிருந்த கருவிகள் பிடுங்கப்பட்டுவிட்டன. கொடுமைச் செயல் புரிந்துவிட்டான் காலன். இக்கொடுமை கண்டு நெஞ்சு பொறுக்கவில்லை, நினைப்பலைகள் நீளவில்லை.

பேராசிரியர் தென்பாண்டி நாட்டவர். அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் கலைச்சிறப்புப் பட்டம் பெற்றார். புதுவயல் சரசுவதி வித்தியாசாலைத் தலைமையாசிரியராக மூன்றாண்டுகள் பணியாற்றினர். திருநெல்வேலி இந்துக் கல்லூரியில் தமிழ் விரிவுரையாளராக அமர்ந்தார். 1947 முதல், அழகப்பா கல்லூரித் துவக்க முதல் இங்கு பேராசிரியராக அமர்ந்து தமிழ்ப் பயிர் வளர்த்து வந்தார். தமிழ்ப் பயிர் வளரத் தன்னால் ஆன பணி புரிந்தார். இத்துடன் அமைந்து விடுவதில்லை அவர் வாழ்வு. "வாழும் வகையில் வாழ்வதுதான் முக்கியம்," என்ற குறிக்கோளுடன் "தாழ்ந்த இலட்சியத்தில் வெற்றிபெறுவதைவிட உயர்ந்த இலட்சியத்தில் தோல்வியுறுவதே மேல்" என்ற உள்ளத் திட்பத்துடன் வாழ்ந்த அவரது வாழ்க்கைப் பகுதி குறைவானாலும் அது அறம் நிறைந்தது, அழகு பொலிந்தது, சீலம் செறிந்தது, செம்மை வாய்ந்தது.

அவர் இதயத்தில் நேர்மையுடையவர்; அதனால்தான் அவர் நடவடிக்கையில் அழகு புலனாகியது. அவர் மிகவும் மென்மையுடையவர். தொட்டாற் சுருங்கிபோல எத்தகைய சிறு நிகழ்ச்சியும் அவர் மனத்தில் பல மாறுதல்களைத் தோற்றுவித்துவிடும். எதையும் எளிதில் புரிந்துகொள்ளுவார். யாரையும் எளிதில் நம்பிவிடுவார். "குழந்தை இயல்புடையவர், அதாவது எளிதில் மகிழ்பவர், அன்பு செய்பவர், பிறர்க்கு மகிழ்வூட்டுபவர் இவர்க்கே கடவுள் ராஜ்யம்" என்பதுபோல கடவுள் ராஜ்யத்தைத் தன் வாழ்விலே கண்டு களிப்புற்றவர் அவர். பிறந்த நலம் கண்டு மகிழ்பவர்; பிறர் துயர் கண்டு இளகுபவர்; உண்மையையே விரும்புவார். பிழையை மன்னித்துவிடுவார்.

அந்த உண்மையை அறிவினால் மட்டுமல்ல, அன்பினாலும் காண வழிதேடுவார். பிறர் உணர்ச்சிகளுக்கு மிக மிக மதிப்பளிப்பார்; தன் அபிப்பிராயத்தில் தவறுகண்டால் அதை உடனே மாற்றிக்கொள்ளத் தயங்கமாட்டார். நல்ல ரசனையுணர்வுடையவர். கடைகளில் பொருள்கள் வாங்கும்பொழுதும் சரி, கவிதைகள் படிக்கும்பொழுதும் சரி, அழகுணர்ச்சி அங்கு ததும்பி நிற்கும். நல்ல பொருள்கள் என்றால் அவற்றை வாங்குவதில் அவ்வளவு பிரியம் அவருக்கு. இன்சொல் அவருக்கே உரியது. எதிலும் இனிமையே விரும்புவார். இனிய கவிதை, நறுந்தேன், நல்ல வாசனை, இவையெல்லாம் அவருக்கு மிகமிகப் பிடிக்கும். குறிப்பாக அவரது உடையும் உள்ளமும் தூய்மையானவை; உரையும் உணர்வும் உறுதியானவை; செயலும் நினைவும் செம்மையானவை; வாழ்வும் வகையும் பயனுள்ளவை.

பேராசிரியர் வகுப்பென்றாலே மாணவர்கட்குத் தனி விருப்பம். அவர் வகுப்பிற்குச் செல்லாமல் வீண் பொழுது போக்கும் மாணவர்களே கிடையாது. "தமிழ் வகுப்புகளுக்காகத்தான் கல்லூரிச் சம்பளம் கட்டுகிறோம்" என்று கூறுகின்ற மாணவர்கள் பலப்பலர். அவர் வகுப்பிற்குள் வந்துவிட்டாலே ஒரு தனிச்சோபை ஏற்பட்டுவிடும். பாடத்தை ஒட்டி நின்றே நகைச்சுவை ததும்ப மாணவர்கட்கு வாழ்க்கையறம் காட்டி நிற்கும் அழகே அழகு. அவர் பேசும்பொழுது அனைவரது கண்களும் அவரையே பார்க்கும்; எல்லோரது செவியும் சிந்தையும் அவரையே சார்ந்து நிற்கும். அவ்வளவு காந்தத்தன்மையுடையவர். கம்பன், பாரதி, ஜெயங்கொண்டான், மாணிக்கவாசகர்.... இவர்களது கவிதைகளில் திளைத்து அவர் பேசும்பொழுது அவருக்கு இணை அவர்தான்.

தான் உணர்ந்த கருத்துக்களை (பிறர் ஏற்றுக்கொண்டாலும் சரி ஏற்றுக்கொள்ளாவிட்டாலும் சரி) அவற்றை அறிவுறுத்துவதில் தளரமாட்டார். அவர் கருத்துக்களில்பல வகுப்பறைகளில் உள்ள மாணவர்கட்குக் கசக்கும்; வாழ்க்கையில் புகுந்தவர்களுக்கு இனிக்கும். மாணவர்களுக்குப் பிடிக்காத கருத்தைக் கூறுவதனால் தன் செல்வாக்குக் குறையுமே என்று எண்ணமாட்டார் பலரைப்போல. "எது வாழ்வை உயர்த்தும் நெறி" என்பதை எடுத்துக் காட்டுவதில் ஏற்படுகின்ற முதல் தோல்விதான் இறுதி வெற்றி என்று தெளிவுற மொழிவார். வகுப்பறையில் அரசியல் கொள்கைகளைப் பற்றி அதிகம் பேசமாட்டார். ஆனால் ஆத்திக நெறி பற்றி வாழ்க்கைக்கும் சமயத்துக்கும் உள்ள பிரிக்க முடியாத தொடர்பு பற்றிச் சந்தர்ப்பம் கிடைத்த பொழுதெல்லாம் வலியுறுத்தத் தவறமாட்டார். வகுப்பில் பாடம் நடத்தும் பொழுது தன் வாழ்க்கையில் நடைபெற்ற நிகழ்ச்சிகளை வைத்துக்கொண்டே பேசுவார். சிலருக்கு இது பிடிப்பதில்லை. ஏனென்றால் அவர்கள் வாழ்க்கையின் ஒரு பகுதியைக்கூட உணர்ந்து வாழாதவர்கள். பேராசிரியர் பல தொல்லைகளை மேற்கொண்டவர்; வாழ்வில் நைந்தவர். எனவே அவரது அனுபவங்கள் பலருக்கு முதலில் கசக்கும். ஆனால் தாமும் அத்தகைய நிகழ்ச்சிகளைச் சந்திக்கும் பொழுதுதான் பேராசிரியர் கருத்துக்கள் தேனினும் இனியன என்று அறிவார்கள். "உங்கள் கருத்துக்கள் சிலவற்றைப் பலர் மறுக்கிறார்கள். நீங்கள் தனியாகவே கூறவேண்டியிருக்கிறதே!" என்று கேட்டால் அவர் அடிக்கடி இதைத்தான் சொல்வார். "தனிமையில் வாழ நாம் ஏன் அஞ்சவேண்டும்? நாம் தன்னந்தனியாக இறக்க வேண்டு மென்பதுதானே இறைவனின் திருவுள்ளம்" என்று அவ்வளவு ஆழ்ந்த நம்பிக்கையுடையவர் தன் கொள்கையில். "இளைஞர்கள் தம் மூளைக்கு அதிகமான பயிற்சி கொடுக்கிறார்களே தவிர போதுமான உணவு கொடுப்பதில்லை" என்று அடிக்கடி குறைபடுவார்.

எல்லாத்துறைகளிலும் ஏற்பட்டுள்ள புரட்சியும் மாறுதலு இன்னும் பாடப்புத்தகங்களைப் பொறுத்தமட்டில் ஏற்படவில்லையே

என்று வருந்துவார். மாறிவரும் உலக நிலைக்கேற்கப் புதுப்புதுக் கருத்துக்கள் எல்லாம் விரவப் பாடப் புத்தகங்கள் எழுதப்பெறுதல் வேண்டும் என்பது அவர் விருப்பம். பாடலைச்சொல்லி அப்படியே உரையை ஒப்புவிக்கும் பழைய வழக்கத்தை அவர் வெறுப்பார். ஒரு பாடலில் ஒரு வரி அல்லது ஒரு சொல் இதயத்தைத் தொடுவது போல அமைந்துவிட்டால் போதும் மணிகள் உருளுவதும் தெரியாது, ஓடுவதும் தெரியாது; அவ்வளவு லயித்துவிடுவார்; லயிக்கச் செய்தும் விடுவார். அவர் மிகமிகக் கலையுணர்வுடையவர். சிற்பம், சித்திரம், இசை இவற்றில் ஆழ்ந்த ஈடுபாடுடையவர். நடராச தத்துவத்தைப்பற்றி அவர் பேசினால் மணிக்கணக்கில் கேட்டுக்கொண்டிருக்கலாம். அதுவும் திருவாசகத்தில் இருந்து "நெக்குநெக்கு உருகிஉருகி" என்றபாடலை அவர் இசையோடு, உணர்வுகூட்டிப் பாடத்தொடங்கிவிட்டால்............ அதைக் கேட்டவர்கட்குத்தான் தெரியும் பிறர்க்கு உணர்த்த.

இலக்கியத்துறையில் அவருக்கு மிகவும் பிடித்தமான துறை இலக்கியத்திறன் ஆய்வுதான்; அதிலும் சிறப்பாகக் கவிதைத் துறையில் மிக மிக ஈடுபாடுடையவர். மேலைநாட்டு அறிஞர்களான பிளேட்டோ, பிராட்லி, ஷெல்லி, ஹொராட், ரிச்சார்டு, வெல்ஸ், கோலரிட்ஜ், ஹாவ்லக் எல்லிஸ், ஜான்சன், ஷா ஆகியோரது நூல்களை ஆழ்ந்து கற்றவர். அத்தகைய நூல்களைப்போலத் தமிழிலும் ஏராளமான நூல்கள் வருதல் வேண்டும் என்பதில் தணியாத தாகங்கொண்டவர். 'எந்தப் புத்தகத்தின் வழியாக நாம் உண்மையான ஆத்துமாவைக் காண முடிகிறதோ அதுதான் தேவை' என்றும் "நீ சிந்திப்பதைச் சிந்திக்கும் நூலன்று, உன்னைச் சிந்திக்க வைக்கும் நூலே வாசிக்கத்தக்கது" என்றும் அடிக்கடி கூறுவார். தான் எழுதிய நூல்களான 'கவிதை,' 'கவிதையும் வாழ்க்கையும்' 'அசோகவனம்' 'மின்னல் கீற்று,' 'கலிங்கத்துப்பரணி,' 'அமரகவி பாரதி' முதலியவற்றிலும் பல்வேறு கட்டுரைகளிலும் அவரது இக்கருத்துக்கள் பின்னணி இசைக்கின்றன. நூல் எழுதுவதில்கூட அவர்கொண்டுள்ள கருத்து வியப்பிற்குரியதாகும். 'ஒரு ஆசிரியன் ஒரு நூலை எழுதியபின் ஆறு மாதங்கழித்து அதை மீண்டும் படித்துப் பார்த்துப் பிறகே அச்சிட்டு வெளியிடவேண்டும் என்பார். வெறும் வார்த்தைக் குப்பைகளால் நூலைக் குழப்புவதைச் சிறிதும் விரும்பமாட்டார். "மொழிகள் இலைகளை ஒக்கும், தழை நிறைந்த மரத்தில் சத்துள்ள பழங்கள் இரா" என்று ஆணித்தரமாகக் கூறுவார். எளிய நடையில், இனிய முறையில் எதையும் தெளிவுடன் விளக்குவதே நூல் எழுதலின் இலக்கணமாக அமைதல் வேண்டுமென்பார். அவர் ஒரு நூலை எடுத்துப் படிக்கத் தொடங்கினால் ஒரே மூச்சில் (அது எத்தகைய புத்தகமானாலும்) படித்துவிடமாட்டார். ஒவ்வொரு பக்கமும் மெதுவாகவே நகரும். சிந்தியாது படிப்பது சீரணியாது உண்பதை ஒக்கும் என்பார்.

அவர் பேசுகின்ற நடையும், எழுதுகின்ற நடையும் ஒன்றுபோல இருக்கும். சிறிய சிறிய சொற்றொடர்களில் கவிதைப் பிரவாக

மாகவே சொற்கள் வெளிவரும். பேசும்பொழுது அங்கம் குலுங்க, உடல் வளைய, உணர்ச்சி ததும்பப் பிறரைத் தன் வயப்படுத்திப் பேசுவார். அவர் பேசாத கம்பன் விழா இல்லை. தமிழ் விழாக்கள் இல்லை. வடநாட்டில் புனு, பம்பாய், தில்லி, கல்கத்தா, கடல் கடந்து இலங்கை, ஈழம் முதலிய இடங்களில் பல்வேறு விழாக்களில் அவர் குரல் தமிழ் முழக்கம் செய்திருக்கிறது. சிறந்த மேடைப் பேச்சு வீரர் அவர். விவாத மேடையில் சமயம்பார்த்து எதிரிகளைச் சாய்ப்பதில் சமர்த்தர். அப்பொழுது சண்டமாருதம் வீசும் அவர் பேச்சில். கணீர் என்ற குரலில் ஒலி நயத்துடன் உருளும் சொற்கள். மேடையில் பல மாணவர்கள் வீறுநடை போடத்தகுந்த வழிகாட்டியாக "மேடைக் கலை" என்ற சிறந்த நூலைத் தந்தார்.

பேராசிரியர் எல்லோருடனும் சகஜமாகப் பழகுவார். அவருக்கு மேடையின் மூலம் அறிமுகமானவர்கள் ஆயிரக்கணக்கான நண்பர்கள். தமிழாசிரியர் என்றாலே 'பத்தாம் பசலி' என்ற இழிசொல் நீங்க அரும்பாடுபட்டார். எல்லாத்துறைகளிலும் பங்குகொள்ளுவார். அணுக்குண்டைப் பற்றியும், அகவற்பாவைப் பற்றியும், சமயத்தைப் பற்றியும், உளவியல் பற்றியும் அவர் பற்றுதல் கொள்ளாத துறையே கிடையாது. 'டென்னிஸ்' மிக அருமையாக ஆடுவார். அதைவிட அழகாக ஆங்கிலம் பேசுவார். அவரது ஆங்கிலப் பேச்சைக் கேட்டவர்கள் அவர் ஆங்கிலப் பேராசிரியரோ என்றுதான் ஐயுறுவார்கள்.

அவர் பிறர் குணங்களை மெச்சும் இயல்புடையவர். தாழ்ந்தவர்களை உயர்த்தும் ஏணியாக அருந்தொண்டாற்றியவர். அவரிடம் உள்ள பெருங்குறை இதுதான். அவர் அஞ்சுபவர், தயங்குபவர் என்பன. ஆம். அவர் அறத்திற்கு அஞ்சுவார்; அன்பிற்குத் தயங்குவார். இந்தக் குறையால்தான் அவர் சிறந்தார். தனிச் சிறப்புப் பெற்றார்.

தனக்குக் கீழுள்ள ஆசிரியர்களை நடத்துவதில் மிகவும் பெருந்தன்மையும் கண்ணியமும் உடையவர். அனைவருக்கும் சம நிலையும் உரிமையும் தருவார். மிகவும் வெளிப்படையானவர். முன்னேறுவதற்குரிய வழிகளை அடிக்கடி எடுத்துக் கூறுவார். மறந்தும் கடுஞ்சொற் கூறார்.

இவ்வளவு நல்லவராக வாழ்ந்தார். தனக்கு ஏற்பட்ட தொல்லைகளையெல்லாம் மறந்தும், மறைத்தும் எப்பொழுதும் புன்சிரிப்புடன் ஒளிபெற்றுத் திகழ்ந்தார். அந்த ஒளியால் பயன்பெற்றோர் பலர். பயன்பெறக் காத்திருந்தோர் பலர். காத்திருந்தோரை என்றென்றும் காக்க வைத்துக் காலன் பறித்துவிட்டான் அவரை. தமிழ்க்கலைச் சொற்களை உருவாக்கும் அவரது அரும்பணியின் தொடக்க நிலையிலேயே அவரைக் கூட்டிக்கொண்டான் பலரைத் தவிக்கவிட்டு.

பேராசிரியர் இறந்த அன்று காலை 7-30 மணிக்கு கல்கத்தாவில் இருந்து அவருக்கு ஒரு தந்தி வந்தது. ஜாம்ஷெட்பூரில் நடைபெறவிருக்கும் ஐந்தாவது தமிழ் விழாவிற்குத் தலைமை தாங்க வேண்டும்

என்று அதில் அழைக்கப்பட்டிருந்தது. தலைமை தாங்க அன்பழைப்பாக வந்த தந்தி அவர் விண்ணுலகில் தலைமைச் சிறப்புப் பெற்றுவிட்டார் என்ற துடிக்கும் செய்தியுடன் மீண்டும் கல்கத்தா திரும்பியது....!

புதுக்கோட்டை சப்ஜட்ஜ் மகராஜன் பேராசிரியரின் உயிர் நண்பர் இந்தச்செய்தி கேள்வியுற்று ஓடோடி வந்தார். தமிழ் வளர்த்த கலையுரு நித்திய மோனத்தில் ஆழ்ந்துகிடந்த அவல நிலை கண்டார். அடித்துக்கொண்டு கேவிக் கேவி அழுதார். சென்னைத் தலைமை நீதிபதி சோமசுந்தரத்திடம்சொல்லி முத்துசிவனை விரைவில் அமெரிக்காவிற்குக் கலைத்தூதுவனாக அனுப்ப ஏற்பாடு செய்துவந்தேனே; அதற்குள் ஏமாற்றிவிட்டானே'' என்று அலறித்துடித்தார்.

அழகப்பா கல்லூரி முதல்வர் தம்பியும், சா. கணேசனும் முத்துசிவனார் இறந்த செய்தி கேள்வியுற்றுச் சென்னையினின்று விமானமேறிப் பறந்தோடி வந்தனர். இறந்துகிடந்த தம் நண்பரின் உடலைக் கண்டனர்; உதிரமெல்லாம் நீராக மாறிக் கண்களில் பெருகின. அலறியோர், அழுதோர், துடித்தோர், துவண்டோர் எத்தனை எத்தனையோ.

பேராசிரியர் மறைந்த செய்தி டாக்டர் அழகப்ப செட்டியாருக்கு டோக்கியோவுக்கு அனுப்பப்பட்டது. அங்கிருந்து அவர் ஆழ்ந்த அனுதாபத்துடன் அனுப்பியுள்ள செய்தியொன்றே பேராசிரியரது குண நலன்களுக்கு விளக்கம் தரும்:

''பேராசிரியர் முத்துசிவனிடமிருந்து விடைபெற்று வந்தேன், ஆனால் முடிவாக அல்ல. அறிவுச்சுடரும். மகிழ்ச்சியும் கல்லூரியினின்று பிரிந்துவிட்டது. பெரிதும் திடுக்குற்றேன். துடிக்கும் நண்பர்கட்கு ஆழ்ந்த அனுதாபங்கள்.''

ஆம்; அவர் மறைவால் அவரது குடும்பத்தினருடன் பலர் துடிக்கின்றார். அவர் மறைந்ததால் தமிழ்த்தாய் தன் தலையாய சிற்பிகளுள் ஒருவரை இழந்துவிட்டாள்; கவிதைச் சோலை தன் குயிலை இழந்துவிட்டது; கம்பன் விழா தன் கவினை இழந்துவிட்டது; அழகப்பா கல்லூரி அழகுச் சுடரை இழந்துவிட்டது; அறிஞருலகம் நண்பரொருவரை இழந்துவிட்டது; ஆசிரியருலகம் தகுந்த வழிகாட்டியை இழந்துவிட்டது. மாணவருலகம் அறிவுப் பேரேட்டை இழந்துவிட்டது. நான் என் பேராசிரியரை, என்னை உருவாக்கி உணர்வூட்டிய என் அருமைத்தந்தையை, கலைத்தந்தையை இழந்துவிட்டேன், இழந்து விட்டேன்....!

(இக்கட்டுரை 29-9-54 வாரச் செய்தியில் வெளியானது)

# வகுப்பறை நினைவுகள்

**தா. பாண்டியன், IV பீ. ஏ.**
மாணவர் தலைவர், அழகப்பா கல்லூரிப் பேரவை.

மூன்றாண்டுகட்கு மேலாக, காலஞ்சென்ற தமிழ்ப் பேராசிரியர் முத்துசிவன் அவர்களிடம் தமிழ் பயிலும் வாய்ப்புப்பெற்ற பல மாணவர்களுள் நானுமொருவன். மலர்ந்த முகத்துடன் வகுப்பறைக்குள் நுழைவார். சிந்தனையைத் தூண்டி, இடையிடையே சிரிப்பையூட்டித் தமிழின்பத்தைத் தானும் அனுபவித்து மாணவரும் அருந்தி மகிழும் வண்ணம் வகுப்புக்களை நடத்துவார். குறளை நடத்தும்போது குறளின் பொருளுக்கொப்ப அமைந்துள்ள ஆங்கிலப் புகழ்மொழிகளைக்கூறி அதனினும் குறளே எங்ஙனம் சிறந்தது என்பதனை நயங்குன்றாமல் எடுத்துரைப்பார். கம்ப ராமாயணத்தை நடத்துவதற்குமுன் ஆங்கிலத்தில் அதற்குத்தான் எழுதிய ஆங்கில விளக்கவுரை ஒன்றையும் எங்களுக்குப் படித்துக்காட்டினார். 'இயற்கையின் எழில்கொழிக்கும் அழகையெல்லாம் உள்ளவாறு உணர்ந்து எழுதியவன் தமிழன். பட்டினப் பாலையின் பாடலுக்கு இணையென எம்மொழியிலும் பாடலிருக்குமா என்பது ஐயமே! எனக்குத் தெரிந்த வரையில் ஆங்கிலத்தில் குறைவே' எனக்கூறி, ஆங்கிலப் புலவர் பலரின் பாடலிலிருந்து பல பகுதிகளைச் சொல்லிக்காட்டுவார். இது இவரிடமிருந்த பல சிறப்புகளுள் ஒன்று எனக்கூறலாம்.

தமிழ்ப் பேராசிரியர் தம் சொற்றிறனாலும் நடைமுறைப் பழக்கத்தாலும் எங்கள் அன்புப் பேராசிரியர் ஆனார். கம்பன் விழாவில் நடுப்பகல் ஒரு மணிக்கு முத்துசிவன் அவர்களின் சொற்பொழிவு நிகழ்ச்சி ஒன்று இருந்தது. தலைமை தாங்கிய பேராசிரியப் பெருமகன் சேதுப்பிள்ளை "நன்றாகப் பசிக்கின்ற வேளையில் கூட்டம் கலைந்தோடக்கூடிய காலையில் ஒருபேச்சாளரை சொற்பொழிவாற்றப் போட்டிருக்கிறார்கள் என்றால் அவரது சொற்புலமையை நான் ஏன் விரித்துரைத்துக்கொண்டிருக்க வேண்டும்" என்று மிக அழகாகக் குறிப்பிட்டார்கள். வகுப்பறையில் நாங்கள் பெற்று அனுபவித்த தமிழின்பம் அளவிடற்கரியது. அவற்றுள் சில நிகழ்ச்சிகளைக் கூறுவேன்.

ஒரு நாள் பாடம் நடத்திக்கொண்டிருக்கும்போது திடீரென்று புத்தகத்தை மூடி வைத்துவிட்டு, 'இத்தனை வருடம் கழித்து, இன்று தான் ஒன்று விளங்கிற்று' என்றார். நாங்கள் அவர் முகத்தையே உற்று நோக்கிக்கொண்டிருந்தோம். சாத்தனாருக்குச் சீத்தலைச்சாத்தனார் என்று பெயர் வந்ததற்குக் காரணம் பிற புலவர்கள் பாடிய

பாடல்களில் தவறு கண்டபோதெல்லாம் எழுத்தாணியால் தலையில் குத்திக்கொண்டதே காரணம் என்று சொல்வார்கள். நான் இதைப் பகுத்தறிவுக்குப் பொருந்தாத வாதம் என்று எண்ணி வந்தேன். ஆனால் அதுதான் உண்மை என்பது விளங்குகிறது. இப்பொழுது இந்தப் புத்தகத்தைப் படித்து உங்களுக்குப் பாடம் சொல்லிக் கொடுக்கும்போது கையில் எழுத்தாணி அல்ல; கத்தியே இருந்தாலும் கூடக் குத்திக்கொள்ளலாம் என்றல்லவா வருகிறது. தமிழ் இனிமை ஆனது என்றார்களே, இதுவா இனிமை. இப்படித் தமிழை எழுதிக் கொலை செய்வதற்குச் சும்மாவாவது இருக்கக்கூடாதா? இதைச் சொல்லிக்கொடுக்க ஒரு ஆசிரியர், கேட்க நூற்றுக்கணக்கான மாணவர்களா? இந்த வயிற்றெரிச்சலை எல்லாம் எங்கே கொட்டித் தொலைப்பது! ஆனால் ஒரே ஒரு வேண்டுகோள், நன்றாக எழுத முடிந்தாலொழிய எழுதுங்கள். முடியாவிடில் தயவு செய்து புத்தகமே எழுதாதீர்கள். பல்கலைக்கழகத்தில் புத்தகம் தேர்ந்தெடுக்கக்கூடிய பொறுப்பான பதவிக்கு வரக்கூடியவாய்ப்பு உங்களில் யாருக்கேனும் கிடைத்தால், தயவு செய்து, ஆயிரம் கோடி நமஸ்காரம் போட்டுக் கேட்டுக்கொள்கிறேன். நினைவில் வைத்துக்கொள்ளுங்கள். இப்படிப் புத்தகங்களைப் பாடப் புத்தகமாக வைக்காதீர்கள். நண்பர்கள் என்பதற்காகவோ பணத்திற்கு ஆசைப்பட்டோ தமிழுக்கு இவ்வளவு பெரிய துரோகம் செய்துவிடாதீர்கள். எனக்கே இவ்வளவு ஆத்திரம் வந்தால் அவ்வளவு தமிழறிவும் பக்தியும் உடையவராயிருந்த சாத்தனார் ஏன் தலையில் குத்திக்கொண்டிருந்திருக்கமாட்டார்?"என்று உணர்ச்சி வசப்பட்டுக் கூறி முடித்தார். அவரது தமிழ்ப்பக்தி எங்கள் தமிழார்வத்தைத் தூண்டிற்று.

இலக்கியத்தில் "பகுத்தறிவு ஆராய்ச்சி" என்ற பெயரால் இனவெறியைத்தூண்டி வந்தவர்களைச் சமயம் கிடைத்தபோதெல்லாம் மறைமுகமாகவும் நேரடியாகவும் கண்டித்து வந்தார். ஒரு முறை சிலப்பதிகாரம் நடத்திக்கொண்டிருக்கும்போது சொன்னார், "கோவலன் கண்ணகியைப் பிரிந்து மாதவியிடம் சென்றமைக்குக் காரணம் கண்ணகிக்கு அழகும், கவரும் திறனும் போதா என்று ஒரு ஆராய்ச்சியாளர் எழுதியிருக்கிறார். இது உண்மையா என்று நீங்களே பாருங்கள். கோவலனே கண்ணகியின் அழகை வியந்து "மலையிடைப் பிறவா மணியே என்கோ; அலையிடைப் பிறவா அமிழ்தே என்கோ" என்றும், "மாசறு பொன்னே, கரும்பே தேனே, வலம்புரி முத்தே" என்றும் பாடவில்லையா? நான் அவரைக் குறைகூறவில்லை. நீங்கள் எதனையும் முழுவதாகப் படித்து முடிப்பதற்குமுன் ஆராய்ச்சியில் இறங்கிவிடாதீர்கள் என்றார்.

பாடல்களில் காமச்சுவை நிறைந்த பகுதிகளில் சொற்றொடர்களை எடுத்துவிட்டு வெறும் புள்ளியைவைத்து விடுவதைப் பேராசிரியர் வன்மையாகக் கண்டித்துவந்தார். இவர்களும் "ஸ்ரீமான் பகுத்தறிவாளரைப் போலவே தவறு செய்கிறார்கள் என்றார். சிறுபாணாற்றுப்

படையில் விறலி ஒருத்தியின் தோற்றத்தைப் பாணன் ஒருவன் வருணிக்கிருன். இதில் சில பகுதிகளில் புள்ளிவைத்து விட்டார்கள். இது பற்றிச் சொன்னர். ஒருவன் தன் மனேவி எதிரிலேயே அவள் கூந்தல் அழகையும், பல்லின் அழகையும், மார்பு, இடை, தொடை, என்று பாதம்முடிய வருணிக்க முடியுமா? ஆனல் வருணிப்பதாக இப்பாடலில் வருகிறது. இது அக்கால இலக்கியமுறை. நம் காலக் கண்ணேட்டத்தில் அதைக் காணக்கூடாது. அன்றையக் காலக் கண்ணேட்டம் வேறு, வாழ்க்கை, முறை வேறு. அதனே உணராமல் காமச்சுவை என்பது தவறு. இப்படித்தவருன கோணத்தில் பார்த்து தப்புக்கணக்குப் போட்டதன் விளேவாகத்தான் கம்பராமாயணத்தி லும் "காமரசம்" ததும்பிவழிவதாக குற்றம் சாட்டுகிருர்கள். கவிஞன் கலேக்கண்ணேடு நோக்குகிருன். பலா மரத்தை மர வியாபாரி விறகு எடைக் கணக்கில் காண்பான். கவிஞன் அதனேத் தேனினுமினிய தீஞ்சுவையாகக் காண்பான். ஆக்ரா நகரின் சாக்கடைத் தொட்டியை மட்டும் பார்த்துவிட்டு தாஜ்மஹாலே பார்க்காமல் வந்த கலேக்கண் குருடர்கள் இவர்கள். நீங்களும் அவசரப்பட்டு அப்படி ஆகிவிடாதீர் கள் என்று கூறிமுடித்தார்.

இலக்கியத்தைப் படித்துவிட்டு இலக்கியத்தில் வரும் பெண் போலவே நமக்கும் கிடைப்பாள் என்று கனவு காணுதீர்கள். இராமன் காடு செல்ல முடிவு செய்தபோது தானும் உடன் செல்ல வேண்டும் என்று அழுதுகொண்டே "உன் பிரிவினும் சுடுமோ பெருங்காடு" என்ருளாம் சீதை. ஆனல் வாழ்க்கை மனேவி என்ன சொல்வாள் தெரியுமா? உங்களில் ஒருவன் மலேயா செல்ல வேண்டிய அவசரம் ஏற்பட்டு விட்டதாக வைத்துக் கொள்ளுங்கள். அவன் நினேப்பான் மனேவியும் மலேயா வரத்துடிப்பாள், அழுவாள், உமைப் பிரிந்தால் உயிர் எனேப்பிரிந்திடும், மலேயா என்ன, மலேக்கேயானுலும் உடன் வந்துதான் தீர்வேன் என்றெல்லாம் அழுவாள் என்று நினேக் கலாம். ஆனல் அந்தப் புண்ணியவதி என்ன சொல்வாள் தெரியுமா? மலேயாவுக்கா? அதுவும் கப்பல் பிரயாணமா? சாதாரணமாக ஊர் விட்டு ஊர் போனலே எனக்கு உடம்புக்கு ஒத்துக்கொள்ளாது. போய் நல்ல ஹோட்டலாகப் பார்த்துக்கொண்டு தங்குங்கள். மீதிப் பணத்தைக் கையில் வைத்திருக்காதீர்கள். ஆபத்து. இங்கே அனுப்பி விடுங்கள். பேங்கில் போட்டு விடுகிறேன் என்பாள். இதுதான் வாழ்க்கை; அது இலக்கியம். கணவன் முகமறிந்து நகையைக் கழற்றிக் கொடுக்கும் கண்ணகியைக் காண்பது வாழ்க்கையில் அரிதினும் அரிது. இப்படி "இல்லாததைப் பார்த்து ஏங்கியதின் படைப்புத்தான் இலக்கியம்" என்ருர்.

தமிழ் வகுப்புக்குப் பொருளாதார மாணவர்களும், கணக்குப் படிக்கும் மாணவர்களும் வெவ்வேறு பிரிவிலிருந்து ஒன்ருக வந்து கூடவேண்டும். கணக்கு மாணவர்கள் வரக்கொஞ்சம் நேரம் பிடிக்கும். ஒரு நாள் அவர்கள் மிகவும் தாமதமாக வந்தார்கள். பேராசிரியர்

சிரித்துக் கொண்டே கேட்டார். "என்ன 'கணக்குப் பிள்ளைகள்' சைபருக்கும் ஒன்றுக்கும் இடையில் என்ன இருக்கிறது. இல்லை என்றால் என்ன உண்டாக்கலாம் என்ற ஆராய்ச்சியில் ஈடுபட்டிருந்தீர்களா?" என்றவுடன் கணக்கு மாணவர்கள் உட்பட அனைவரும் வயிறு வெடிக்கச் சிரித்தோம்.

பேராசிரியர் ஒரே மாதிரி புஷ்கோட்டாகத்தான் தொடர்ந்து போட்டுக்கொண்டு வருவார். ஒரு நாள் நானும் என் நண்பர்களும் வேறு ஏதோ ஒன்று பற்றிப் பேசிச் சிரித்துக் கொண்டிருந்தோம். "என்ன பாண்டியன்! நான் ஒரே சட்டையைத் தினம் மாற்றிக் கொண்டு வந்து விடுகிறேன் என்று சிரிக்கிறாயா? அதெல்லாம் கிடையாது. ஏதாவது ஒரு துணி பிடித்து விட்டால் ஒரு பீசாக எடுத்து பத்து பன்னிரண்டு என்று புஷ்கோட் தைத்துக்கொள்வேன்" என்றார். மற்ற எல்லா மாணவர்களுமே சிரித்தார்கள். என்னைத் தவறாக எண்ணிவிட்டாரே என்ற கவலையில் நான் ஆழ்ந்திருந்தேன்.

பேராசிரியர் கடவுள் பக்தி மிகுந்தவர். அடிக்கடி பக்திபற்றி வற்புறுத்துவார். ஒருநாள் கடவுளைக் காணும் வழிகளை வற்புறுத்திக் கூறியவுடன் நாங்கள் 'கொல்' என்று சிரித்து விட்டோம். அவர் நிதானமாக "நீங்கள் ஏன் சிரிக்க மாட்டீர்கள். இப்பொழுது சிரிப்பு மட்டுமல்ல, சினம்கூட வரும். ஆனால் நீ பல நாள் உன் குடுமியை நீட்டி நெளித்துச் சுருட்டுச் சீவி பவுடர், ஸ்நோ போட்டுப் புதுச் சட்டை தைத்துப்போட்டு பல நாள் பாடுபட்டுக் காதலித்துக் கல்யாணம் செய்து கொண்ட உன் காதல் ராணி கூந்தல் எல்லாம் கழிந்து மொட்டையாகி வியாதியால் மூலையில் முணங்கிக்கொண்டு படுத்திருக்க வேண்டும்; மற்றொரிடத்தில் நீ பெற்றெடுத்த பன்னீர்ச்செல்வன் டைபாய்டு வந்து கிடக்கவேண்டும். இதே சமயத்தில் உன் அம்மா செத்துத் தந்தி வரவேண்டும். உனக்கு லீவு கிடைக்கக் கூடாது. அப்பொழுது நீ ஒன்றும் பேசவேண்டாம்; உன் வாயே உன்னையறியாமல் "அட கடவுளே! என்னைக் காப்பாற்று, போதுமே உன் சோதனைகள்" என்று அலறும் என்றார். எத்தனைபேர் இதனால்பக்தர்களாக மாறி விட்டார்கள் என்று சொல்ல முடியாது. ஆனால் அவர் சொன்ன முறையில் அனைவருமே மனத்தைப் பறிகொடுத்தோம் என்பது மட்டும் உண்மை.

விடுமுறைக்காக வீட்டுக்கு வந்திருந்தேன். இரண்டு நாள் கழித்து ஒரு கடிதத்தில் "உன் அன்புப் பேராசிரியரை இனி நீ மீண்டும் வந்து காணமுடியாது. பேராசிரியர் முத்துசிவன் அவர்கள் மாரடைப்பால் .................... என்று மட்டும் எழுதப்பட்டிருந்த என் அண்ணன் கடிதம் கண்டவுடன் எங்கள் கல்லூரி அறவொளியும், அறிவொளியும், புகழொளியும் மங்கிக் கண்ணீர் வடிப்பதைக் கண்டேன். சாவைப்பற்றி கவலைப்பட்டவர் அல்லர் பேராசிரியர். அவர் திருநெல்வேலியில் வேலை பார்க்கும்போது அவர் வீட்டுக்குப் பக்கத்து

வீட்டில் கல்லூரியில் படித்துக்கொண்டிருந்த மாணவன் திடீரென்று இறந்துவிட்டானும். அவன் அந்த வீட்டுக்கு ஒரே பையனும். மாலையில் துக்கம் விசாரிக்கப் பேராசிரியர் போயிருந்தபோது அந்தப்பையனின் தாய், பேராசிரியரை நோக்கி, "பார்த்தீர்களா, பையன் சிரித்துக்கொண்டிருக்கிறான்!" என்றாளாம். அந்த அன்புத் தாய்க்கு அவளது ஒரே மகன் இறந்துவிட்டான் என்பதனை நம்ப முடியாததாலேயே அப்படிச் சொன்னாள். அவள் அந்தச் செய்தியை நம்ப விரும்பவில்லை என்றார். இன்னும் எண்ணற்ற மாணவர்கள் என்னைப் பார்க்கும்போது எல்லாம், "உண்மையாகவே நம் பேராசிரியர் முத்துசிவன் இறந்துவிட்டாரா?" என்று கேட்கும் போதெல்லாம், அதே கேள்வியைத்தான் நானும் திருப்பிக் கேட்டுக் கொண்டே இருக்கிறேன்.

---

## தெய்வக்கருவி

"அறத்தை நிலைநாட்ட கிறிஸ்துபெருமான் அவஸ்தைப்பட வில்லையா?

"கை அயர்ந்து, வாய் புலர்ந்து, கண் இருண்டு, காதடைத்து, வெய்ய சிலுவை சுமந்தலசி" வீதி வழியே செல்லவில்லையா?

"தன்னரிய திருமேனி சதைப்புண்டு தவிப்பெய்திப் பன்னரிய பலபாடு" படவில்லையா?

அறத்தை நிலைநாட்ட வந்த அப்பர் சுவாமிகள் அவஸ்தைப்பட வில்லையா? "அழுது அழுது அரன் அடி அடைந்த ஆனந்த மாதவரான" மாணிக்கவாசக அடிகள் அவஸ்தைப்பட வில்லையா? ராமதாஸர் அவஸ்தைப்படவில்லையா?

அதர்மம் தொலைந்து தர்மம் தலையெடுக்க வேண்டுமென்றால், அந்தப்புனித சேவைக்கென்று தெய்வ நீதி தேர்ந்தெடுக்கும் கருவி இவ்வாறெல்லாம் அவஸ்தைப்பட வேண்டியதுதான். இதுவே அசோக வனத்தின் மர்மம்."

— **முத்துசிவன்.**

(அசோகவனம் 38–39).

# புலியார் நட்பு வேண்டும்!

திரு. அ. ச. ஞானசம்பந்தன், M. A.
துணைத் தமிழ்ப் பேராசிரியர், பச்சையப்பன் கல்லூரி, சென்னை.

ஒரு நாட்டை ஆள்பவர்கட்கு இன்றியமையாது வேண்டப்படுவது யாது? இவ்வினாவிற்குப் பலரும் பலவாறு விடை கூறுவர். ஆனால் அவர்களுடைய விடைகள் அனைத்தையும் கூட்டி ஒரு சொல்லில் கூறவேண்டுமாயினும் கூறலாம். ஆட்சியாளருக்கு இன்றியமையாதது வேண்டப்படுவது ஒரு "குறிக்கோள்." குறிக்கோள் இல்லாதவனுடைய வாழ்க்கை சிறப்படையாது. விலங்குகளும் பிறந்து, உண்டு, வாழ்ந்து, முடிவில் இறக்கின்றன. மனிதனும் இவ்வாறே இருந்து விடுவானாகில் இருவருக்கும் வேறுபாடு இல்லையாய்விடும். விலங்கினத்திலிருந்து மனிதன் பிரிக்கப்படுவதற்கு ஒரு சிறந்த காரணம் அவன் வாழ்க்கையில் மேற்கொள்ளும் குறிக்கோள்தான். குறிக்கோள் இல்லாதவனுடைய வாழ்க்கை உப்புச் சப்பு இல்லாமல் ஏதோ நடைபெறுகிறது என்று கூறும் முறையில்தான் இருக்கும். தனிப்பட்ட மனிதன் வாழ்வுக்கே குறிக்கோள் தேவை என்றால் பலருடைய வாழ்க்கையை வழிகாட்டி நடாத்தும் நாடாள்வாருக்கு இது தேவை என்று கூறினால் அதில் வியப்படைய ஒன்றும் இல்லை. இன்று நாட்டை ஆள்பவர்கள் எத்துணைப் பெரு முயற்சியுடன் ஐந்தாண்டுத் திட்டத்தை நிறைவேற்ற அரும்பாடுபடுகின்றனர். இத் திட்டம் முடிந்து பயன்தரும் பொழுது, இன்று ஆட்சி செலுத்துபவர்களே அப்பொழுதும் இருப்பார்கள் என்று கூறுவதற்கில்லை. எனினும் இன்று ஆள்பவர்கள் அதுபற்றிக் கவலைகொள்வதில்லை. தாங்கள் மீட்டும் ஆட்சியில் அமரமுடியுமா என்பதுபற்றிக் கவலை கொள்ளாமல் திட்டங்களை நிறைவேற்ற முற்படுகிறார்கள். ஏன்? இது தான் குறிக்கோள் என்று கூறப்படும். நாட்டுக்கும் பெரும்பாலான மக்கட்கும் நலந்தருவது எது என்று ஓயாமல் நினைந்து அவ்வாறு நலந்தருவனவற்றை நாடுதலே ஆட்சியாளருடைய 'குறிக்கோள்' எனப்படும்.

சிறந்த குறிக்கோள் இல்லாதவர்களும், இல்லாத கட்சியும் எத்துணை வன்மையும், கூட்டச் சிறப்பும் உடையதாயினும் சரி பயன் தாரா. இன்றைய சூழ்நிலையில் உலக முழுவதிலும் கட்சிகள்தாம் நாட்டை ஆள்கின்றன. மக்களாட்சி நடைபெறுவதாகப் பறை சாற்றப்படும் நாடுகளிலும், தனிப்பட்டவர் ஆட்சி என்று கூறப்பெறும் நாடுகளிலும் உண்மையில் நடைபெறுவது கட்சி ஆட்சியே! கட்சியாட்சியின் குறைவு நிறைவுகளை ஆய்வது நம்முடைய கருத்தன்று. என்றாலும் ஒரு கட்சி சிறப்படைவதும், சிறப்பை இழப்பதும்

அதனுடைய குறிக்கோளை வைத்தேயாகும். குறிக்கோள் இல்லாத வர்கள் கட்சித் தலைவராகவோ நாட்டை ஆள்பவராகவோ இருந்துவிடின் நாட்டுக்குத் தீமை இதனைவிட வேறு தேவை இல்லை. எனவே பலர் அடங்கிய நாட்டையோ கட்சியையோ தலைமை வகித்து நடத்துபவனுக்கு வேண்டிய உயர்ந்த குறிக்கோளைப் பற்றிப் பழந் தமிழ்ப் புலவன் ஒருவன் பாடிய பாடலை இங்குக் காணலாம்

> 'உள்ளுவது எல்லாம் உயர்வு உள்ளல்; மற்றது
> தள்ளினும் தள்ளாமை நீர்த்து' (குறள்-596)

என்ற குறளில் வள்ளுவர் குறிக்கோளைப்பற்றித்தான் குறிப்பிடுகிறார். ஒருவனுடைய வாழ்க்கையில் கொள்ள வேண்டிய குறிக்கோள் எத்தகையதாக இருத்தல் வேண்டும்? அது மிகஉயர்ந்ததாக இருத்தல் வேண்டுமாம். அவ்வாறாயின் அது கைகூடாததாகவும் இருக்கலாமே எனில் இருந்தாலும் கவலை இல்லை என்கிறார் வள்ளுவர். இத்தகைய உயர்ந்த குறிக்கோளுடைய ஒருவன் தன்னால் ஆளப்படும் நாட்டிற்குப் பெரு நன்மை செய்ய வேண்டும் என்று விழைகிறான். நாட்டுககு நலன் விளைக்க வேண்டும் என்று நினைக்கும் அவனே ஆள்பவனாகவும் இருந்துவிட்டால் அவனை யார் தடைசெய்ய முடியும்? அவன் வேண்டு மானவரை நலம் புரியலாமே என்றுதான் கேட்கத் தோன்றுகிறது. ஆனாலும் ஆட்சி முறையில் பழகியவர்கட்குத்தாம் அதிலுள்ள இடையூறு நன்கு தெரியும். ஆளும் தலைவன் எத்துணைச் சிறந்தவனாயினும் அவனுடைய குறிக்கோள் எத்துணைச் சிறந்ததாயினும் பயன் இல்லை; அதனைக் கொண்டு செலுத்துவோர் தக்கவராக இல்லாவிடத்து!

இன்று நம்முடைய அரசியலார் செய்யும் பல நன்மைகளைப் பொதுமக்கள் அனுபவிக்க முடியாமற் போய்விடுகிறது. காரணம் இடை நிற்போர்! எனவே ஆள்வோருடைய குறிக்கோள் சிறந்ததாக வும் இருந்து அது பயன்படவும் வேண்டுமாயின் ஒரே ஒரு வழிதான் உண்டு. அதாவது ஆள்வோர்கள் தக்கவர்களைத் தம்முடன் இருத்திக் கொள்ளவேண்டும். உடன் இருக்கும் அத்தக்கவர்களால்தாம் ஆட்சி யாளர் குறிக்கோள் நற்பயன் விளைத்தல் கூடும்.

சோழன் நல்லுருத்திரன் என்பவன் நாடாளும் சோழர் குடியில் பிறந்த மன்னன். அரசாட்சியின் இந்த நுணுக்கத்தை அனுபவத்தில் கண்டான் போலும். இதோ பேசுகிறான் அவன் குறிக்கோளைக் கொண்டு செலுத்த உதவும் நண்பர்கள் பற்றி.

"நன்கு விளைந்து முற்றிய வளைந்த நெல்கதிராகிய உணவைச் சிறிய இடத்தையுடைய வளையில் நிறைய வைக்கும் எலி முயன்றால் போல சிறிய முயற்சியை உடையவர்களாகி, இருக்கும் தம்முடைய செல்வத்தை அனுபவிக்காமல் இறுகப் பிடிக்கின்ற பரந்த மனப் பான்மை இல்லாதவர்களுடன் பொருந்திய நட்பு இல்லாமல் போவதாக:

தறுகண்மையுடைய பன்றியைப் புலி அடித்த பொழுது அப்பன்றி இடப்பக்கம் வீழ்ந்துவிட்டதாகலின், அன்று அவ்விடத்தில் உணவு உட்கொள்ளாமல் மறுநாள் பெரிய மலையின்கண் உள்ள தனது குகை தனிமைப்பட உணவை விரும்பிப் புறப்பட்டுவந்து பெரிய ஆண் யானையை நல்ல வலப்பக்கத்தில் விழும்படியாக அடித்து உண்ணும் புலி பசித்தாற்போலக் குறை இல்லாத நெஞ்சுரம் உடையவர்கள் நட்புடன் பொருந்திய நாட்கள் உளவாக" என்ற கருத்தில் பேசுகிறான் அவ்வரசப் புலவன்.

"விளைபதச் சீறிடம் நோக்கி வளைகதிர்
வல்சி கொண்டுஅளை மல்க வைக்கும்
எலிமுயன் றுஅனைய ராகி உள்ளதம்
வளன்வலி உறுக்கும் உளம்இ லாளரொடு
இயைந்த கேண்மை இல்லா கியரோ!
கடும்கண் கேழல் இடம்பட வீழ்ந்தென
அன்றுஅவண் உண்ணாது ஆகி வழிநாள்
பெருமலை விடர்அகம் புலம்ப வேட்டு எழுந்து
இரும்களிற்று ஒருத்தல் நல்வலம் படுக்கும்
புலிபசித்து அன்ன மெலிவில் உள்ளத்து
உரன்உடை யாளர் கேண்மை யொடு
இயைந்த வைகல் உளவா கியரோ! [புறம்-190]

[விளைபதம்-முற்றிய பருவம்; வல்சி-உணவு; அளை-வளை; வளன்-செல்வம்; வலிஉறுக்கும்-இறுகப் பிடிக்கும்; கேண்மை-நட்பு; கேழல்-பன்றி; வழி நாள்-மறு நாள்; விடர்அகம்-குகை; புலம்ப-தனித்துவிட; இருங்களிறு-பெரிய ஆண் யானை; உரன் உடையாளர்-நெஞ்சு வலிமை உடையார்; வைகல்-நாட்கள்.]

உலகில் வாழும் மனிதர்கள் பலதிறப்படுவர் எனினும் இப் பாடல் பாடிய கவிஞன் அவர்களை இரண்டே பிரிவில் அடக்கி விடுகிறான். முதற் பிரிவினர் எலியைப் போன்றவர். மனிதனுக்கு வேண்டப்படும் குறிக்கோள் என்பது சிறிதும் அற்று எவ்வாறாயினும் தாங்கள் நன்றாக இருக்க வேண்டும் என்று நினைக்கின்ற இந்த எலிக் கூட்டத்தார் இன்றும் உலகிடை மிகுதியாகக் காணப்படுகின்றனர். இத்தகையவர்கள் வாழ்வில் தமக்காகவோ பிறருக்காகவோ முயற்சி சிறிதும் செய்யமாட்டார்கள். ஆனால் தமக்குரிய நலங்களையும் விட்டுக்கொடுக்க மாட்டார்கள். எவ்வாறு முயற்சிகள் சிறிதும் இல்லாமல் இந்த நலங்களைப் பெறுகிறார்கள் என்று எண்ணத் தோன்றுகிறதா? பிறர் முயற்சியில் ஏற்படும் பயனை இவர்கள் திருடுகிறவர்கள். யாரோ முயன்று பயிரிட்ட வயலில் கதிர் முற்றிய நிலையில் அதனைத் திருடித் தன் வளையில் வைத்துக்கொள்ளும் எலியைப் போன்ற மக்களும் உண்டு அல்லவா? அத்தகையவர் ஆட்சியாளரை அண்டி இருந்தால்

நாடு கெட்டுப்போவதற்கு வேறு காரணமும் வேண்டுமா? இவர்களுடைய பொருள் தவறான வழியில் சேர்க்கப்பட்டிருப்பினும் அதனைக்கூட இவர்கள் பிறருக்குத் தரமாட்டார்கள். சில காலத்திற்கு முன்பு கள்ளச் சந்தையில் நிறையப் பொருளைச் சேகரித்துத் தாமும் உண்ணுமல் அரசியலாருக்குத் தரவேண்டிய வரிப் பணத்தையும் தாராமல் ஏமாற்றியவர் எத்தனைபேர்? அவர்கள் அனைவரும் இந்த எலிக் கூட்டத்தைச் சேர்ந்தவர்களே யாவர்.

இவரினும் வேறுபட்ட ஒரு கூட்டத்தாரும் உண்டு. இவர்கள் புலி போன்ற கோட்பாட்டினை உடையவர். புலி பசி தாளாமல் பன்றியை அடித்தாலும் அப்பன்றி இடப்பக்கம் வீழ்ந்துவிட்டமையின் அதனை உண்ணுமற் சென்றுவிட்டதாம். பசித்த காலத்து எது கிடைத்தாலும் சரி என்று நினையாமல் தன் கொள்கைக்கு முரணை விடத்துப் பசியையும் பொறுத்துக்கொள்கிற புலி மனிதனுக்கு ஓர் எடுத்துக்காட்டாகும். அன்று உண்ணுத புலி மறுநாள் புறப்பட்டு யானையை வலப்புறம் வீழுமாறு அடித்து அன்றுதான் உண்டதாம். எனவே கொள்கையே பெரிதென்று வாழும் மனிதர்கள் புலியின் இனத்தைச் சேர்ந்தவர்கள். பிற விலங்குகள் அடித்துக்கொன்ற உணவைப் புலி உண்பதில்லை. அதுபோல் இவர்களும் பிறருடைய முயற்சியில் வந்த பொருளைத் தாம் அனுபவிப்பதில்லை. தன்னுல் அடிக்கப்பட்ட விலங்கு இடப்புறம் வீழ்ந்துவிடின் புலி அதனை உண்ணுதாம். அதேபோல இவர்கள் செய்த முயற்சியில் வந்த ஊதியம் தவருனதாக இருப்பினும் இவர்கள் அதனை ஏற்றுக்கொள்வதில்லை. புலி பசியைப் பொறுத்துக்கொள்வதுபோல் இவர்களும் வாழ்க்கையில் உண்டாகும் எத்தகைய துன்பத்தையும் தம் கொள்கைக்காகப் பொறுத்துக் கொள்வர். புலி முயற்சியால் கொன்ற விலங்கைத் தான்உண்டு விட்டு எஞ்சியதை நாளைக்கு வேண்டுமே என்று வைத்துக்கொள்வதில்லை. அந்த எஞ்சிய உணவைப் பிற விலங்குகள் பல உண்டு உயிர் வாழும். அதேபோல இந்தப் பெரியவர்கள் தாம் செய்த முயற்சியால் பெற்ற ஊதியத்தைத் தமக்கே வேண்டும் என்று வைத்துக்கொள்வதுமில்லை. தங்கள் தேவை தீர்ந்தவுடன் எஞ்சியதைப் பிறருக்கு வரையாமல் வழங்குவர். இத்தகைய புலிக்கூட்டத்தாருடன் நட்பு வேண்டும் என்று கூறுகிருன் வாழ்க்கையில் பெரிய குறிக்கோள் வேண்டும் என்று கருதும் அப் பழந்தமிழ் ஆட்சியாளன். ஐந்தாண்டுத் திட்டங்கள் வெகுவாக நடைபெறும் இக்காலத்தில் நமது அரசியலாருக்கு எலிக்கூட்டத்தார் நட்பினராக ஆகாமல் புலிக்கூட்டத்தார் நட்பினராக ஆனல் எவ்வளவு பெரிய நன்மை உண்டாகும்!

ஆட்சியாளர் இன்றும் அன்றும் நாட்டுக்கு எவ்வாறு நன்மை புரிகின்றனர்? பொது மக்கள் தருகின்ற இறைப்பணத்தை (வரி) வைத்துத்தானே ஆட்சி நடைபெறுகிறது. இன்றும் வரவு செலவுத் திட்டம் பாராளுமன்றத்தின் தலையாய கடமைகளுள் ஒன்று அன்ருே?

எவ்வாறு புதிய வரிகளைப் போட்டுப் பணம் சேகரிக்கலாம் என ஆட்சியாளரும், எவ்வாறு வரிச்சுமையைக் குறைக்கலாம் எனப் பொதுமக்களும் சிந்தித்தல் இயற்கை. புதிய வரிகளைப் போடுதலில் எந்த அளவைக கொள்வது என்பது பற்றி எந்த அரசினும் முடிந்த முடிபாக இதுவரை ஒன்றும் கூறப்படவில்லை. கொடுப்போருடைய வன்மைதான் வரிவிதிப்போருக்கு அளவாக அமைதல் வேண்டுமே தவிர அரசியலாருக்கு ஏற்படும் செலவு அளவாக அமைதல் கூடாது. இக்கருத்து இன்றும் சிறந்த அரசியல் வாதிகள் அனைவரும் ஒத்துக் கொள்கிற கொள்கையாகும். இக்கருத்தைப் பிசிராந்தையார் என்ற புலவர் இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்னர் அழகிய ஓர் உதாரணத்துடன் விளக்குகிறார்.

யானை பெருந்தீனி தின்னும் பிராணி. ஆனாலும் சிறிய மா அளவுள்ள நிலத்தில் விளையும் நெல்லை அறுத்து அரிசியாக்கித் தந்தால் பெரிய யானைக்குக்கூட அது பல நாட்கட்கு ஆகும். அவ்வாறு செய்யாமல் யானை தானேசென்று உண்ணட்டும் என்று அவிழ்த்து விட்டுவிட்டால் நூறு ஏக்கர் நிலமாயினும் வாயில்புகுவதைக்காட்டிலும் காலில்பட்டு அழிவது மிகுதி. எனவே அறிவுடை வேந்தர் முறை தெரிந்து இறைப்பணத்தை வசூலித்தால் பல காலம் அரசனும் மக்களும் இன்பமாக வாழ முடியும். அரசன் அறிவற்றவனாகித் தீயவர்களை நட்புக்கொண்டு செலவை முன்னிட்டு வரியைப்பெற்றால் யானைபுகுந்த வயலைப்போல நாட்டையுங்கெடுத்துத் தானும்கெடுவான் என்ற கருத்தில் பாடுகிறார்.

"காய்நெல் அறுத்துக் கவளம் கொளினே
மாநிறைவு இல்லதும் பல்நாட்கு ஆகும்
நூறுசெறு ஆயினும் தமித்துப்புக்கு உணினே
வாய்புகு வதனினும் கால்பெரிது கெடுக்கும்
அறிவுடை வேந்தன் நெறிஅறிந்து கொளினே
கோடி யாத்து நாடுபெரிது நந்தும்
மெல்லியன் கிழவன் ஆகி வைகலும்
வரிசை அறியாக் கல்லென் சுற்றமொடு
பரிவுதப எடுக்கும் பிண்டம் நச்சின்
யானை புக்க புலம் போலத்
தானும் உண்ணான் உலகமும் கெடுமே" (புறம்-184)

[காய்நெல்-விளைந்த நெல்; கவளம்-யானைக்குத்தரும் சோற்று உருண்டை; மா-ஒரு செனட் போன்ற நில அளவு; செறு-ஏக்கர் போன்ற அளவு; நந்தும்-பெருகும்; வைகல்-தினந்தோறும்; கல்என்சுற்றம்-அறிவற்ற கூட்டம்; பரிவுதப-அன்பு கெடும்படி; பிண்டம்-பொருள் தொகுதி; நச்சின்-விரும்பினால்]

# தமிழாசிரியர்களும் தமிழும்

" சோமலெ "

பேராசிரியர் முத்துசிவன் நினைவாக வெளிவரும் இம் மலர், தமிழாசிரியரைப் போற்றித் தமிழை வளர்க்க மேற்கொண்ட மொழிப் பணியாகும். எனவே, வருங்காலத்தில் தமிழ் வளர்ச்சியில் தமிழாசிரியர்கள் எவ்வாறு ஈடுபடவேண்டும் என்பதுபற்றிச் சில கருத்துக்களை இக்கட்டுரையில் தெரிவிப்பேன்.

சில ஆண்டுகளுக்கு முன்னர் தமிழாசிரியர்கள், ஆசிரியர் குலத்திலேயே கடையாகக் கருதப்பட்டனர். மாணவரும் உடன் ஆசிரியர்களும் உயர்நிலைப்பள்ளி - கல்லூரி ஆகியவற்றின் ஆட்சிக்குழுவினரும் அவர்களைப் புறக்கணித்தனர். திரைப் படங்களிலும் நாடகங்களிலும் தமிழாசிரியர்களைக் கேலி செய்வது வழக்கமாக இருந்தது.

திரு. தி. சு. அவிநாசிலிங்கம் அவர்கள் கல்வி அமைச்சரான பின்னர் தமிழாசிரியர்களுடைய ஊதியம் ஓரளவு உயர்ந்திருக்கிறது. கடந்த சில ஆண்டுகளாக அவர்களுக்கு மதிப்பும் மரியாதையும் ஏற்பட்டிருக்கிறது. தமிழாசிரியர்களுக்கு மாணவர்களிடம் செல்வாக்கு மிகுந்துவருகிறது. உடன் ஆசிரியர்களும் தாங்கள் பிற மொழி நூல்களைத் தமிழாக்கும்போதும், பொது மேடைகளில் பேசநேரும் போதும் தமிழ்ச் சொற்களைக் கையாளுவதற்குத் தமிழாசிரியர்களின் உதவியை நாடிவருகின்றனர். இன்று திரைப்படக் கதைகளையும் வசனங்களையும், தமிழாசிரியர் சிலர் எழுதிவருகின்றனர். எத்தனை பெரிய கல்லூரியிலும் தமிழாசிரியர்களைப் பண்டிதர் என்றே அழைத்துப் பண்டிதர்க்குரிய ஊதியத்தையே வழங்கிவந்த நிலை மாறி, இப்போது கல்லூரிகளில் ஏனைய துறைப் பேராசிரியர்கள், விரிவுரையாளர்கள் ஆகியோர்க்குக் கொடுக்கப் பெறுவதுபோலவே தமிழ்த் துறையிலுள்ள ஆசிரியர்கட்கும் ஊதியம் தரப்படுகிறது. இவ்வகையில் வழிகாட்டிய பெருமை சென்னை பச்சையப்பன் கல்லூரிக்கும், திருநெல்வேலி ம. தி. தா. இந்து கல்லூரிக்கும் உண்டு. தமிழுக்குப் பேராசிரியப் பதவி ஏற்படுத்திய சிறப்பு அண்ணாமலைப் பல்கலைக் கழகத்துக்கு உண்டு. அதைப் பின்பற்றிப் பல கல்லூரிகளில் இப்போது தமிழ்ப் பேராசிரியப் பதவிகள் ஏற்படுத்தப் பெற்றுள. கலை, புலமை, ஆராய்ச்சி என்று அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தார் தமிழ்ப் பகுதியை மூன்றாகப் பிரித்து ஒவ்வொரு துறைக்கும் ஒரு பேராசிரியக் கட்டிலை ஈராண்டுகளுக்கு முன்னர் நிறுவினர். மொழி நூலுக்கென ஒரு பேராசிரியப் பதவியைத் தொடங்கவும் இப் பல்கலைக் கழகம் முடிவுசெய்திருக்கிறது. சிறந்த தமிழாசிரியர் ஒருவர்க்கு "டாக்டர்" பட்டம் (ஆனரரி எல் எல் டி) வழங்கவும் அண்ணாமலைப் பல்கலைக்

கழகம் முடிவுசெய்திருக்கிறது. தமிழாசிரியர் சிலர் வானொலி ஆலோசனைக்குழுக்களில் உறுப்பினராக இருந்துவருகின்றனர். தமிழாசிரியர்களுடன் எவ்வகையான தொடர்பும் இல்லாமலிருந்த பல இதழ்கள் - கல்கி, ஆனந்த விகடன், தினமணிக் கதிர், சுதேசமித்திரன் வார இதழ் ஆகியவை-தமிழாசிரியர்களின் இலக்கியக் கட்டுரைகளைத் தொடர்ந்து வெளியிட்டு வருகின்றன. தூய தமிழ் நடையில் ஒரு நாள் இதழ் நடைபெற்று வருகின்றது. இவ் இதழைத் தமிழாசிரியர்களின் கட்டுரைகளும் கவிதைகளும் சிறப்பிக்கின்றன. மாநிலச் சட்டசபையில் கீழ் சபையில் ஒரு தமிழாசிரியர் உறுப்பினராக இருந்துவருகிறார். மேல் சபையில், ஆசிரியர்களுக்கென்று ஒதுக்கப்பட்டிருக்கும் இடங்களில் சிலவற்றையாவது, தமிழாசிரியர்கள் கைப்பற்றும் காலம் விரைவில் ஏற்படும்.

மனிதரை ஏதாவது ஒரு தொத்துநோய் பிடித்துக்கொள்வதை அனுபவாயிலாக அறிவோம். சில சமயம் அது நாட்டையும் சமூகத்தையும் தமிழாசிரியர்களையும் பற்றிக்கொள்கிறது. இராமாயணம் நடந்த கதையா? திருவள்ளுவர் பூணூல் போட்டிருந்தாரா? பெண்ணுக்குத் தாலி தேவையானல் ஆணுக்கும் ஒரு தாலி வேண்டுமா? என்ற வினக்களை எழுப்பிக்கொண்டு அவற்றுக்கு விடை கூறுவதில் செய்யும் ஆராய்ச்சியையும் சிந்தனையையும் குறைத்துக்கொள்வது நலம்.

தமிழாசிரியர்கள் தங்கள் முன்னேற்றங் கருதியும் மொழியின் வளர்ச்சி கருதியும் நாட்டின் நல்வாழ்வுக்காகவும் தங்களைப் பற்றித் தவறான கருத்துப் பரவ இடந்தரக்கூடாது. அவ்வப்போது ஆளுகின்ற கட்சியை ஆதரிப்பதென்ற முடிவுக்கு வருவதே சாலச் சிறந்தது.

தமிழாசிரியர்கள் தங்களுடைய பழக்கவழக்கங்களிலும் கருத்துக்களிலும் நூல் வழக்கை மட்டுமே ஒட்டிச் செல்லுவது இன்றைய அமைப்புக்கு ஏற்றதாகாது. உலக வழக்கை ஒட்டி வாழ்வதே நலம் தரும். சுய விளம்பரமும் சிறிதளவு செய்துகொள்ள வேண்டும். இன்றேல், இன்றைய பிரசார உலகத்தில் நாம் மடிந்து மாண்டுபோவோம்.

தமிழ் எழுத்தாளர் சங்கம், தமிழ் வளர்ச்சிக் கழகம், தமிழ் இசைச் சங்கம் ஆகியவற்றின் நிகழ்ச்சிகளில் தமிழாசிரியர்கள் கலந்துகொண்டு படிப்படியாகத் தங்கள் கருத்துக்களை வற்புறுத்த வேண்டும். ஒதுங்கியிருந்தால் நட்டம் அவர்களுத்தான். சென்னை உயர்நீதிமன்ற நீதிபதி சோமசுந்தரம் அவர்கள் தலைமையில் புதிதாக அமைக்கப்பெற்றிருக்கிற "தமிழ்க் கலைமன்றத்"தில் சேர்ந்து பிற நாட்டுப் பல்கலைக் கழகங்களுடன் தொடர்பு கொண்டு அதனல் தமிழாசிரியர் சிலர் பயனடையலாம்.

பல துறைகளில் தமிழாசிரியர்கள் இன்று நூல்கள் எழுதிவருகின்றனர். இது மிகவும் வரவேற்கத்தக்கதே. எனினும், வெளியீட்டாளர்களின் வலையில் சிக்கி, தமக்குத் தெரியாத பொருள்களைப் பற்றியும் எழுதலாம் என்ற பேராசையை வளர்க்கலாகாது. நாட்டில் பரவியுள்ள அறியாமையின் காரணமாக, ஒரு துறையில் எழுத வல்லவர் ஏனைய துறைகளிலும் எழுத இயலும் என்ற தவறான கருத்து நிலவி வருகிறது. ஆழமான படிப்பு வேறு; எழுதும் ஆற்றல் வேறு என்பதையும் இங்கே நினைவூட்ட விரும்புகிறேன்.

சங்க இலக்கியங்களின் கருத்துக்களை எளிய இனிய உரைநடையில் தமிழாசிரியர் பலர் தந்துவருகின்றனர். இந்த வகையில் இவர்கள் தொடர்ந்து தமிழ்ப்பணி செய்துவரவேண்டும். ஆனால் அவற்றில் வலிய நயங்காண வேண்டுவதில்லை. சைவசித்தாந்த நூல்களும் இனி இன்றியமையாது வேண்டப்படுவன அல்ல. இலக்கிய விமரிசன நூல்களையும், மொழி-வரலாறு-கல்வெட்டு ஆகிய ஆராய்ச்சி நூல்களையுமே மிகுதியாக எழுதத் தமிழாசிரியர்கள் முன்வரவேண்டும். ஏடுகளைச் சேகரிக்கும் தமிழாசிரியர்களும் அருமையாகவே உள்ளனர்.

இக் கால வாழ்க்கைக்குப் பிறமொழி அறிவு பொதுமக்கள் எல்லோர்க்குமே இன்றியமையாததாக இருக்கிறது. தமிழ்ப் புலமை சிறத்தற்குப் பிறமொழிப் பயிற்சி துணை புரியும். இப் பயிற்சி பிற மொழிகளிலிருந்து தமிழில் நூல்களைத் தரவும், தமிழ் நூல்களைப் பிற மொழிகளில் மொழிபெயர்க்கவும் பயன்படக்கூடிய அளவினதாக இருக்கவேண்டும்.

ஆங்கிலங் கற்ற தமிழறிஞர்கள் அமைதியாக இருந்தமையால், சிலப்பதிகாரத்தை திரு. வி. ஆர். இராமச்சந்திர தீட்சதர் ஆங்கிலத்தில் தரும் நிலை ஏற்பட்டது. ஆங்கில நூல்களைத் தமிழாக்குபவர்களுக்கு ஊக்கம் தந்து பொருளுதவி செய்யும் நிலையங்கள் பல உள்ளன. வெளிநாட்டுத் தூதுவர் அலுவலகங்கள் சிலவும் இதைத்தம் கடமையாகக்கொண்டுள.

சொற்பொழிவுகளைத் தமிழாக்கும் பணியிலும் தமிழாசிரியர்கள் ஈடுபடவேண்டும். சில மாதங்களுக்கு முன்னர், தமிழ்நாட்டில் ஒரு நகரத்துக்கு நமது தலைமை அமைச்சர் ஜவஹர்லால் நேரு வருகை புரிந்தார். அவருடைய ஆங்கிலப் பேச்சை மொழிபெயர்க்க ஒரு தமிழ்ப் பேராசிரியர் இசைந்திருந்தார். ஆனால், கூட்டம் தொடங்கும் நேரத்தில் அவரைக்காணோம். பிறகு ஒரு காங்கிரசுக்காரர் நேருவின் பேச்சை மொழிபெயர்த்தார். லட்சக்கணக்கான மக்கள் நிறைந்த கூட்டத்தில் செந்தமிழைப் பரப்பும் வாய்ப்பு நேரும்போது அதை நழுவவிடலாகாது.

வானொலியில் சொற்பொழிவாற்றுவதில் பலதடைகள் உள்ளன. குறித்த நாளில் குறித்த நேரத்தில் வானொலி நிலையத்திற்குச் செல்ல

CONNEMARA PUBLIC LIBRARY

வேண்டும். குறித்த நேரத்தில் பேச்சை முடிக்கவேண்டும் பேச்சை முன்னரே எழுதிக் கொடுக்க வேண்டும். பின்னர், அதை வெளியிடும் உரிமையும் இழக்கவேண்டும். இத்தனைத் தொல்லைகளுக்கும் ஈடாக அவர்கள் தரும் ஊதியம் மிகக்குறைவு. எனவே, வானொலியில் பேச வேண்டுமென்ற ஆர்வம் ஏற்படுவது அருமையாகிவிட்டது. எனினும் தமிழாசிரியர்கள் சோர்வடைவார்களானால், வானொலி இன்னும் அதிகமான அளவுக்குத் தமிழ்ப் பகைவர் கையில் சிக்கிவிடும்.

வட இந்தியாவிலுள்ள தமிழ்ச் சங்கங்கள் ஆங்காங்குள்ள ஏனைய மொழி மக்களின் தாய்மொழி ஆர்வத்தைப் பின்பற்றிக் கடந்த சில ஆண்டுகளாகத் தமிழ்ப் பணி செய்து வருகின்றன. அவர்களுடைய அழைப்புக் கிணங்கி, தமிழறிஞர்கள் கல்கத்தா, ஜாம்ஷெட்பூர், டில்லி, பம்பாய், புனா முதலிய நகரங்களுக்குச் சென்று தமிழ்ச் செல்வத்தை அவர்களுக்கும் வாரி வழங்க வேண்டும். வெளி இடங்களில் வாழும் நமது தமிழர்களிடத்திலும் ஏனைய மொழியாரிடமும் தமிழின் சிறப்பைப் பரப்புகின்ற ஒரு பேற்றைப் பயன்படுத்திக் கொள்ளவேண்டுவது நம் கடமை. தக்கவர்களை இங்கிருந்து வரவழைப்பதற்காக வடக்கே உள்ள சங்கங்கள் எவ்வளவோ முயன்றும் அந்த முயற்சிகள் எதிர்பார்த்த அளவு பயன் தருவதில்லை. இனியாவது இங்குள்ள தமிழன்பர்கள் திரு. முத்துசிவனரைப் பின்பற்றி வட நாட்டுச் செலவையும் இலங்கைச் செலவையும் மேற்கொண்டு இலக்கிய யாத்ரீகர்களாகச் செல்லுவார்களாக.

தமிழாசிரியர்கள் பொது மக்களுக்கு விளங்காத நடையில் எழுதி வருகிறார்கள் என்ற குறையை அடிக்கடி அன்பர் பலர் தெரிவித்துவருகின்றனர். இலக்கியம் மக்கள் கைக்கு மாறி வருகிறது என்பதையும், மொழி உணர்ச்சியும் கல்வி அறிவும் மிகுதியான பின்னர் மக்களுடைய தமிழறிவும் படிப்படியாக வளரும் என்பதையும் உணர்ந்து தமிழாசிரியர்கள் இலக்கணப் பிழை இல்லாத எளிய நடையில் செந்தமிழில் எழுதுவதோடு அமைவார்களாயின் இக்குறையும் நிறையாகும். புலவர்கள் போற்றினும் போற்றுவர்...........என்ற வழக்கும் பரவிவருகிறது. புரவலர்களைப் பாராட்டும்போது, அடைமொழிகளைக் குறைத்துச் செய்திகளை மிகுதியாகத் தெரிவிப்பது நலம். புலவர்களின் வறுமை குறைந்தால் இவ்வகையிலும் அவர்கள் சிறந்து விளங்க வழிபிறக்கும்.

இறுதியாக, இந்திய அரசியலாரின் கல்வி அமைச்சுத் துறையில் ஏற்பட்டிருக்கும் சாகித்திய அகாடமி என்ற நிறுவனத்தைப் பற்றித் தெரிவிக்க விரும்புகிறேன். இந்தியாவிலுள்ள 14 மொழிகளின் வளர்ச்சிக்காக இந்தக் கழகம் தொடங்கப்பெற்றிருக்கிறது. இம்மொழிகளுள் தமிழும் ஒன்று.

தமிழ் வளர்ச்சிக்காக சாகித்திய அகாடமி செய்துவரும் செயல்கள் சிலவற்றை மட்டும் சுட்டிக் காட்டுவோம்.

1947 ஆகஸ்டு 15க்குப்பின் வெளியான சிறந்த தமிழ் நூல் ஒன்றுக்கு ரூ. 5,000 பரிசாக வழங்கப்பெறும். தமிழின் சிறப்பையும் வரலாற்றையும் தெரிவிக்கும் ஒரு நூலை ஆங்கிலத்தில் வெளிவரச் செய்து அதை ஹிந்தியிலும் மொழிபெயர்த்து வெளியிட சாகித்திய அகாடமி ஏற்பாடு செய்திருக்கிறது. ஷேக்ஸ்பியரின் நாடகங்கள் சிலவற்றையும் வேறு சில பிறமொழி நூல்களையும் தமிழில் மொழிபெயர்க்க ஏற்பாடு நடைபெற்று வருகிறது. இவ்வாறே, தமிழ் இலக்கியத்தில் சில பகுதிகளைப் பிற மொழிகளில் மொழிபெயர்க்கவும் ஏற்பாடு தொடங்கியிருக்கிறது.

1953 - ஆம் ஆண்டில் தமிழில் வெளியான சிறந்த பாடல்களை-400 வரிகளை - பொறுக்கி எடுத்து பல மொழிகளில் அப்பாடல்களை வெளியிடவும் சாகித்திய அகாடமி முடிவுசெய்திருக்கிறது.

1901 முதல் 1953 வரை வெளியான சிறந்த தமிழ் நூல்கள்-இலக்கிய மதிப்பு நிறைந்த நூல்களின் பட்டியலையும் சாகித்திய அகாடமி உருவாக்கிவருகிறது. இப்பட்டியல் ஆங்கிலத்தில் அச்சிடப்பெற்று உலகிலுள்ள சிறந்த நூல் நிலையங்கள் எல்லாவற்றுக்கும் இந்திய அரசியலாரால் அனுப்பப்பெறும். இதன் பயனாக உலக நாடுகளில், நமது இலக்கியத்தைப் பற்றித் தெரியும் வாய்ப்பு ஏற்படும்.

இதுபோன்றே இன்னும்பல திட்டங்களை உருவாக்க சாகித்திய அகாடமி, டாக்டர் இராதாகிருஷ்ணனின் மேற்பார்வையில், ஜவஹர்லாம் நேருவின் கருத்திற்கிணங்கப் பணியாற்ற முயன்று வருகிறது.

சாகித்திய அகாடமியின் நிகழ்ச்சிகளில்கலந்துகொண்டு ஆக்க வேலையில் ஈடுபடுவது தமிழாசிரியர்களின் கடமை. அவர்கள் இதைச் செய்யத் தவறுவார்களேயாயின், சாகித்திய அகாடமியின் தமிழ்ப் பகுதியை இன்னும் அதிகமாகவே அரசியல்போர்வையுடன் இலக்கிய உலகில் புகழ்பெற முயலும் பெருமக்கள் கைப்பற்றிக்கொள்வார்கள்.

---

**என் ஆசை**

"பாலைப் பொழிந்துதரும் பசுவைப்போல் ஞானத்தைப் பொழிந்துதரும் பேச்சாளிகளே நாட்டின் தூண்கள். அவர்கள் இனம் பெருகவேண்டும். அவர்களுடைய சேவையால் அவனி தழைக்க வேண்டும். அதுவே என் ஆசை"

— முத்துசிவன்
(மேடைக்கலை - முகவுரை)

# கம்ப ராமாயணப் பதிப்பு

வித்வான் G. சுப்பிரமணிய பிள்ளை, M. A., B. L.
தமிழ் ஆராய்ச்சிப் பேராசிரியர், அண்ணாமலை நகர்.

இராமாவதாரத்தைப் பாடுவதற்கென்றே கவிச் சக்கரவர்த்தி கம்பன் அவதரித்தான். 'கல்வியிற் பெரியன் கம்பன்' என்ற சொல்வழக்கு கம்ப ராமாயணம் தோன்றிய காலத்திலேயே தோன்றி விட்டது. அது என்றும் நிலவி நிற்கும். ஒரு பெரிய அறிஞன் நாட்டிலே தோன்றினல், அந்த நாடும் அறிவிற் சிறந்து பெருமை யடையும். கம்பன் கவிதை தோன்றிய நாள் முதல் அதனைப் பலரும் பல இடங்களிலும் படிக்கத் தொடங்கித் தமது கல்வியறிவைப் பெருக்கிக்கொள்ளலாயினர். கம்பன் கல்வியிற் பெரியனதலால், தமிழ் நாடும் கல்வியிற் சிறந்து விளங்குவதாயிற்று. அதைத்தான் கவி பாரதியார், "கல்வி சிறந்த தமிழ்நாடு-உயர் கம்பன் பிறந்த தமிழ் நாடு" என்று காரண காரிய முறையில் வைத்து விளக்கிப் பாடினர். திருவள்ளுவரைப்போல் கம்பனும் தமிழுக்குச்செய்திருக்கும் தொண்டு அளவிடமுடியாதது. தமிழுக்குக் 'கதி'யாவார் கம்பனும் திருவள்ளு வரும் என்று கூறுவது வெறும் வார்த்தையன்று.

கம்பன் உலகப் பெருங் கவிஞர்களுக்குள்ளே மிகவும் தலைசிறந் தவன். கம்ப ராமாயணம் வான்மீகத்தின் மொழிபெயர்ப்புத்தானே என்று எளிதாய் நினைத்துவிடக்கூடாது. பெரியகாப்பியம் எழுதிய எந்தப்புலவனும்தன் சொந்தமாக எதையும் எழுதிவிடவில்லை. ஹோமர், வர்ஜில், ஷேக்ஸ்பியர், மில்டன் போன்றவர்களும், பிறமொழிகளில் அல்லது உலக வழக்கில் பயின்றுவந்த கதைகளைக் கொண்டே தமது காவியங்களை அழகுறப் பாடினர்கள். சிலம்புச் செல்வம் ஒன்றுதான் ஒரு மொழிபெயர்ப்பு நூலாகாது தமிழ் நாட்டுக்கும் தமிழ் மொழிக்கும் உரியதோர் ஒப்பற்ற நூலாய் மிளிர்கிறது. கம்பனுடைய வீறு கொண்ட புலமைத் திறனுக்கும், பரந்த கற்பனைக்கும், கடவுளுணர்ச் சிக்கும், கவியின் ஆற்றலுக்கும் ஏற்றதாகக் கிடைத்தது வான்மீகி இராமாயணம். அதனைக் கண்டவுடன் கம்பனின் உள்ளம் துள்ளிப் பாய்ந்தது, அதிலே ஈடுபட்டது. அத்தகைய அழகிய கதை தமிழில் இல்லையே! என்று எண்ணினன். தமிழில் அதை விடவும் சிறப்பாக, அழகாகத் தானே பாடலாம் என்ற துணிவு பிறந்தது. ஆசை வளர்ந் தது. தமிழ் நாட்டவர் மேல் அன்பு ஊறியது. தனது திறமையைக் காட்ட ஓர் அரிய வாய்ப்பு கிடைத்ததே எனும் எக்களிப்பு ஏற்பட்டது. கவிவெறி கொண்டான். வான்மீகி இராமாயணத்தைத் தமிழாகத் தனதாகப் பாடினன். ஓர் இரசவாதியின் கைபட்டதும் இரும்பு பொன்னுவது போன்ற இந்திர ஜாலம் நிகழ்ந்தது. கம்ப ராமாயணம்

தோன்றியது. அதில் வரும் கதாபாத்திரங்கள் எல்லாரும் தமிழ் நாட்டவராகித் தமிழரின் மேன்மைக் குணங்களையும், பழக்க வழக்கங்களையும் மேற்கொண்டு, தமிழெழில் விளங்கக் காட்சியளிக்கின்றனர். கோசல நாடே தமிழ் நாடாக, ஏன், சோழ நாடாக மாறிவிடுகிறது.

தமிழ் மொழியிடத்தும், தமிழ் நாட்டிடத்தும் உண்மைப்பற்றுக் கொண்ட எவரும் கம்பனைப் போற்றாமல் இருக்கமுடியாது. கம்ப ராமாயணத்தால் தமிழ் மொழி பன்மடங்கு உயர்வும், பெருமையும், மேன்மையும், இனிமையும், செழுமையும் அடைந்திருக்கிறது. கம்பனுக்குத் தமிழ் மொழியினிடத்தே மட்டற்ற மதிப்பும், அன்பும், பற்றுதலும் உண்டு. என்றுமுள தென்றமிழை இயம்பியிசை கொள்ளவே பிறந்தவன் கம்பன். உலகிற் சிறந்த மொழிகள் எல்லாவற்றினுள்ளும் மிகச்சிறந்ததோர் மொழியாகத் தமிழைச் சிவபெருமானே படைத்தார் என்று கம்பன் பாடியுள்ளான். அவனுடைய சிவபத்தியின் சீலம் அவன் காவியத்தில் நூற்றுக்கணக்கான இடங்களில் வெளிப்படுகிறது. தமிழ் நாட்டிடத்தே பற்றுக்கொள்வதில் கம்பன் எந்தத் தமிழனுக்கும் பின்வாங்கியவனில்லை.

“அத்தி ருத்தகு நாட்டினை யண்டர்நாடு
ஒத்தி ருக்குமென் றாலுரை யொக்குமோ
எத்தி றத்தினும் ஏழுல கும்புகழ்
முத்து முத்தமி ழுந்தந்து முற்றுமோ.”

என்று தனது இராமாயண நூலகத்துக் கம்பன் பாடியுள்ளான், வேறு எந்தத் தமிழன் இவ்வாறு பாடினான்?

ஆனால் உண்மையான கம்பனைத் தமிழுலகம் இன்னும் காணவில்லை. கம்பனுடைய உருவச்சிலை விகாரமடைந்து, பாசி பிடித்துத் தூசி குவிந்து, மாசு படிந்து, துரு ஏறிச் சிதைவுற்றுக் கிடக்கிறது. இந்த நிலையிலே குன்றிக்கிடக்கும் கம்பனின் உருவமே இவ்வளவு சிறப்புடன் இலங்கி நம் உள்ளத்தைக் கவருவதாயிருக்குமானால், அவன் படிவம் தூய்மை செய்யப்பட்டுத் தன் இயல்பான ஒளியோடும் எழிலோடும் பிரகாசிக்கத் தொடங்கும் பொழுது, இன்னும் ஆயிரம் மடங்கு ஏற்றம் பெற்று விளங்கும் அல்லவா? இத்தகைய புனிதமான திருப்பணியிலேதான் இப்பொழுது அண்ணாமலைப் பல்கலைக் கழகத்துத் தமிழ் ஆராய்ச்சித் துறை ஈடுபட்டிருக்கிறது.

ஒரு திருத்தமான கம்பராமாயணப்பதிப்பு வெளிவரும்பொழுது தான் தமிழுலகமும் வெளியுலகமும் கம்பனை நன்றாக அறிந்து சுவைக்க முடியும். அப்பதிப்பு வேலையை எவ்வாறு செய்ய வேண்டுமெனின், கிடைக்கக்கூடிய கம்பராமாயண ஏட்டுச் சுவடிகள் அனைத்தையும் திரட்டி வைத்துக்கொண்டு, ஒவ்வொரு ஏடாக, ஒவ்வொரு பாட்டாக, விடாமல் அனைத்தையும் நன்கு படித்துப் பாடபேதங்களைக்

குறிக்கவேண்டும். இவ்வாறு ஏடுபடிக்கும்பொழுது, ஒவ்வொரு பகுதிக்கு, ஒவ்வோர் ஊருக்கு, ஒவ்வொரு பிராந்தியத்திற்கு ஓர் ஏடு, அல்லது இரண்டு ஏடு பார்த்தால்போதும் என்று மற்ற ஏடுகளைப் புறக்கணித்துவிடக்கூடாது. திருத்தமாகத் தெரியக்கூடிய ஓர் ஏட்டில் பல பாடல்கள் உள்ளே பிழைபட்டுக் கிடக்கக்கூடும். பிழைபட்டதாகத் தோன்றக்கூடிய ஓர் ஏட்டில் திருத்தமான பல பாடல்கள் கிடைக்கக்கூடும். ஓர் ஏடு மற்றோர் ஏட்டின் பிரதியாக முதலில் தோன்றக்கூடும். ஆதலால் அதைப்படிக்க வேண்டாம் என்று விட்டுவிடக்கூடாது. அது போகப்போக மாறுபட்டு வேறொரு விதமாகத் திரும்பக்கூடும். எனவே, ஒன்றையும் ஒதுக்கிவிடாது எல்லா ஏடுகளையும் படித்துப் பாடம் எடுத்து ஆகவேண்டும். ஒரு சுவடியில் பதினாயிரம் பாடல்களைப் படித்துப் பார்த்ததில் ஒரேஒரு திருத்தமான பாடம் கிடைத்தது. ஆனால் அந்த ஒரு பாடமும் ஒருகோடி பொன் கிடைத்ததுபோன்ற மகிழ்ச்சியை உண்டாக்கியது. இந்த ஒருபாடம் கிடைப்பதற்காக நாலைந்து மாதங்களாய் ஒரு சுவடியைப் படித்துக் காலத்தை வீணாக்குவதா என்று விட்டிருந்தால், வேறு எந்த ஏட்டிலும் கிடைக்கக்கூடாத அந்த ஒருபாடம் நமக்குக்கிடையாமலே தொலைந்திருக்கும்.

ஆகவே, கம்பராமாயணப் பதிப்பு வேலைக்கு, ஏடுபடித்து ஒப்புமை நோக்கிப் பாடவேறுபாடுகளைக் குறிப்பதுதான் முதன்மையான அடிப்படை வேலை. இவ்வேலையை யாரும் எவரும் செய்துவிடலாம் என்று விட்டுவிடுவதும், எளிதென்று கருதுவதும் பெரும்பிழையாகும். ஒரு மாளிகை கட்டுவதற்கு அதன் அடிவாரத்து வேலை எவ்வளவு முக்கியமோ, அதுபோன்று திருத்தமான கம்பராமாயணப் பதிப்பு வெளிவருவதற்கும் ஏடு படிக்கும் வேலை மிக முக்கியம். தமிழ்க் கல்வியிற் சிறந்து இவ்வேலையிற் பழகிய தக்கோர்களே இவ்வேலையைக் கைக்கொள்ள வேண்டும். பயிற்சியில்லாத மாணாக்கர்களையும், கூலிவேலைக் குமாஸ்தாக்களையும் கொண்டு இவ்வேலையை நடத்திவிடுதல் கூடாது. டாக்டர் சுவாமிநாத ஐயர் அவர்கள் என்னபாடு பட்டாவது தாமே ஏடுகளைப் பரிசீலனை செய்வது என்ற நியதியைக் கையாண்டதாலேதான் பல நல்ல நூல்களைத் தமிழுலகிற்கு அளிக்க முடிந்தது. ஏடுபடிப்பவர்கள் தமிழ் மொழியிடத்துப் பற்றுடையவர்களாய்க் கம்பராமாயணத்திற்கு நல்லமுறையில் ஒரு பதிப்பு வெளிவர வேண்டுமே என்ற ஆத்திரத் துடிப்பு உள்ளவர்களாய்க் கடமையுணர்ச்சி பெற்றவர்களாய் அமைய வேண்டும். எப்படியாவது வயிற்றுப் பிழைப்பை நடத்தினாற் போதும் என்ற எண்ணம் உள்ளவர்களை இவ்வேலையில் விட்டால், நமக்கு நல்ல திருந்திய பாடங்கள் கிடைக்காமல் தொலைந்தே போகிவிடும். பழைய ஏடுகளில் றகர ரகங்கள், லகர வகரங்கள், ழகர ளகரங்கள், புள்ளியில்லாத ஒற்றுக்கள், கால்கள், எல்லாம் குழம்பிக்கிடக்கும். நெட்டெழுத்துக்குப்பதில் குற்றெழுத்துக்களே எழுதப்பட்டிருக்கும். எழுத்துக்களின் தலையில் எழுத்தாணியால் ஒரு புள்ளி இலேசாக இடப்பட்டு அடித்தல்கள் நடந்திருக்கும். பூச்சிகள் துளைத்த துளைகளாலும் புள்ளிகள் போன்று அரித்தல்கள் நடந்திருக்கும். நாம்

முன்னல் மனனம் பண்ணின பாடங்கள் வந்து ஏட்டுப் பாடங்களை மறைத்து ஏமாற்றிவிடக்கூடும். முக்குணவசத்தான், மனிதனின் மனநிலை மாறி மயக்கமுறும் நேரங்களும் உள. இடையே மெய்மறந்த தூக்க நிலையும் ஏற்படக்கூடும். விரைவில் வேலையை முடிக்க வேண்டும் என்ற நிலையில், உணர்ந்து கொள்ளாமலே பல பாடல்கள் தள்ளப் பட்டுவிடும். பொருளுணர்ச்சியில்லாமல் ஒரு பாடலையும் கடக்கக் கூடாது என்ற உறுதிப்பாடு வேண்டும். சில இடங்களில் எழுத்துக்கள் தெரியாமல் திரிந்து கிடக்கும் அல்லது மங்கிக் கிடக்கும். அவற்றைச் சிரமம் எடுத்துத் தெளிய வேண்டும். தெரியாதவற்றை அருகிலுள்ள அறிஞர்களிடம் காட்டித் தெரிந்துகொள்ள வேண்டும். சிரமம் எடுக்கச் சோம்பியும், கேட்டுத்தெரிய நாணியும், பல பாடங்கள் பாழாய்ப்போய் விடக்கூடும். இவை நிகழாதவாறு பார்த்துப் பாடங்களைக் குறிக்க வேண்டும். பாடங்களைக் குறிக்கும்பொழுது ஏற்படக் கூடிய தவறுகள் மிகப்பலவாகும். அவற்றை ஒருமுறைக்கிருமுறை திருப்பிப் படித்தும், பிறரைக்கொண்டு பார்க்கச் செய்தும் செப்பனிட்டுக்கொள்ள வேண்டும். பின்னும் பலமுறை அதே ஏட்டைப் புரட்டிப் பார்க்கும்படியும் நேரலாம். அதற்குச் சோம்பி வாளா இருந்துவிடக் கூடாது. இவ்வாறு அரிதிற் சேர்த்த பாடங்களைக் கொண்டு, பின் திருத்தமான பாடத்தைக்காண முயலவேண்டும்.

இப்பொழுது அச்சாகி வந்திருக்கும் புத்தகப் பாடங்களையும், அவற்றுக்கு எழுதப்பட்டிருக்கும் உரைகளையும் சீர்தூக்கி, ஒவ்வாதனவற்றையெல்லாம் தனியே எடுத்துத் தொகுக்கவேண்டும். அவற்றை ஏனைய ஏட்டுப்பாடங்கள் எந்தவிதத்தில் திருத்த முடியும், அத்திருத்தத்தால், பாடல் எவ்வாறு விளக்கம் பெறுகிறது, எதுகை மோனை சீர்தளைகள் எவ்வாறு இயைந்து பொருத்தம் காண்பிக்கின்றன, அவற்றிற்கு முன் பின் பகுதிகளில் ஒப்புமை ஆதாரவுகள் இருக்கின்றனவா, பிறநூல்களிலிருந்து ஏதேனும் விளக்கம் கிடைக்குமா, கம்பன் அவ்வாறு பாடியிருக்க முடியுமா என்பனவற்றையெல்லாம் நிதானமாகவும், காய்தல் உவத்தல் இன்றியும், சுவையுணர்ச்சியுடனும் சிந்தனை செய்து, பலரோடும் விவாதித்துத் தடைவிடைகளான் ஆராய்ந்து ஒரு முடிவுக்கு வரவேண்டும். பெரும்பாலும், கம்பனுடைய உண்மைப்பாடம் நமக்குக் கிடைத்துவிட்டால் போலிகள் எல்லாம் புறக்கென்று மங்கிவிடும். இருந்தாலும், பல இடங்களில், பாடபேதங்களின் குவியலுக்குள்ளே உண்மைப் பாடத்தைக் கண்டுபிடிப்பது, இந்திரப் பிரத்தத்தில் பாண்டவர் நிருமிய பளிக்குமாளிகையினுள் துரியோதனன் பட்ட பாடாகவே இருக்கும்.

" கம்ப ராமாயணம்தான் பலராலும் உரையெழுதப்பட்டுப் பல பதிப்புக்களாக அச்சாகி வெளிவந்துள்ளதே, இன்னும் என்ன திருத்தம் அடையவேண்டியிருக்கிறது? " என்று சிலர் எண்ணக்கூடும். நூற்றுக்கு எழுபத்தைந்துக்கு மேலான பாடல்களும் உரைகளும் இன்னும் திருத்தம் பெறவேண்டிய நிலையில் உள்ளன என்று சொன்னல், அது

மிகையாகாது. அதற்குக் காரணம் நல்ல பாடங்கள் கிடையாமையும், கிடைத்த பாடங்களுக்குத் தக்கவாறு ஏதாவது உரை எழுதினற் போதும் என்ற எண்ணமுமேயாகும். எடுத்துக்காட்டாக ஒரு சில வற்றை இங்குக் காண்போம். சுந்தரகாண்டம், கடல்தாவுபடலத்தில், 78-ம் ஆம் பாடல் வருமாறு :-

> " துண்டப் பிறைத்துணை யெனச்சுட ரெயிற்ருள்
> கண்டத் திடைக்கறை யுடைக்கடவுள் கைம்மா
> முண்டத் துரித்த வுரியாண் முளரிவந்தான்
> அண்டத் தினுக்குறை யமைத்த பிலவாயாள்."

இப்பாடலின் நடுவிரண்டடிகளுக்கு, "கழுத்தில் விஷக்கறையை யுடைய பரமசிவன்போல, துதிக்கையை யுடைய யானையினது உடலி னின்று உரித்தெடுத்த தோலைப் போர்த்திக்கொண்டிருப்பவளும்" என்று உரையெழுதப்பட்டிருக்கிறது. பிறரெவராலும் செய்தற்கரிய செயலைச் செய்பவன் சிவபெருமான் என்று காட்டவே, சிவன் யானைத் தோலைப் போர்த்துக் கொண்டிருக்கிருன் என்று கூறப் பட்டது. 'யானையின் பசுந்தோல் பிறருடம்பிற்பட்டாற் கொல்லு மென்றுணர்க' என்று நச்சினர்க்கினியரும், சீவக சிந்தாமணி 2787ம் பாடலின் உரையில் எழுதியுள்ளார். அத்தகைய அரிய செயலை அங்காரதாரை யென்ற அரக்கியும் செய்தாள் என்று கூறுவதால், அங்காரதாரை சிவபெருமானையொத்த ஆற்றலையுடையவள் என்ருகி விடும். கம்பன் இவ்வாறு தன் புராண அறிவுக்கு இழுக்கு உண்டா கும் வண்ணம் பாடியிருப்பான? மாட்டான். பின் இப்பிழை எவ்வாறு நேர்ந்தது? நாம் பல ஏட்டுப் பிரதிகளையும் பார்க்கும்பொழுது, சில ஏடுகளில், மூன்ருவது வரியில், உரியான் என்ற பாடமும் வருகிறது. உரியால் என்பதிலுள்ள லகர ஒற்று, முளரி என்ற வருமொழிக்கு முன், இலக்கண விதிப்படி, னகர வொற்ருக மாறியுள்ளது. கண்டத் திடைக் கறையுடைக் கடவுளாகிய சிவன் யானையை உரித்தெடுத்த தோலைக்கொண்டு, முளரிவந்தானகிய பிரமன் இவ்வண்டகோளத்தி னுக்கு ஓர் உறை அமைத்ததுபோன்றிருந்தது அங்காரதாரையின் வாய் என்று அவ்வரக்கியின் வாயின் பெருமையை எடுத்துப் பேசு கின்ருன் கம்பன். யானையின் தோலை உரிப்பது வேறு எவருக்கும் ஆகாது. ஆகையால், சிவன் உரித்த தோலைப் பிரமன் கொண்டு உறை அமைத்தது போன்றிருந்தது என்று கவி பாடினன் எனக. எனவே, 'உரியால்' என்ற பாடமே பொருந்துவதாகும். அதுவே திருந்தியபாடம். 'உரியால்' என்பது 'உரியான்' என்று ஆகிப்பின், ஏடு படிப்போர்களும் எழுதுவோர்களும் பொருளையுணரமாட்டாத நிலையில், உரியான் என்பது ஆண் பால் எனக்கொண்டு, இங்கு பேசப்படும் அங்காரதாரை பெண்பால் ஆகையால் அப்பெண்பாலுக் கேற்ப உரியாள் என்று திருத்த இலக்கணப் புணர்ச்சி விதிப்படி ளகர வொற்று ணகர வொற்ருக மாறி, ஏடுகளிற் பாடமாக ஏறி விட்டது. அப்பாடத்திற்கியைய உரையும் எழுதப்பட்டு விட்டது.

அடுத்தபடியாக, ஊர்தேடு படலத்தில் 11-ம் பாடலைப் பார்ப்போம்:

"போரி யைந்தன தோற்றவென் றிகழ்தலிற் புறம்போய்
நேரியன்றவன் றிசைதொறு நின்றமா நிற்க
ஆரி யந்தனி யைங்கரக் களிறுமோ ராழிச்
சூரி யன் றனித் தேருமே யிந்நகர் தொகாத."

இலங்கையிலுள்ள யானைப்படை தேர்ப்படைகளின் மிகுதியைக்கூற எழுந்தது இப்பாடல். இதில், 'ஆரியந் தனியைங்கரக் களிறும்' என்பதற்கு, "மேன்மையான ஒப்பற்ற ஐந்து கைகளையுடைய விநாயகக் கடவுளாகிய யானையும்" என்று உரை கூறப்பட்டுள்ளது. இவ்வுரையை இதுவரை தவறென்று கூறுவார் எவரும் இல்லை. பதிப்புக்களும் ஒன்று, இரண்டு, மூன்று, நான்கு என்று பலமுறை அச்சாகியும் எதுவும் திருத்தப்படவில்லை. விநாயகக் கடவுள் யானை முகக் கடவுளே; ஆனல் அவர் யானையாக மாட்டார். வாகனமும் ஆக மாட்டார். விநாயகரையும் திக்கு யானைகளோடு சேர்த்து எண்ணி, இலங்கை யானைகளுடன் வந்து சேராதவை இவையே என்று கம்பன் பாடுவானு என்பதை நாம் சிந்தனை செய்ய வேண்டும். ஆயின், இதற்குத் திருந்திய பாடம் எதுவென ஆராயின், 'ஆரியன் தனித் தெய்வமாக்களிறும்' என்று ஒருபாடம் கிடைத்திருக்கிறது. அதற்குப் பொருள்: "ஐயனருடைய தெய்வத்தன்மை வாய்ந்த பெரிய வாகனமாகிய யானையும்" என்பதாகும், இப்பாடமும் இப்பொருளுமே ஏற்புடையன என்பதை அறிஞர்கள் ஒப்புக்கொள்வார்கள்.

மற்றொரு பாடலை நோக்குவோம். நிந்தனைப் படலத்தில் 8-ஆம் பாடலின் முன்னிரண்டடிகள் வருமாறு:

"சன்னவீ ரத்த கோவைவெண் டரள மூழியி னிறுதியிற் றனித்த
பொன்னெடு வரையிற் றோற்றிய கோளு நாளுமொத் திடையிடை
பொலிய"

இதில், இராவணன் மார்பில் அணிந்திருந்த பொன்னாரத்தில் பதிக்கப் பெற்ற முத்துக்கள் எவ்வாறு காட்சி அளித்தன என்பது முதலிரண்டடிகளிற் கூறப்படுகிறது. அவை ஊழியினிறுதியில் மேருமலையிற் காணப்பட்ட கிரகங்களையும் நட்சத்திரங்களையும் ஒத்திருந்தனவாம். இரண்டாவது வரியில் 'பொன்னெடு வரையில் தோற்றிய' என்று பாடம் வந்துள்ளது. எல்லா அச்சுப் பிரதிகளிலும் இந்தப் பாடமே காணப்படுகிறது. ஆனல் வானத்திலுள்ள நாள்களும் கோள்களும் மேருமலைமேற் காணப்படுவானேன்? அதற்குத் 'தோற்றிய' என்ற சொல் விளக்கம் தரவில்லை. ஏடுகளில் 'தொத்திய' என்ற பாடமும் வருகிறது. வான்கெட்டு மாருதமும் மாய்கின்ற ஊழிக்காலத்தில் சலியாது கடைசியில் நின்ற மேருமலையைப் பற்றுக்கோடாக எண்ணி

நாள்களும் கோள்களும் தொத்திக்கொண்டு தப்பவழிதேடுமாம். ஆகவின் 'தோற்றிய' என்ற பாடத்தைவிட, 'தொத்திய' என்ற பாடமே சிறக்கும். இதுவே திருந்திய பாடம் என்பதை வலியுறுத்துவதற்கு யுத்த காண்டத்துச் செய்யுள் ஒன்றையும் நாம் நோக்கி ஒப்புமை காணுதல் வேண்டும். யுத்த காண்டத்துப் பிரமாத்திரப் படலத்து 117-ஆம் செய்யுளில்,

"ஒத்தக்கடை யுகமுற்றுழி யுறுகால்பொர வுடுமீன்
தொத்தப்பொலி கனகக்கிரி"

என்று கம்பன் பாடிச் செல்வது எவ்வளவு பொருத்தமாய் இருக்கிறது பாருங்கள்! இங்குத் 'தொத்த' என்பது எதுகையிலே கிடக்கிறது. பல ஏடுகளில் 'தொத்த' என்பது 'தொற்ற' என்றே எழுதப்பட்டிருக்கும். தகரத்திற்குப் பதில் றகரத்தை எழுதுதல் ஒரு வழக்கம். அதனைக் கூர்ந்து நுனித்தறிதல் வேண்டும்.

ஆரணிய காண்டம், சூர்ப்பநகைப்படலம், 90-ஆம் பாடல் வருமாறு:

"விடியல் காண்டலி னீண்டுதன் னுயிர்கண்ட வெய்யாள்
படியி லாண்மருங் குள்ளள வெனையவன் பாரான்
கடிதி னோடினெ னெடுத்தொல்லைக் கரந்தவள் காதல்
வடிவி னானுடன் வாழ்வதே வாழ்வென மதியா."

இப்பாடலின் பின்னிரண்டடிகளுக்கு, "விரைவாக ஓடிச்சென்று சீதையை எடுத்துக்கொண்டுபோய் விரைவிலே மறைத்து வைத்துவிட்டு அவளது ஆசைவடிவமான அவனுடனே (அல்லது சீதையாற் காதலிக்கப்பட்ட வடிவழகுடையானாகிய இராமனுடனே) கூடி வாழ்வதே சிறந்த வாழ்க்கையாம் என்று எண்ணி" (னாள் சூர்ப்பநகை) என்று கூறப்படுகிறது. சூர்ப்பநகை சீதையின் வடிவழகிலே இராமன் முற்றிலும் ஈடுபட்டிருக்கிறான் என்பதை நன்குஉணர்ந்துகொண்டாள். தன் வடிவை அவன் விரும்பவில்லை என்பதும் தெளிவு. எப்படியாவது இராமனை அடையவேண்டும் என்பது சூர்ப்பநகையின் குறிக்கோள். அவளுக்கோ வேண்டும் உருவம் எடுக்கத் தெரியும். இந்த நிலையில், சீதை காதலிக்கும் கட்டழகுடையான் இராமன் என்ற பொருள்பட, 'அவள் காதல் வடிவினானுடன்' என்று அரக்கி கூறியிருப்பாளா? என்பது சிந்திக்க வேண்டிய தொன்று. இராமன் காதலிக்கும்படியான பேரழகுடையவள் சீதையென்பதே அரக்கியின் எண்ணமே யொழிய, சீதை காதலிக்கும் அழகுடையவன் இராமன் என்பதன்று. இந்த நிலையில் சில ஏடுகளில், ஈற்றடியில் "வடிவினாலுடன் வாழ்வதே" என்ற பாடம் கிடைக்கிறது. இராமனால் காதலிக்கப்பட்ட அந்தச் சீதையின் வடிவத்துடனே என்பது இதன்பொருள். எந்த விதத்திலும் இராமனையடைந்துவிட முற்பட்ட சூர்ப்பநகை,

சீதையை மறைத்துவிட்டு, அவள் வடிவத்தைத் தானடைந்து, சீதை போலவே நடித்து இராமனுடன் வாழவேண்டும் என்று திட்டமிட்டாள். அவள் மிகவும் பொல்லாதவள். நல்லகாலமாக இலக்குவன் இடை மறித்து அவள் சதித்திட்டத்தைச் சிதரவடித்துவிட்டான். இப்புதிய கருத்து இப்புதிய பாடத்தால் இப்பொழுது நமக்குக் கிடைக்கிறது. இதுவரை இது கிடைத்ததில்லை. அச்சிலுள்ளபாடம் பொருத்த முடையதாயில்லை. பொருளும் சிறக்கவில்லை. இதுபோன்று நூற் றுக்கணக்கான திருந்திய பாடங்கள் இதுவரை நமக்குக் கிடைத்துள் ளன. இன்னும் ஆயிரக்கணக்கானவை கிடைக்கும் என்ற நம்பிக் கையும் இருக்கிறது. இதற்குத் தமிழ்ப் பெருமக்களுடைய ஆதரவும் அன்பும் பெரிதும் வேண்டும்.

---

## பேச்சும் - பிரசங்கமும்

பேச்சு என்பது ஒருவரோடோ அல்லது ஒரு சிலரோடோ பேசுதல் என்பதாகும். பிரசங்கம் என்பது பலரிடையே பேசுத லாகும். பேச்சு என்பது நெகிழ்ந்த போக்குடையதாக இருக்கும். பிரசங்கம் என்பது கட்டுப்பாடுடையதாக இருக்கும். பேச்சில் அதிகப்படியான ஆசாரத்தைக் கலந்து கொள்ளவேண்டிய நிர்ப்பந் தம் கிடையாது. ஆனால் பிரசங்கத்தில் நல்லபடியாக ஆசாரத்தைக் கலந்துகொள்வது அவசியமாகின்றது. பேச்சில் உணர்ந்ததை உணர்ந்தவாறு தெரிவித்தால் போதுமானது. ஆனால் பிரசங்கத் திலோ உணர்ந்ததை உணர்ந்தவாறும் தெரிவிக்கவேண்டும் ; அத் தோடு உணர்த்தும் வகையிலும் தெரிவிக்கவேண்டும். பேச்சில், கேட்கின்றவனைக் கேட்கின்றவனாகவே மதிக்கலாம். ஆனால் பிரசங் கத்திலோ கேட்கின்றவனை மதிப்பிடுவோனாக மதிக்கவேண்டும். பேச்சில், கேட்கின்றவன் நாம் கூறுவதைக் கேட்கத்தான் செய்கின் றான் என்ற நம்பிக்கையை **வலிந்து** எதிர்பார்க்கவேண்டிய அவசி யம் கிடையாது. ஆனால் பிரசங்கத்திலோ, கேட்கின்றவன் நம்மை விருப்புடன் கேட்கின்றான் என்ற நம்பிக்கை தடிக்கத் தடிக்க மிக்க உத்சாகத்துடன் பேசக்கூடிய மனத்தெம்பு சித்தியாகும். இதுகாறும் கூறிவந்தவைகளின் மூலம் பிரசங்கம் செய்வதென்பது ஓர் பெரிய கலையே அன்றி, வாய்க்கு வந்ததைப்பேசும் பஞ்சு வெட்டுத் தொழில் இல்லை என்பது நமக்குத் தெளிவாகின்றது.

**— முத்துசிவன்**
(மேடைக்கலை 6 - 7)

# எழுத்தின் வரலாறு

டாக்டர். அ. சிதம்பரநாதன், எம். ஏ., பி. எச். டி.
தமிழ்ப் பேராசிரியர், அண்ணாமலை நகர்.

எழுத்து என்பது எழுதப்படுவது என்ற பொருளுடையது. எழுத்து என்றாலோ, எழுதுதல் என்றாலோ நாம் அனைவரும் ஒரு வரி வடிவத்தை உடனே நினைக்கிறோம். எழுத்து என்றதும், அச்சடித்த எழுத்தும், மைகொண்டு பேனாவால் எழுதப்பட்ட எழுத்தும், சுண்ணாம்புத்துண்டு கொண்டு கரும்பலகையில் எழுதப்பட்டஎழுத்தும், குச்சியினால் சிலேட்டில் எழுதப்பட்ட எழுத்தும், எழுத்தாணியால் ஓலையில் எழுதப்பட்ட எழுத்தும் விரைவில் நம்கண்முன்னே தோன்றி விடுகின்றன. எழுத்து என்றதும், இந்த எழுத்துக்களைப் பற்றி நாம் இன்று எளிதில் நினைத்துவிடுகிறோம். ஆனால், நம்முடைய மூதாதை யர்கள் உலகில் எந்தத் திசையில் இருந்தவராயினும் அவரெல்லாம் எழுத்து இன்னது என அறியமாட்டாது இருந்த நெடுங்காலம் உண்டு என்பதை அறிதல் வேண்டும். ஆதியில், மனிதன் நாம் எழுதுமாறு போல எழுதுதற்குக் கற்றுக்கொண்டவன் அல்லன். காட்டிலும் வெளி யிலும் மனிதன் முதலில் அலைந்து திரிந்து பல ஒலிகளை வாளா எழுப்பி, நாளடைவில் அவ்வொலிகளுக்குப் பொருள் உண்டாக்கிக் கொண்டான். சமுதாயக் கூட்டுறவால், சமுதாய முயற்சியால் பேசும் மொழி நாளடைவில் எழுந்தது. அப்பேச்சினை, அந்தச் சொற்களை எழுதிக் காட்டத் தலைப்பட்ட காலம் பிந்தியதேயாகும்.

புலி வடிவத்தைக் கண்டவுடனே புலி யென்றே கிலி பிடித்த மக்கள் முற்காலத்தில் மிகுதியாக வாழ்ந்திருத்தல் வேண்டும். அந்தக் காட்டுமிராண்டிக் காலம் கழிந்த பிற்பாடு, விலங்குகளை விரட்டி யடித்தல் விலங்குகள் போன்று வடிவம் வரைவதால் இயலும் என மக்களிற் சிலர் நினைக்கலாயினர். அன்றி, விலங்குகளைப்போல வரைவதால் அவற்றைத் தம் பக்கம் வசப்படுத்திக் கொள்ளுதல் இயலும் என நம்பினபேரும் உண்டு. உதாரணமாக, புலி போன்ற வடிவத்தைத் தமது ஆயுதத்திற் செதுக்கிக் கொள்வதால் புலியாகிய பகையைத் தவிர்ப்பதற்கு வழிகண்டதாக நினைத்த மக்கள் உண்டு. இந்த நிலை மாறி, புலியென்ற வடிவம் வரைந்தால் புலியென்ற பொருளைக் குறிக்கிறோம், புலியென்ற ஒலியைக் குறிக்கிறோம் என்ற எண்ணம் மக்கட்கு எழுதற்கு எத்தனையோ நெடுங்காலம் ஆகி யிருத்தல் வேண்டும்.

மக்கள் தாம் தாம் கருதுகின்ற பொருள்களின் வடிவத்தை வரைதற்கு முன்னால், அப்பொருள்களைக் குறிக்க அப்பொருட்களை

அப்படியே கொடுத்துவிட்ட நிலையொன்று உண்டு என அறிகிறோம். உதாரணமாக, பெர்சியா தேசத்து மன்னன் டரையஸ் என்பானுக்குச் சித்தியர்கள் ஒரு தூது அனுப்பினதாக ஹெரொடட்டஸ் என்னும் சரித்திர ஆசிரியர் குறிப்பிட்டிருக்கின்றார். பகைவர்கள் அஞ்சியோடிப் பதுங்காவிட்டால் இறந்துபடுவர் என்பதே அத்தூதின் செய்தி. ஆனால், இஃது எழுத்தில் எழுதப்பட்டதன்று. ஓர் ஆள் வசம் தவளை, எலி, பறவை, அம்புகள் ஆகியவை அனுப்பப்பட்டன. இவை குறித்த கருத்து என்ன என்றால், பகைவரெல்லாம் தவளைகள்போலத் தண்ணீருட் பதுங்காவிட்டால், எலிகள்போல வளைகளுள் நுழையாவிட்டால், பறவைகள் போல விண்ணிடைப் பறக்காவிட்டால் அம்புகளாற் கொல்லப்படுவர் என்பதே. எனவே, எழுத்துவழியே கருத்தினைப் புலப்படுத்த மக்கள் கற்றுக்கொள்ளுதற்கு முன்பு அவ்வப் பொருட்களை அறிகுறி வகையான் ஆண்டனர் என்பது விளங்கும்.

இவ்வாறெல்லாம் பலமுறைகளில் தட்டுத் தடுமாறிய பின்பே, கருத்தைத் தெரிவிக்க எழுத்து தக்கதொரு கருவியென்பது கண்டு பிடிக்கப்பட்டிருக்கும். அந்த எழுத்துத் தானும், முதலில் சித்திரங்களாகவே இருந்தன எனச் சொல்லப்படுகின்றது. தன் முன்னே நிகழும் ஒரு நிகழ்ச்சியைக் காணுகின்ற பண்டை மனிதன் அவ்வாறே அதனை ஒருவாறு படமெழுதிப் பார்த்திருப்பான். உதாரணமாக, எகிப்து தேசத்திற் காணப்படும் ஓர் ஓவியத்தில் முட்டை வடிவமான ஓர் அடிநிலத்தில் சில செடிகள் காணப்படுகின்றன; அந்த அடிநிலத்திலிருந்து கிளம்புவதுபோல உள்ள ஒரு மனிதன் தலை உண்டு; அவனுடைய தலையை ஒரு கயிற்றினால் பருந்து ஒன்று பற்றிக் கொண்டிருக்கிறது. இத்திரண்ட ஓவியம் ஒரு கதை சொல்லுகிறது. பாப்பிரஸ் என்னுஞ் செடிக்குப் பெயர்போன நைல் ஆற்றின் பிரதேசத்தில் வாழ்ந்த புராதன மக்களை எவனோ ஒருவன் வென்று அரசனாயினான் என்பது அக்கதை. இவ்விதம், படத்தில் உள்ள வடிவங்கள் எல்லாம் சேர்ந்து ஒரு நிகழ்ச்சியைக் குறிக்கின்ற பாங்கு ஸ்காண்டிநேவியா, மக்களிடத்திலும், அமெரிக்கப் பூர்வீகர்களிடத்திலும் உண்டு.

எழுத்து வளர்ந்த வரலாற்றின் அடுத்த நிலை, படநிலையிலிருந்து அது கருத்தொத்த வடிவெய்திய நிலை. படத்தின் தொகுதி திரண்ட ஒரு கருத்தைத் தெரிவிக்கப் பயன்பட்டதற்குப் பதிலாக, ஒவ்வொரு உருவமும் ஒவ்வொரு தனித்தனிப் பொருளை நேர்முகமாகக் குறிப்பதாகக் கருதப்படலாயிற்று. உதாரணமாக, எகிப்து தேசத்தில் அமைந்த ஒருவகை எழுத்தில், கண்ணின் உருவம் கண் என்ற பொருளையும், வட்ட வடிவமொன்று ஞாயிற்றையும், பிறைவடிவம் திங்களையும் குறிப்பதாகக் கொள்ளப்பட்டன. இவ்வண்ணம் தீட்டுதலால் ஒரு நன்மை உண்டு. ஒரு மொழி மாந்தரே யன்றியும் பிறமொழிகள் பேசும் மக்களும் இவ்வடிவங்களைக் கண்டமாத்திரத்தில் பொருள் இன்னது என்று அறிந்து கொள்ளுவர். ஆயினும், சில இடர்ப்பாடு

களும் உண்டு. ஒவ்வொரு படமும் ஒவ்வொரு பொருளின் நிலையை அல்லது செயலைக் காட்டக் கூடுமேயல்லாது, எண்ணினையோ வேற்றுமையையோ காலத்தையோ காட்டுதல் இயலாது. எனவே, பல்வேறு இலக்கணக் கருத்துக்களைத் தெரிவித்தல் இவ்வகை எழுத்தால் இயலாது. அன்றியும், பிழம்புணர்த்தலாகாப் பொருள்களாகிய அன்பு, அறிவு, நட்பு, பகை ஆகியவற்றை நேரே உணர்த்தக்கூடிய படம் இல்லாததால், நாளடைவில் பிற பொருள்களை உணர்த்தும் படங்களே இவற்றிற்காகப் பயன்படுத்தப்பட்டன. உதாரணமாக, பல மாடுகளின் வடிவம் "செல்வம்" என்ற பொருள் உணர்த்துவதாகக் கொள்ளப்பட்டது; கைகள் கோத்திருத்தல் "நட்பு" என்பதைக் காட்டுவதாகக் கொள்ளப்பட்டது. கைகளின் படம் கைகளைக் குறிக்காமல் நட்பினைக் குறிக்கின்றது என்பதைச் சந்தர்ப்பம்நோக்கி மக்கள் உணர வேண்டியவர் ஆயினர்.

அடுத்தபடியாக, ஒவ்வொரு படமும் ஒவ்வொரு கருத்தினைக் குறித்து நிற்காமல், அவ்வவ் வடிவத்திற்கு உரிய ஒலியைக் குறிப்பதாகக் கருதப்படலாயிற்று. இந்நிலையை ஒலியெழுத்து நிலை என்னலாம். உதாரணமாக, மா என்ற மரத்தின் படம், விலங்கு என்னும் பொருளுடைய மா என்னும் ஒலியையும் குறிப்பதாயிற்று. சித்திரக் குறுக்கெழுத்துப் போட்டியிற் படிப்பது போன்றே மக்கள் படிக்கலாயினர். அதனால், எந்நேரத்தில் மா என்ற மரம் கருதப்பட்டது, எந்நேரத்தில் மா என்ற விலங்கு கருதப்பட்டது, எந்நேரத்தில் பெரிய என்ற பொருளுடைய மா கருதப்பட்டது என்று காட்டவேண்டிய அவசியம் எழுந்தது. அக்காலத்தில், ஒவ்வொரு படத்தின் அருகே திறவுகோல் போன்றமைந்த சிறு வடிவங்களும் சேர்க்கப்பட்டன; அல்லது பட வடிவு கொண்டு ஒலிக்கும்பொழுதே உச்சரிப்பில் சிறிதுசிறிது வேறுபாடு செய்யப்பட்டது. இவ்வாறு அஸ்ஸீரியா, சைனு முதலிய தேசங்களில் ஒலிவகை வடிவங்கட்கு வேறுபாடுகள் வகுத்துக்கொண்டனர். நம் தேசத்திலும், மீன் ஒன்றின் வடிவம் மீன் என்ற பொருளைக் குறிப்பதோடல்லாமல், மின்னுதல் தொழிலையும், மின்னுகின்ற நட்சத்திரத்தையும் குறிப்பதற்கு ஒலிவகையாற் பயன்படுத்தப்பட்டிருக்கின்றது என்று அறிஞர் ஹெராஸ் அவர்கள் காட்டியுள்ளார். மொஹஞ்சோ - தாரோவிற் காணப்படும் பழங்கால எழுத்துக்கள் தமிழ் மக்களின் பண்டைய எழுத்துக்களே எனச் சான்றுகொண்டு அவர் நிறுவியுள்ளார்.

ஒவ்வொரு உருவங் காட்டும் முழு ஒலியையும் கொள்ளாமல், அவ்வவ்வொலியின் முதலசையை மாத்திரம் கருத்திற்கொள்ளத் தலைப்பட்ட மக்களும் உண்டு, அவ்வாறே செமிட்டிக், ஜப்பானிய, சிப்பிரியாட் மொழிகள் கொள்ளத் தலைப்பட்டன. உதாரணமாக, அகரத்தைக் குறிக்க எகிப்திய மொழியிற்கண்ட எருதுவின் தலை வடிவம் கிரேக்க மொழியில் ஆல்ஃபா எனப்பட்டது. அதனையே முதலசையாகிய ஆல்ஃப் என்ற அளவில் செமிட்டிக் மொழி எடுத்துக் கொண்டது.

இதுவே " அ " என்ற அளவில் நிறுத்திக்கொள்ளப்படுகின்ற கடை நிலேதான் எழுத்து வரலாற்றின் முடிவு நிலே. ஓர் உருவம் குறிப்பிடும் ஒலியில் முதலசையைக்கூட முழுதும் எடுத்துக்கொள்ளாமல், முதல் எழுத்து அளவே அமைதல் என்பதுதான் அக்கடைநிலே. ஒவ்வொரு மொழியிலும், ஒவ்வோர் எழுத்தை முதல் எழுத்தாகக் கொண்ட எத்தனேயோ பல சொற்கள் இருப்பவும், அவற்றுள் ஒன்றின் வடிவம்மாத்திரம் ஏன் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்க வேண்டும் என்ற வினு எழுதல் இயல்பே. அவ்வாறு தேர்ந்தெடுக்கப்பட்ட சொல் அம்மொழியில் அதிகமாக வழக்காற்றில் இருந்த சொல் என்பது ஒரு காரணம். அன்றி, அதன் வடிவம் ஏனேயவற்றின் வடிவங்களேவிட எளிதான வடிவம் என்பதும் காரணம் ஆகும். உதாரணமாக, அம்மை, அப்பன், அணில், அடவி, அருவி, அணி, அடகு ஆகியவற்றுள் ஏதாவதொன்றன் வடிவந்தான் பெரும்பான்மை வழக்குப்பற்றி அகரத்தின் வடிவமாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட நிலே எய்தியிருக்கும். சீன மொழியில் இவ்வாறுதான் செய்தனர்.

எனவே, ஆதிகாலத்தில் மக்கள் ஓவியத்தின் வழியாகக் கதை சொல்லக் கற்றுப் பிறகு ஒவ்வொரு வடிவத்தையும் ஒவ்வொரு தனித் தனிப் பொருளேக் குறிக்கப் பயன்படுத்தினர். நாளடைவில், அவ் வடிவு பொருளேக் குறிக்காமல் ஒலியைக் குறிக்கத் தலேப்பட்டது. பின்னர், அவ்வடிவு அல்லது அவ்வடிவின் திரிபு முழு ஒலியையும் குறிப்பிடாமல், முதலசையொலியை மாத்திரம் குறிப்பிடுவதாகி நாளடைவில் முதலெழுத்தளவே நின்றுவிட்டது என்பது அறியப் படும். இக்காலத்தில் உள்ள எழுத்துக்கள் எல்லாம் இம்முறைப்படி ஒரு காலத்தே ஒவ்வொரு பொருளின் ஓவியமாக இருந்தவற்றின் திரிபுவேறுபாடுகள் எனக் கருதப்படுகின்றன. இவ்வெழுத்துக்களின் விந்தையால் காலத்துக்கும் தேசத்திற்கும் அப்பாற்பட்ட பற்பல செய்திகளே நாம் அறியும் பேறு பெற்றிருக்கின்றோம்.

### " பூத்தலில் பூவாமை நன்று "

பிரசங்கக் கலேயில் பயிற்சிபெற விரும்புகின்றவன் குறுக்கு வழியில் புகழ்பெற விழைவது இயற்கை. அதற்காக வேண்டி அவர் சொன்னதையும் இவர் சொன்னதையும் பொருந்துமா பொருந்தாதா என்பதாக நின்று நிலேத்துச் சீர்தூக்கி ஆராயும் பொறுமை இல்லாது, தான் திரட்டிய அரைகுறை ஞானத்தோடு கூட்டிக் குழைத்து அவியலாக்கி, பிச்சைக்காரன் வாந்தியெடுக்கும் ரீதியில் மேடைமீது வாந்தி யெடுப்பதே வகையான முறை என்று கொள்வானுயின், அதைக் காட்டிலும் கேவலமானது வேறு எதுவும் இல்லே. அத்தகைய பிரசங்கி ஒருவன் " பூத்தலில் பூவாமை நன்று."

— **முத்துசிவன்**

(மேடைக்கலே 42)

# கற்பனை விந்தை

பேராசிரியர் கா. பொ. இரத்தினம் அவர்கள், எம். ஏ., பி. ஓ. எல். இலங்கை

கற்பனை என்றவுடன் "உண்மையற்றது, கட்டி உரைக்கப் படுவது, கற்பித்துக் கூறப்படுவது" போன்ற கருத்துக்களே முதலில் பலருக்குத் தோன்றும். பாரதியாரும் "கற்பனையேயாகிலும் வேதாந்த மாக விரித்துப் பொருளுரைக்க யாதானும் சற்றே இடமிருந்தாற் கூறீரோ" என்று பாடியுளர். "கற்பனை கடந்த சோதி" என்று அடியார்கள் கடவுளைப் போற்றுகிறார்கள். உலகிலே இல்லாதவற்றை-நாம் கண்டுங் கேட்டும் அறியாதவற்றைப் படைக்கும் ஆற்றல் கற்பனைக்கு உண்டெனினும், அதன் படைப்புக்கள்யாவும் உண்மைப் பொருள்களையும் அனுபவங்களையும் அடிப்படையாகக் கொண்டவை என்பதை யாம் மறத்தல்கூடாது. வாழ்வை வளம்படுத்தி இன்ப மூட்டுவதற்குக் கற்பனை இன்றியமையாதது. வாழ்க்கையிற் பெற முடியாதவற்றைக் கற்பனையாற் பெறலாம்.[1] மனத்தின் தொழில்க ளாகிய நினைவு உணர்ச்சி, பகுத்தறிவு, துணிவு முதலிய யாவற்றினும் வேறுபட்டதாய், இவை யாவற்றையும் அடக்கி, முழுமனத்தினதும் தொழிற்பாடாக விளங்குவதே கற்பனை என்பர் அகநூலார்.[2] இக் கற்பனை இரண்டு வகைப்படும். புறத்திலே காணப்படும் பொருள் களின் உருவங்கள் முதலியவற்றை உள்ளத்திலே தோற்றுவித்தல் ஒரு வகையாகும்.[3] மற்றது வெளியே காணப்படும் பொருள்களை ஆதாரமாகக்கொண்டு அவற்றின் உருவங்களைப் பலவாறு சேர்த்துப் புதுப் புதுப் படைப்புக்களை ஆக்குதல். இதனை ஆக்கக் கற்பனை[4] எனலாம். இவ்விரு வகையுடன் பகற்கனவையுஞ்[5] சேர்த்துக் கற்பனையை மூன்றாகப் பிரிப்பாருமுளர்.

இவற்றுள் ஆக்கக் கற்பனையே மிகச்சிறந்தது. இந்தக் கற்பனை யையும் விஞ்ஞானக் கற்பனை[6] எனவும் கலைக்கற்பனை[7] எனவும் இரண்டாகப் பிரிப்பர். விஞ்ஞானக் கற்பனை உண்மைகளைக் காரண காரியம் முதலிய தொடர்புகள் கொண்டு நிறுவுவது. கலைக் கற்பனை அழகினைப் படைத்து, உணர்ச்சியைத் தூண்டி இன்பம் ஊட்டுவது. உலகம் அழகினால் வளர்கிறது. இந்த அழகைத் தருபவற்றைப் படைப்பதுதான் இக்கற்பனையின் கடமையாகும்[8]

---

1. This imaginary world is there to redress the balance of the real-Lucas
2 & 8. Study of Poetry - A - B. Perry.
3. Reproductive imagination.
4. Constructive imagination.
5. Day Dream or Fancy.
6. Scientific imagination.
7. Artistic imagination.

அழகியற் கலைகளுக்கெல்லாம் இந்தக் **கற்பனைதான் உயிர்நிலை எனினும் பொதுவாக இலக்கியத்திலும், சிறப்பாகப் பாட்டுக்கலையிலுமே இஃது உச்சநிலைஅடைகிறது; விந்தை உடையதாக மிளிர்கிறது.** படிக்கப்படிக்கப் புதுமையும், நினைக்க நினைக்க இன்பமூந்தரும் கற்பனை விந்தையைப் பாட்டிலேதான் நன்கு காணலாம். "அப்பத்தை எப்படிச் சுட்டாளோ, அதற்குள் தித்திப்பை எப்படிப் புகுத்தினளோ?" என்பதுபோல இந்தப் பொருளைக்கொண்டு இந்தக் கற்பனையை எப்படிப் படைத்தார் என்று யாவரும் வியப்படையுமாறு விந்தையுடையதாகக் கற்பனையை அமைக்கும் ஆற்றல் புலவர்கள் தம் தனி உரிமையாகும்.

"பண்ணில் இன்பமும் **கற்பனை விந்தையும்**
ஊட்டி எங்கும் உவகைபெருகிட
ஓங்கும் இன்கவி"

என்று பாரதியார் கூறுகிறார். பாட்டுக்கு இசை எவ்வாறு இன்றியமையாததோ அவ்வாறே கற்பனை விந்தையும் இன்றியமையாததெனப் பாரதியார் கூற்று நன்கு விளக்குகிறது. "பாட்டென்பது கற்பனையின் புலப்பாடே"[9] என்று, **செல்லி** எனும் புலவருங் கூறினர்.

நீர்வளம் மிக்க வயல்களிலே அன்னம், அதன் குஞ்சு, தாமரை மலர், எருமை, தேரை முதலியவற்றைக் கண்டால் நம் மனத்தில் ஏற்படும் கற்பனையாது? புலவர் பெருமானாகிய **கம்பர்** தீட்டிக் காட்டுங் கற்பனையைப் பாருங்கள்!

"சேலுண்ட ஒண்கணாரிற் றிரிகின்ற செங்காலன்னம்
மாலுண்ட நளினப்பள்ளி வளர்த்திய மழலைப்பிள்ளை
காலுண்ட சேற்றுமேதி கன்றுள்ளிக் கனைப்பச் சோர்ந்த
பாலுண்டு துயிலப் பச்சைத் தேரை தாலாட்டும் பண்ணை"

இப்பாடலிலே வயல்களிலே காணப்படுஞ் சில பொருள்களுக்கிடையில் ஒரு தொடர்பை மிகச்சிறப்பாகக் கம்பர் கற்பித்திருக்கிறார். அன்னக் குஞ்சைப் பிள்ளையாக்கி அதனைத் தாலாட்டவும், அழும் பொழுது பாலூட்டவும் கைத்தாயரையும் படைத்துக் காட்டுகிறார்.

"கார் என்று பேர் படைத்தாய் ககனத்துறும்போது
நீர் என்று பேர் படைத்தாய் நெடுந்தரையில் வந்ததற்பின்
வார் ஒன்று மென்மயில்நேர் ஆய்ச்சியர் கைவந்ததற்பின்
மோர் என்று பேர் படைத்தாய் முப்பேரும் படைத்தாயே"

---

9. "Poetry is the expression of imagination" —Shelley.

இந்தச் செய்யுளிலே **காளமேகப் புலவர்** இடைச்சி கொடுத்த மோரை நோக்கி அதனை வலியுறுத்தக் காரையும் நீரையும் அதனோடு தொடர்புபடுத்தித் தம் கற்பனையைக் காட்டுகிறார்.

தினையையும் பனையையும் யாவரும் அறிவர். இத்தினையின் மீது பனையை நிறுத்திக்காட்டித் தூமகேதுவுக்கு உவமை கூறும் பொழுது **பாரதியாரின்** கற்பனைவிருந்தை கருத்துக்கு விருந்தளிக்கிறது.

" தினையின்மீது பனை நின்றாங்கு
மணிச்சிறுமீன்மிசை வளர்வாலொளிதரக்
கீழ்த்திசை வெள்ளியைக்கேண்மை கொண்டிலகுந்
தூமகேதுச் சுடரே" என்பது பாரதியார்தம் பாடல்.

இங்கே காட்டப்பட்ட உதாரணங்களினாலே, **காட்சிப் பொருள்கள், கருத்துப் பொருள்கள் முதலிய யாவற்றையும் கூர்ந்து நோக்கித் தமது புலமையினால் மற்றையோர் காணமுடியாத வியத்தகு தொடர்புகளைப் பிறப்பித்தலே மெய்ப் புலவரது கற்பனையென்பது வெளிப்படையாகிறது.** உவமை, உருவகம், தற்குறிப்பேற்றம் முதலிய அணிகள் யாவும் புலவர்களுடைய கற்பனையின் விளைவுகளே. இருந்த இடத்திலிருந்துகொண்டே மனத்தை விரும்பிய இடமெல்லாம் செலுத்திப் பல்வகையான படைப்புகளைப் படைத்துப் பின் அவற்றைப் பாட்டுருவத்தில் வெளியாக்கும் ஆற்றலை இக்கற்பனை தான் அளிக்கிறது. தேவர்கள் தாம் விரும்பியவற்றை யெல்லாம் முட்டின்றி உடனே பெற்றுப் பேரின்பந்துய்ப்பதுபோல், புலவர்களும் தாம் விரும்பியவற்றையெல்லாம் வேண்டியவாறு படைத்து அவற்றின் அழகிலீடுபட்டு இன்புறுகின்றனர். இதனாலேயே "தேவரனையர் புலவர்" என நான்மணிக்கடிகை கூறிற்று. புலவர்களுடைய இந்தக் கற்பனைத் திறனைப் பாரதியார் மிகச் சிறப்பாகப் பல பாடல்களிலே விரித்துக் காட்டியுளர்.

" உலாவு மனச்சிறு புள்ளினை எங்கணும்
ஓட்டி மகிழ்ந்திடுவோம்" எனவும்,

" மூன்றிலில் ஓடுமோர் வண்டியைப் போலன்று
மூன்றுலகுஞ் சூழ்ந்தே
நன்று திரியும் விமானத்தைப் போலொரு
நல்ல மனம் படைத்தோம்" எனவும்,

" சீரவிருஞ் சுடர் மீனொடு வானத்துத்
திங்களையுஞ் சமைத்தே
ஓரழகாக விழுங்கிடும் உள்ளத்தை
ஒப்பதோர் செல்வமுண்டோ?" எனவும்

அவர் பாடியுள்ளார்.

கற்பனைச் செறிவிலே புலவர்களுக்குக் காதலரும் பித்தருமே நிகரானவர்கள் என்று செகப்பிரியர்[10] கூறினர். மேலும் புலவர் களுடைய மனக்கண் உலகத்திலிருந்து சுவர்க்கத்தையும், சுவர்க்கத் திலிருந்து உலகத்தையும் ஒரு பார்வையிற் பார்த்தளக்கத்தக்க ஆற்ற லுடையதென்றும், அவர்களுடைய கற்பனை முன்னறியப்படாத வற்றுக்கு உருவங்களைப் படைத்துக் கொடுக்கவும், இல் பொருள் களுக்குப் பெயரும் உறைவிடமும் அளிக்கவல்லது எனவும் அவர்[11] கூறியுளர். பாரதியாரும்

> " தனிப் பதர்ச் செய்திகள்
> அனைத்தையும் பயனிறை அனுபவமாக்கி
> உயிரிலாச் செய்திகட் குயிர்மிகக் கொடுத்து
> ஒளியிலாச் செய்திகட் கொளியருள் புரிந்து
> அனைத்தையு மாங்கே யழகுறச் செய்து
> இலௌகிக வாழ்க்கையிற் பொருளினை இணைக்கும்
> மாசத்தி........" என்றார்.

நமது உலகிலுள்ள பொருள்களைப்போலப் புலவர்களுடைய கற்பனை உலகிலுள்ள பொருள்களும் பலவகைப்பட்டவை. இந்தக் கற்பனை உலகம் என்றும் அழியாத இளமையும் அழகும் வளமும் நிறைந்தது. துன்பமில்லாத இன்பமயமானது. பல இடங்களிற் பல காலங்களில் உள்ள பொருள்கள் இந்த உலகில் ஓரிடத்தில் ஒரு காலத்தில் தோற்றமளிக்கும். நாம் காணும் பொருள்களும் காட்சி களும் இக்கற்பனை உலகிலே வியத்தகு மாற்றத்தை அடைந்து, புது உருவத்துடன் பொலியும்; உண்மையினைத் தெளிவாக உணர்த்தும்; புதுப்புது அனுபவங்களையும் பேருணர்ச்சிகளையும் உண்டாக்கும். இக்கற்பனை உலகின் சிறப்பை அறிதற்குப் புலவர்களுடைய கற்பனைகள் சிலவற்றை இப்பொழுது பார்ப்போம்.

தீயின் தன்மையை யாவரும் அறிவர். நெருங்கினல் சுடும், அகன்றாற் சுடாது. ஆனல் காமமோ நெருங்கினற் சுடாது, அகன்றாற் சுடும். இந்த உண்மைகளை வைத்துக்கொண்டு ஒரு புதுமையான தீயை-காமத்தீயை **வள்ளுவர்** பெருமான் நமக்குக் காட்டுகிறார்.

> " நீங்கிற் றெறூஉம் குறுகுங்காற் றண்ணெனும்
> தீயாண்டுப் பெற்றாள் இவள் "

போர்க்களத்தில் ஒரு பெண் தன் காதலன் இறந்துபடும் பொழுது அவனைத் தாங்கி ஏந்துகிறாள். அவன் இறந்துவிட்டான் என்பதை அறிந்தவுடன் தானும் உயிர்விடுகிறாள். இவ்விரு செய லுக்கும் **சயங்கொண்டார்** எவ்வளவு சிறப்புடைய காரணங்களைக் கற்பிக் கிறார் பாருங்கள்!

---

10, 11. 'Midsummer Nights' Dream.

"தரை மகளும் தன் கொழுநன் உடலந்தன்னைத்
தாங்காமல் தன் கரத்தால் தாங்கி விண்ணாட்டு
அரமகளிர் அவ்வுயிரைப் புணரா முன்னம்
ஆவிஒக்க விடுவாளைக் காண்மின், காண்மின்."

வெப்பம் நிறைந்த கொடிய காட்டில் உள்ள மரங்கள் வாடி வதங்கி வெம்பி நிற்கும் நிலையினைக் கூறவந்த **பெருங்கடுங்கோன்** எங்கெங்கெலாம் எம்மை அழைத்துச் சென்று எவ்வளவு சிறந்த வாழ்க்கை உண்மைகளை எமக்கு உணர்த்துகிறார் என்பதைப் பின் வரும் பாடற்பகுதி நன்கு காட்டுகிறது.

"வறியவன் இளமைபோல் வாடிய சினையவாய்ச்
சிறியவன் செல்வம்போல் சேர்ந்தார்க்கு நிழலின்றி
யார் கண்ணு மிகந்து செய்திசை கெட்டானிறுதிபோல்
வேரொடு மரம் வெம்ப விரிகதிர் தெறுதலி
னலவுற்றுக் குடிகூவ வாறின்றிப் பொருள் வெஃகிக்
கொலையஞ்சா வினைவராற் கோல் கோடியவனிழ
லுலகு போ லுலறிய வுயர் மர வெஞ்சுரம்."

தலைமகன் மணஞ்செய்வதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்கிறான் என்ற செய்தியைத் தோழி தலைமகளுக்குக் கூறும் பொழுது, அச்செய்தி தனக்கு அளித்த மகிழ்ச்சியைப் புலப்படுத்தும் முறை போற்றத்தக்கது. ஒரு நாட்டில் கோடைநீடிக் குளங்கள் யாவும் வற்றிய காலத்தில் குளம் நிறைந்து வெள்ளம் பெருகுமாறு இராக் காலம் முழுதும் மழைபெய்கிறது. அது கண்டு வைகறைப் பொழுதில் அந்நாட்டு மக்கள் யாவரும் பேருவகை அடைகின்றனர். அவர்கள் யாவரும் அடையும் பேருவகை முழுவதையும் எனக்குள்ளே யான் அடைகிறேன் என்று தோழி கூறுகிறாள் எனக் **கபிலர்** பாடுகின்றார்.

"நாடு வறங்கூர நாஞ்சி றுஞ்சக்
கோடை நீடிய பைதறு காலைக்
குன்று கண்டன்ன கோட்ட யாவையுஞ்
சென்று சேக்கல்லாப் புள்ள வுள்ளி
லென்றாழ் வியன்குள நிறைய வீசிப்
பெரும் பெயல் பொழிந்த வேம வைகறைப்
பல்லோ ருவந்த வுவகை யெல்லா
மென்னுட் பெய்தந்தற்றே"

தலைவனைப் பிரிந்து இராக்காலத்தில் வருந்தும் ஒரு தலைவி எப்பொழுது விடியும் விடியும் என்று ஏங்குகிறாள்; சூரியன் உதிக்காமல் இருப்பதற்குப் பல காரணங்களைக் கற்பிக்கிறாள். புராணக் கதைகளையும் இவ்வுலக நிகழ்ச்சிகளையும் அடிப்படையாகக்கொண்டு இக்கற்பனை தோன்றுகிறது.

"அரவங் கரந்ததோ அச்சுமரம் இற்றுப்
புரவி கயிறுருவிப் போச்சோ—இரவிதான்
செத்தானே வேறுவழிச் சென்றானே தோழிஎனக்கு
எத்தால் விடியும் இரா"

இதுவரையும் கற்பனைகள் சிலவற்றின் தன்மைகளைக் கண்டோம். கற்பனையுலகிலேயுள்ள விந்தைகள் மிகப்பலவாகும். தீப்பட்ட வெள்ளத்தையும்[1], சதகோடி மின் சேவிக்கும் மின்னரசியையும்[2], கலைநிலாத் தவழும் மாடத்தையும்[3], மேகத்தினிரு மருங்கிலே சூரியனையும் சந்திரனையும்[4], கரு நெருப்பிடை எழுந்த செந்நெருப்பையும்[2], இந்தக் கற்பனை உலகிலே காணலாம். இவ்வுலகில் இராமனை இராவணனாகவும்[2], கயவரைத் தேவராகவும்[5], குயிலைக் கிளியாகவும்[6], மாலையைக் காலையாகவும்[7], மருதம்[2], கடல்[8], இளவேனில்[9] முதலியவற்றை அரசர்களாகவும் புலவர்கள் ஆக்கி விடுவார்கள்.

இன்னமுறையில் இவ்வாறுதான் கற்பனை செய்யவேண்டுமென்னும் நியதி இவ்வுலகில் இல்லை. ஒரு பொருளைக் கண்டவுடன் அதனேடொன்றுபட்டுப் புலவர்கள் செய்யுங் கற்பனைகள் பலவகையாக இருக்கும். திங்களைப்பற்றிப் புலவர்கள் சிலர் படைத்த கற்பனைகளைக் கண்டு மேலேசெல்வோம்.

"மீனினம் ஓடிப்பரக்குதம்மா — ஊடே
வெள்ளி ஓடமொன்று செல்லுதம்மா
வானும் கடலாக மாறுதம்மா — இந்த
மாட்சியில் உள்ளம் முழுகுதம்மா"

— தேசிகவிநாயகம்பிள்ளை

"தயிர்க்கடலில் வெண்ணெய்போல் வெண்ணிலாவே
தனிவிசும்பிற் றவழ்ந்திடுவாய் வெண்ணிலாவே"

— சோமசுந்தரப் புலவர்

"எல்லையில்லாததோர் வானக்கடலிடை வெண்ணிலாவே-விழிக்கு
இன்பமளிப்பதோர் தீவென்றிலகுவை வெண்ணிலாவே!

— பாரதியார்

"கதிர்செய்நித்திலம் கறங்குதெண்டிரைக்கரத் தெறியும்
முதிர்பனிக்கடல் முகட்டினின் முளைத்தொளிர்திங்கள்
விதியின் மாலையாந்துணைவியை வீங்கிருட்டலைவன்
வதுவையாற்றுவான் வைத்த பொற்குடமெனா வயங்கும்"

— அதிவீரராமபாண்டியன்

"கானெலா மலர்ந்தமுல்லை ககனமீதெழுந்ததென்ன
வானெலாம் வயங்குதாரை நிரைநிரை மலர்ந்துதோன்ற
வேனிலான் விழவின் வைத்த வெள்ளி வெண்கும்பமென்னத்
தூநிலாமதியம் வந்து குணதிசை தோன்றிற்றம்மா."

— வில்லிப்புத்தூராழ்வார்

---

1. முத்தொள்ளாயிரம். 2. கம்பராமாயணம். 3. நைடதம். 4. சிலப்பதிகாரம். 5. திருக்குறள். 6. சீவகசிந்தாமணி. 7. கலித்தொகை. 8. திணைமாலை நூற்றைம்பது. 9. பெரியபுராணம்.

"மறுவில் சிந்தை வன்றொண்டர் வருந்தினால்
இறுமருங் குலார்க்கி யார்பிழைப் பாரென்று
நறுமலர்க்கங் குல் நங்கைமுன் கொண்டபுன்
முறுவ லென்ன முகிழ்த்தது வெண்ணிலா"

— சேக்கிழார்

"பெருந்திண் ணெடுமால் வரைநிறுவிப் பிணித்த பாம்பின்
[மணித்தாம்பால்
விரிந்த திவலை உதிர்ந்தமணி விசும்பின் மீனின் மேல் விளங்க
அருந்த அமரர் கலக்கிய நாள் அமுத நிறைந்த பொற்கலசம்
இருந்ததிடை வந்தெழுந்ததென எழுந்த தாழ்வெண் டிங்கள்"

— கம்பர்

"காழகச் சேற்றுட்டீம்பால் கதிர்மணிக் குடத்தி னேந்தி
வீழ்தரச் சொரிவதே போல் விளங்கொளித் திங்கட்புத்தேள்
சூழிருட் டொகுதி மூழ்கத் தீங்கதிர் சொரிந்து நல்லார்
மாழை கொண் முகத்திற் றோன்றி வளை கடன் முளைத்ததன்றே"

— திருத்தக்கதேவர்

புலவர்களுடைய கற்பனை உலகிலுள்ள படைப்புக்களைப் பகுத்தறிவுகொண்டு ஆராய்தல் கூடாது. இக்கற்பனை உலகு எங்கள் வாழ்வை ஒட்டியும் ஒட்டாதும் இருக்கிறது. இவ்வுலகப் படைப்புகளுக்கு முன்னோர் கூறியாங்கு வாழ்க்கை அனுபவங்களும் காட்சிப் பொருள்களுமே அடிப்படைகளாகும். இப்படைப்புக்களைப் பகுத்துப் பார்த்தால் இவை பூவுலகப் பொருள்களாகவும் வாழ்க்கையில் நாம் பெறும் அனுபவங்களாகவும் இருப்பதை உணரலாம். வெள்ளந் தீப்பட்டதெனில், வெள்ளமுந்தீயும் யாமறிந்த பொருள்களே. நிலாத் தவழும் மாடத்துக்கு நிலாவும் மாடமும் அடிப்படை. அரசனையும் அவனுடைய செல்வங்களையும் கொண்டு மருதம், கடல், இளவேனில் முதலியவற்றை அரசு வீற்றிருக்கச்செய்யலாம். நரசிங்க உருவத்திலுள்ள மனிதனுடைய உறுப்பும் சிங்கத்தினுடைய உறுப்பும் உலகிலுள்ளவை. ஆயிரம் தலை, ஆயிரம் கை, பத்துத் தலை முதலியவற்றுக்கு நமது இரு கைகளும் ஒரு தலையுமே அடிப்படை.

இந்த உண்மைகளை அறிந்து புலவர்களுடைய கற்பனை விந்தையினைச் சுவைத்தின்புறுவதற்கு யாவருக்கும் ஓரளவு கற்பனை இன்றியமையாதது. பாட்டை நன்கு விளங்கிக் கொள்ளுவதற்குக் கற்பனை இன்றியமையாததென உவோட்சுவோது[1] எனும் புலவருங் கூறியுளர். இக்கற்பனைத் திறனிருந்தாற்றான் "உண்மையைச் சொல்லுவதுதான் கற்பனையின் கடன்" எனப் பேராசிரியர் மக்கினில் டிக்குசன்[2] கூறியதை உணர்ந்து புலவர்களின் கற்பனையிலிருந்து பிறந்த இலக்கியத்தின் என்றும் மங்காத அழகிலும் உண்மையிலும் திளைத்து நன்மையை அடையலாம்.

---

1. "The voice which is the voice of the poetry
   Without imagination cannot be heard" — Wordsworth.
2. "It is the office of Imagination to tell the truth" - Prof. Mecniel Dixon.

# பூங்காவில் வெறுப்பு

**டாக்டர் மு. வரதராசன்,** எம். ஏ., எம். ஓ. எல்., பி. எச். டி.,
**தமிழ்ப் பேராசிரியர், பச்சையப்பன் கல்லூரி, சென்னே.**

ஒரு நூல் நல்லது என்றும், சுவைமிக்கது என்றும் எல்லாராலும் பாராட்டப்படுகின்றது. அதுவே ஒரு தேர்வுக்குப் பாடநூலாக ஏற்படுத்தப்படுமாயின், அதைக் கற்கும் மாணவர் சலிப்புறுகின்றனர்; வெறுப்பும் கொள்கின்றனர். இதற்குக் காரணம் என்ன?

நூலின்மேல் ஒரு குற்றமும் கூறமுடியாது. தேர்வு முறையின் குறையே இவ்வாறு அந்நூலே வெறுக்குமாறு செய்கின்றது.

தேர்வு வேண்டா என்பது கருத்து அன்று. கற்ற நூல்களே எல்லாம் இரண்டு மூன்று ஆண்டுகள் வரையில் சேர்த்து நினைவில் வைத்திருந்தால்தான் இன்றைய தேர்வில் வெற்றிபெறும் வகையில் விடை அளிக்க முடிகின்றது. நூல்களில் சிறந்த பகுதிகளே மட்டும் நினைவில் வைத்திருந்தாலும் தேர்வில் வெற்றிபெற முடிவதில்லே. சிறந்த பகுதிகளோடு சிறப்பில்லாத பகுதிகளேயும் நினைவில் வைத்துத் துன்புறவேண்டியுள்ளது. இந்தத் துன்பமே மாணவர்களின் உள்ளத்தில் வெறுப்பை வளர்க்கின்றது.

நினைவாற்றல் வாழ்வுக்கு இன்றியமையாததுதான். ஆனல் வேண்டாதவற்றையும் சிறப்பில்லாதவற்றையும் நினைவில் வைத்துக் காக்கவேண்டுவதில்லே. அவற்றை நினைவில் வைத்திருத்தல் வேண்டும் என்று வற்புறுத்தும் முறையே மூளேக்குத் தீமை செய்கின்றது.

நினைவாற்றல் என்பது இயற்கையாக அமைவது; ஓரளவு முயற்சியால் வளர்த்துக்கொள்ளவும் கூடுவது. வாழ்க்கைக்குத் தேவையான பகுதிகளேயும் சுவையான பகுதிகளேயும் மாணவர் மறப்பதில்லே; அவை எளிதில் நினைவைவிட்டு நீங்காமல் ஆழப்பதிகின்றன.

தவிர, நினைவாற்றல் சிலர்க்கு மிகுதியாகவும் சிலர்க்குக் குறைவாகவும் இருத்தல் உண்டு. அந்த வேறுபாடு வேருெரு வகையில் ஈடுசெய்யப்படுவதாகவே உளநூலார் கூறுகின்றனர். நினைவாற்றல் குறைந்தவர், சிந்தனேயாற்றலும் விரைவில் உணரும் ஆற்றலும் மிக்கவராக இருப்பதாகப் பொதுவாகக் கூறப்படுகின்றது. ஆகவே நினைவாற்றலேப் பெரிதாகப் போற்றித் தேர்வுகளே வற்புறுத்தல் ஆகாது.

அன்றியும், பழங்கால வாழ்க்கைநிலே வேறு; இக்கால வாழ்க்கை நிலே வேறு. மேற்கோள் நூல்களும், துணேநூல்களும் (Reference Books) இக்காலத்தில் பெருகியுள்ளன; சொல்லகராதி பொருளகராதி முதலிய உதவிகள் இக்காலத்து நூல்களில் நன்கு அமைந்துள்ளன. ஆதலின் நூல்களில் உள்ள எல்லாவற்றையும்

பாடுபட்டு மனப்பாடம் செய்யாமலே, கற்று வல்லவனுவதற்கு இக் காலத்து நூல்கள் துணை செய்கின்றன. தவிர, பழங்காலத்தில் ஒருவனுடைய வாழ்வு சில சிற்றூர்களின் அளவில், சிலருடைய பழக்கத்தின் அளவில், சில நல்ல நூல்களின் அளவில் நின்று நடந்தது. இக்காலத்தில் ஒருவன் பரந்த பெரிய உலகத்தோடு பிரியாமல் நின்று பழகி வாழ்கின்றான் எனலாம்; செய்தித்தாள்கள், வானொலி அறிவிப்புக்கள் முதலியன உலகத்தையே அவனுடைய கண்ணிற்கும், செவிக்கும் நாள்தோறும் அளித்துக் கொண்டிருக்கின்றன எனலாம். அறிவியல் முன்னேற்றத்தால் போக்குவரவுக் கருவிகள் பெருகி, ஒருவன் பழகும் எல்லையை மிக மிக விரிவடையச் செய்துள்ளன. பழங்கால மனிதன் சிலவற்றை ஆழ நினைவில் பதியவைத்துக்கொள்ள முடிந்தது; இக்கால மனிதன் பலவற்றை அறிந்து பயில வேண்டியவனுக இருத்தலால், ஆழம் குறைகின்றது. பரப்பை பெற்று ஆழத்தை இழக்கச் செய்துவிட்டது வாழ்க்கை நிலை.

ஆதலின், பழங்காலத்தைப் போலவே இக்காலத்திலும் நூல்களில் உள்ள எல்லாப் பகுதிகளையும் நினைவில் வைத்துக்கொள்ள வேண்டும் என்று வற்புறுத்தினுல், போதிய பயன் விளையாது. ஒரு சிலர் முயன்று வெற்றிபெறலாம்; ஆயின், அவர் அத்தகைய வெற்றியைப் பெறுவதற்காக, தம் உடல் நலத்தையும் உள நலத்தையும் இழந்து, அந்த இழப்பால் வாழ்க்கைக்கே தகுதியற்றவராகி விடுவர்.

புறப்பொருள் வெண்பாமாலை என்று ஒரு பழைய நூல்உள்ளது. சேரர் மரபைச் சார்ந்த ஐயனரிதனுர் என்பவர் இயற்றியது அது. வாழ்க்கையின் புறப் பொருளாகிய வீரம் கொடை புகழ் முதலியன பற்றி நயமான வெண்பாக்கள் பல பொருளிலக்கண முறைப்படி அமைந்துள்ள நூல் அது. திணைகளையும் துறைகளையும் பாகுபடுத்தி, ஒவ்வொரு துறைக்கும் கருத்து விளக்கமான கொளுவும், எடுத்துக் காட்டான வெண்பாவும் அமையப்பெற்றது.

தேர்வு என்ற எண்ணம் இல்லாமல் இந்த நூலைப் படிப்போர் சுவை காணமுடியும்; பல பாக்களின் இனிய ஓசையுடன் கலந்து கற்பனையுணர்ச்சியையும் நயத்தையும் நுகரமுடியும்.

இத்தகைய பழந்தமிழ் நூல் வித்வான் தேர்விற்கும், இண்டர் மீடியட் 'டி' பிரிவின் தேர்விற்கும், பி. ஏ. ஆனர்ஸ் தேர்விற்கும் பாட நூலாக வைக்கப்படுகிறது. தேர்விற்காக இதைக் கற்கும் மாணவர்கள் சலிப்பும் வெறுப்பும் அடைகின்றனர். காரணம் நூலின் குறை அன்று; தேர்வு முறையின் குறையே ஆகும்.

வாழ்க்கையில் கொடை வீரம் புகழ் முதலிய பலதுறைகளைப்பற்றி நயம் மிக்க வகையில் அமைந்துள்ள வெண்பாக்களைப் படிப்பவர், படித்து இன்புற்றுப் பாராட்ட விரும்புகின்றனர்; ஆயின், படித்த எல்லாவற்றையும் நினைவில் வைத்துக் கேட்ட வினுக்களுக்கு விடை எழுதல் வேண்டும் என்று வற்புறுத்தப்படும் போது வெறுக்கின்ற

னர். ஒன்றைப் போற்றிப் பாராட்டுவது வேறு; நினைவில் வைத்துக் காத்தல் வேறு. முன்னது இன்பம்; பின்னது துன்பம்.

அழகிய பூங்காவைப் பார்க்கலாம்; சுற்றிவரலாம்; மலர்மணம் நுகரலாம்; நம் மகிழ்ச்சியைப் பிறர்க்கு அறிவிக்கலாம்; பிறரை அழைத்து வந்து சுற்றிக் காட்டலாம்; அதன் அழகையும் மணத்தையும் பிறரும் நுகருமாறு செய்யலாம். ஆனல், அந்தப் பூங்காவில் உள்ள செடி கொடி மரங்களின் எண்ணிக்கையையும் வளர்ச்சி வேறுபாடுகளையும், ஒவ்வொரு வகையிலும் எத்தனை எத்தனை உள்ளன என்ற பாகுபாட்டையும், அவ்வற்றிற்கு உள்ள பெயர் வேறுபாடுகளையும், மலர்களின் வண்ண வேறுபாடுகளையும், நீளம் அகலம் எடை முதலிய குறிப்புக்களையும் இவை போன்ற வற்றையும் நினைவில் இருத்திக் கொள்ள வேண்டும் என்று எங்கிருந்தோ ஆணை பிறக்குமானல் என்ன ஆகும்? பூங்காவைக் கண்டு மணம் நுகர்ந்து மகிழச் சென்றவர்களின் மனம் சோர்வுறும்; கால்கள் சோர்வுறும். "ஏன் வந்தோம் இந்தப் பூங்காவிற்கு?" என்ற எண்ணம் எழும். "இதை விட்டு எப்போது வெளியேறுவோம்?" என்ற ஏக்கம் பிறக்கும். "என்று விடியும்?" என்ற ஒரே வேட்கை தலை தூக்கும்.

தேர்வுக் களத்திற்குத் தங்களை ஆயத்தப் படுத்திக் கொள்ளும் மாணவரின் நிலை பெரும்பாலும் இவ்வாறே உள்ளது.

நயம் மிகுந்த புறப்பொருள் வெண்பாமாலை முதலான நல்ல தமிழ் நூல்கள் இன்று மாணவரின் வெறுப்புக்கும் சலிப்புக்கும் உரியனவாக இருக்கக் காரணம் இதுவே. பாடிய புலவர்கள் இவ்வாறு மாணவர் துன்புற்று வாடவேண்டும் என்று பாடித்தரவில்லை. அவர்களின் தொண்டு இன்றைய தேர்வுமுறைக்காக ஏற்படவில்லை. இந்தத் திணையில் எத்தனை துறைகள் உள்ளன? இந்தத் துறைக்கும் அந்தத் துறைக்கும் வேறுபாடு என்ன? இன்ன பெயர் உள்ள துறை என்ன என்ன திணைகளில் அமைந்துள்ளது? இந்தத் துறைக்கு எடுத்துக் காட்டு எது? இந்த வெண்பா எந்தத் துறைக்கு எடுத்துக்காட்டு? இப்படிப்பட்ட வினக்கள் படிக்கும் மாணவர் முன்னே நிற்பதால், தமிழ்ப் பூங்காவை நுகரச் செல்லும் இளநெஞ்சங்கள், செடி கொடி மர ஆராய்ச்சி வற்புறுத்தப்படுதலைக் கண்டு தயங்குகிறது; வெறுக்கிறது; விடுதலை வேட்கை கொள்கிறது.

ஆங்கிலப் பல்கலைக் கழகங்கள் எவ்வாறே இத்தகைய துன்பம் தராமல், மாணவரைக் காத்துவர முயல்கின்றன. நூல்களைப் பொது வாகப் படித்துக் கட்டுரைகள் எழுதத் தெரிந்தால் போதும் என்ற முறையே அங்கெல்லாம் வளர்ந்து வருகின்றது. அந்த முறையைத் தமிழ் இலக்கியக் காப்பாளரும் மேற்கொள்ளாவிட்டால், நுகரத்தக்க பூங்கா, வெறுக்கத்தக்கதாகி, நாளடைவில் புறக்கணிக்கத்தக்கதாகி, காலப்போக்கில் மறக்கத்தக்கதாகிவிடும். அந்த நிலைக்கு இடந்தராமல் காப்பதும் தமிழ்த் தொண்டுகளில் சிறந்த ஒன்று ஆகும்.

# கல்வெட்டுக்கள்

டாக்டர். மா. இராசமாணிக்கனர், எம். ஏ., எல். டி., எம். ஓ. எல்., பி. எச். டி.
தியாகராசர் கல்லூரி, மதுரை.

## பண்டை எழுத்துக்கள்

எகிப்து, சீனம், பாபிலோனியா முதலிய நாடுகளில் தோன்றிய நாகரிகங்களே உலக நாகரிகங்களில் மிகப் பழமையானவை என்பது ஆராய்ச்சியாளர் கருத்து. இவ்விடங்களில் கிடைத்துள்ள எழுத்துக் களின் வளர்ச்சிக் குறிகளையும், மெக்ஸிகோ, ஈஸ்டர் தீவுகள் முதலிய வற்றில் காணப்படும் எழுத்துக் குறிகளையும் நன்கு ஆராய்ந்த ஆராய்ச்சியாளர்கள், "இவ்வெழுத்து முறைகளின் தோற்றமும் வளர்ச்சியும் ஒருபடித்தாகவே காணப்படுகின்றன" என்ற முடிவுக்கு வந்துள்ளனர்.

"முதலில் உடும்பின் உருவம் அவ்வுயிரைக் குறிக்க வரையப் பட்டது. பின்னர் அவ்வுருவம் அவ்வுயிரைக் குறிக்காமல் நிலத்தைக் குறிக்கப் பயன்பட்டது. முதலில் வரையப்பட்டது 'உரு எழுத்து' எனப்படும்; பின் குறிக்கப்பட்டது சித்திர சங்கேதக்குறி (குழூஉக்குறி) எனப்படும். சீனம், எகிப்து முதலிய பண்டைநாடு களில் இச்சங்கேதக் குறிகள் பல கிடைத்துள்ளன. நடைக்குக் கால்களும், பார்வைக்குக் கண்ணும், அதிகாரத்திற்குக் கையும், பலத் திற்குத் தோளும் வரையப்பட்டன. இங்ஙனம் ஒரு பொருளைக் குறிக்க வரையப்பட்ட சித்திரம், நாளடைவில், அப்பொருளின் பெயரைக் குறிப்பதாக மாறியது. அதுவே 'ஒலி எழுத்து' என்பது. அஃதாவது, 'வேல்' என்பதை உணர்த்தும் சித்திரம், 'வேல்' என்னும் பெயரையே குறிக்கத் தொடங்கியது. ஒரு மனிதனைச் சித்திரித்துக்காட்டி அவன் கையில் வேல் இருப்பதாக எழுதியுள்ள 'தொடர்ச் சித்திரம்,' 'வேல்,' 'ஆள்,' என்னும் இருபெயர்களைக் குறிக்கத் தொடங்கியது.

"ஆனல் இக்குறிகளைக் கொண்டு தொடர்மொழிகளையும், முற்றிய கருத்துக்களையும் எழுத இடர்ப்பாடு ஏற்பட்டது. அதனல் வார்த்தைகளை அசைகளாகவும் சீர்களாகவும் பிரித்து, ஒவ்வொன் றுக்கும் ஒவ்வோர் உருவத்தை எழுதி, அவற்றைச்சேர்த்து வாசிக்கும் முறை ஏற்பட்டது. அம்முறையும் கடினமாகத் தோற்றியதால், பின்வந்த மக்கள், சில குறிப்பிட்ட குறிகளைத் தேர்ந்தெடுத்து, ஒவ்வொரு குறியையும் அது உணர்த்தும் சொற்களின் சிறப்பாகக்

கொண்டனர். இம்முறையில் தோன்றிப் படிப்படியாக வளரத் தொடங்கியதே 'வரிவடிவம்' என்று எழுத்தாராய்ச்சியாளர் எடுத்தியம்புகின்றனர்.

## தமிழ் நூற்சான்றுகள்

மேலே கூறப்பெற்ற சித்திரசங்கேதக்குறிகளும், அவற்றின் வடிவ வளர்ச்சிக்குறிகளும் இந்தியாவில் சிந்துவெளி நாகரிகப் புதை பொருள்கள்மீது பொறிக்கப்பட்டுள்ளன. இவற்றால் இவை இந்தியாவிற்குப் புதியன அல்ல என்பதை அறியலாம்; ஆயினும் மேலே சொல்லப்பட்ட எழுத்துக்களின் விவரங்களைத் தமிழைத் தவிர வேறு எந்த இந்திய மொழி நூல்களிலும் காணல் இயலாது. நன்னூலுக்கு உரைவகுத்த மயிலைநாதர் எழுத்துக்களை, 1. உருஎழுத்து, 2. தன்மை எழுத்து, 3. உணர்வு எழுத்து, 4. ஒலி எழுத்து என்று குறித்துள்ளார். யாப்பருங்கல இறுதிச் சூத்திரவுரையில் ஓராசிரியனுக்குத் தெரிந்திருக்கவேண்டிய எழுத்து வகைகளைக் குறிக்கும் இடத்தில் உரையாசிரியர், இவ்வெழுத்துக்களுக்குரிய சூத்திரங்களை மேற்கோளாக எடுத்துக் காட்டியுள்ளார்.

1 "காணப் பட்ட வுருவம் எல்லாம்
மாணக் காட்டும் வகைமை நாடி
வழுவில் ஓவியன் கைவினை போல
எழுதப் படுவது **உருவெழுத் தாகும்.**"

2 "கொண்டவோர் குறியாற் கொண்ட அதனை
உண்டென் றுணர்த்துவது **உணர்வெழுத் தாகும்.**"

3 "இசைப்படு புல்லின் எழாஅல் போலச்
செவிப்புல னாவது **ஒலியெழுத் தாகும்.**"

4 "முதற்கா ரணமும் துணைக்கா ரணமும்
துணைக்கா ரணத்தொடு தொடரிய உணர்வும்
அவற்றொடு புணர்ந்த அகத்தெழு வளியின்
மிடற்றுப்பிறந் திசைப்பது **தன்மை எழுத்து.**"

இவையன்றி, அச்சூத்திரவுரையில் வேறுபல எழுத்துவகைகளும் குறிக்கப்பட்டுள்ளன. சிலப்பதிகாரத்தில், காவிரிப்பூம் பட்டினத்துத் துறைமுகத்தில் இறக்குமதியான மூட்டைகட்குக் 'கண்ணெழுத்து' இடப்பட்டது என்பது கூறப்பட்டுள்ளது. 'கண்ணெழுத்து - சித்திர எழுத்து' என்று நச்சினார்க்கினியர் பொருள் கூறலை நோக்க, சிலப்பதிகார காலத்திலும் ஒருவகைச் சித்திர எழுத்துக்கள் குறிப்பிட்ட சில காரியங்களுக்கேனும் வழக்கில் இருந்தன என்று கருத இடமுண்டாகிறது. இவை நிற்க.

## இந்திய எழுத்துக்கள்

வரலாற்று உண்மைக்குப் பொருந்தியனவாக ஆராய்ச்சியாளர் ஒப்புக்கொண்ட இந்திய எழுத்துக்கள் நான்கு வகைப்படும். அவை (1) பிராமி, (2) கரோஷ்டி, (3) திராவிட, (4) யவனாணியா என்பன. இவற்றுள் யவனாணியா என்பது கிரேக்கரும் அவரைச் சார்ந்தவரும் பயன்படுத்திவந்தவை. 'கரோஷ்டீ' என்பது வடமேற்கு இந்தியா வின் ஒரு பகுதியில் ஏறத்தாழக் கி. பி. 4-ஆம் நூற்றாண்டில் வழக்கில் இருந்த எழுத்து முறையாகும். **பிராமி** என்பது அசோகனுடைய கல்வெட்டுக்களிலும், கி. மு. முதல் மூன்று நூற்றாண்டுகளிலும் தென் இந்தியக் குகைகளிலும் காணப்படும் எழுத்து முறையாகும். பிராமி எழுத்து முறை மேற்சொன்ன இரண்டு எழுத்து முறைக்கும் மாறு பட்டது. பிராமி எழுத்துக்களை நன்கு ஆராய்ந்த அறிஞர்கள், அது தமிழுக்கென அமைக்கப்பட்ட குறியாகலாம் எனக் கருதுகின்றனர். **திராவிட** என்பது வட்டெழுத்து. உருவெழுத்து முதலிய நிலைகளைத் தாண்டி அகரவரிசை எழுத்துக்களைப் பெற்ற பிராமிலிபி, ஏறத்தாழக் கி. மு. 3-ஆம் நூற்றாண்டில் தமிழகத்திற் புகுந்து, நாட்டு நிலைக் கேற்பச் சிறிது சிறிதாக வளர்ச்சியடைந்து வட்டெழுத்தாக மாறி யிருத்தல் வேண்டும் என்று அறிஞர் கருதுகின்றனர். வட்டெழுத்து ஒரு காலத்தில் தமிழகம் முழுதும் வழக்கில் இருந்திருத்தல் வேண்டும். தொண்டை நாட்டிலும் காவிரிவரையுள்ள தமிழகத்திலும் பல்லவ ராட்சி ஏற்பட்ட பிறகு, பல்லவரால் போற்றி வளர்க்கப்பட்ட பிராமிலிபியின் வழிவந்த கிரந்தமும், அதனை ஒட்டி வளர்ந்த கிரந்தத் தமிழும் வழக்காறு பெறத்தொடங்கின. அக்காலத்தில் பல்லவராட்சி ஏற்படாத பாண்டியநாடு, சேரநாடு, கொங்கு நாடுகளில் வட்டெழுத்து வழங்கிவந்தது.

பல்லவர்க்குப் பின்பு தென்னிந்தியா முழுவதையும் ஒரு குடைக் கீழ் வைத்தாண்ட சோழர் காலத்தில் கிரந்தத் தமிழே பெருவழக்குப் பெற்றது.

சோழர்க்குப்பின் தமிழகத்தை ஆண்ட விஜய நகர அரசர் காலத்திலும் மகாராஷ்டிர மன்னர்கள் காலத்திலும் நாகர எழுத்துக் கள் தமிழகத்தில் இடம்பெற்றன.

## இந்திய சாஸனங்கள்

இந்திய எழுத்துக்களைப்பற்றி இதுகாறும் கூறப்பெற்ற விவரங்கள், இந்தியாவில் உள்ள கல்வெட்டுக்களிலிருந்தும் செப்பேடு களிலிருந்தும் தெரிவனவாகும். இந்திய சாஸனங்கள் எவ்வாறு தோன்றலாயின என்பது அடுத்துவரும் வினாவாகும். பிராமி எழுத் துக்களைக்கொண்ட அசோகன் காலத்துக் கல்வெட்டுக்கள் பௌத்த சமயக் கொள்கைகளை மக்களிடைப் பரப்புவதற்காக உண்டானவை யாகும். பின்வந்த பட்டயங்களும் கல்வெட்டுக்களும் கல்வியிற்

பெரியவர்க்கும், வீரர்கட்கும், கோயில்கட்கும், அவ்வப்போது நில தானம் முதலிய தானங்கள் செய்யப்பட்டபோது எழுதப்பெற்றவை யாகும். ஒரு பொருளைக் குறித்துக் கல்லில் வெட்டி, அக்கல்லைப் பலரும் சேர்ந்து பார்க்கத்தக்க கோயில் போன்ற பொது இடங்களில் பதித்து, மக்களைக் காணச்செய்வது நம்நாட்டில் இன்றளவும் இருந்து வரும் வழக்கமாகும். போரில் இறந்த வீரனுக்குக் கல்நாட்டி, அதன் அடியில் அவனுடைய பெயரையும் சிறப்புக்களையும் வெட்டுவித்தல் தொல்காப்பியத்தில் கூறப்பட்டுள்ளது.

அரசர்கள் கற்றூண்களை நாட்டி, அவற்றில் தங்கள் வெற்றிகளைக் குறிக்கத் தொடங்கினது முதல் கல்வெட்டுக்கள் நாட்டில் மதிப்படையலாயின. ஏறத்தாழக் கி. மு. 170 இல் கலிங்கப் பேரரசனாக இருந்த **காரவேலன்** உதயகிரியில் நாட்டிய ஹதிகும்பாதூண் கல்வெட்டுக் குறிக்கத்தக்கது. தனக்கு 117 ஆண்டுகட்கு முன்பு (ஏறத்தாழக் கி. மு. மூன்றும் நூற்றூண்டில்) தமிழக வேந்தர் ஒற்றுமையுற்று வன்மையோடிருந்தனர் என்பதை அவன் அக்கல்வெட்டில் குறித்துள்ளான். மோரியப் படையெடுப்புத் தமிழகத்தில் நடந்து படுதோல்வியுற்றது என்பதைச் சங்க நூல்களின் வாயிலாக அறிகிறோம். ஆயின், அதன் காலம் புலப்படவில்லை. காரவேலன் கல்வெட்டுச் சான்றை நோக்க, வலிமிக்க மோரியர் படையெடுத்துத் தோல்வியுற்றதையும் காண, அத்தோல்விக்குத் தமிழரசர் ஒற்றுமையே காரணம் என்பதையும், அப்படையெடுப்பின் காலம் கி. மு. 3 ஆம் நூற்றூண்டாக இருக்கலாம் என்றும் ஊகித்தல் தவறாகாது. இவ்வாறு இந்திய வரலாறு கட்ட, இலக்கியத்திற்கு உறுதுணையாக உதவுவது கல்வெட்டாகும்.

கி. பி. நான்காம் நூற்றூண்டில் பேரரசனாக இருந்த **சமுத்ர குப்தன்** கி. பி 340-இல் தக்கணத்தின் மீதும் தென்னிந்தியாவின் மீதும் படையெடுத்து வந்தான். அவனது வெற்றியைக் குறிப்பது அல்லஹாபாத்தில் உள்ள தூண்கல்வெட்டாகும். அதில் பல அரசர் பெயர்களும் அவர்கள் நாடும் ஊரும் குறிக்கப்பட்டுள்ளன. அவற்றுள் மிகச் சிறந்த குறிப்பு - காஞ்சியை விஷ்ணுகோபன் என்ற பல்லவன் ஆண்டுவந்தான் என்பது. பல்லவர் என்ற சொல்லே சங்க நூல்களில் இல்லை. சங்க காலத்தின் இறுதியில், காஞ்சி சோழராட்சியில் இருந்ததை மணிமேகலை குறிக்கிறது. கி. பி. 340-இல் காஞ்சியில் பல்லவ வேந்தன் இருந்தான் என்பதை நோக்க, பல்லவர் சங்கப் பாடல்களில் குறிக்கப்படாமையையும் நோக்க, சங்கத்தின் இறுதிக் காலம் ஏறத்தாழக் கி. பி. 300 என்று கொள்ளச் சமுத்திரகுப்தனது வெற்றித்தூண் கல்வெட்டு உதவிபுரிதலைக் காணலாம்.

வடநாட்டு ஹர்ஷனையே புறங்கண்ட சாளுக்கிய வேந்தனை **இரண்டாம் புலிகேசி** என்பவன் சுமார் கி. பி. 642-இல் நரசிம்மவர்மனிடம் தோல்வியுற்றான். அவனது தலைநகர் வீழ்ந்தது. அங்கொரு வெற்றித்

தூண் எழுந்தது. அதில் பல்லவன் வெற்றிபெற்றதையும், வாதாபி பல்லவராட்சியில் 13 ஆண்டுகள் இருந்ததையும் அத்தூண் கல்வெட்டுக் குறிக்கிறது. தம் அரசன் ஏவலாற் சென்று வடபுலத்து வாதாபியை வென்றவர் சிறுத்தொண்டர் என்று சேக்கிழார் தமது வரலாற்றுச் சிறப்புடைய பெரியபுராணத்தில் பாடியுள்ளார். வாதாபி இவ்வாறு வீழ்த்தப்பட்ட காலம் கி. பி. 642 என்று மேற்சொன்ன கல்வெட்டுக் குறிக்கிறது. இதனால் சிறுத்தொண்டர் காலம் இன்னதென உறுதிப் படுகிறது. அதனால் அவரது சமகாலத்தவரான திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், நின்றசீர்நெடுமாறர் முதலியோர் காலமும் உறுதிப் படுகிறது. வாதாபிக் கல்வெட்டுச்செய்தி பெரியபுராணச் செய்திக்கு உறுதுணையாகநின்று, சமயாச்சாரியர் காலத்தை அறியவும் பெருந் துணை புரியும் பெற்றியை நாம் நன்கு உணரலாம்.

இப்பல்லவர் காலத்துக் கல்வெட்டுக்களில் மன்னன் பெயர், அவனுடைய விருதுப்பெயர்கள், அவனுடைய போர்ச் சிறப்புகள், கல்வெட்டு எழுந்த நோக்கம் முதலியன சுருங்கிய அளவில் குறிக்கப் பட்டன; ஆயின், கூரம் பட்டயம் போன்ற பல்லவர் பட்டயங்களில் அவ்வேந்தர்கள் செய்த போர்களின் வருணனைகள் விரிவான முறையில் வடமொழிச் சுலோகங்களாகக் காணக் கிடைக்கின்றன.

**மெய்க்கீர்த்தி**

பல்லவர்க்குப் பின்வந்த விஜயாலயன் மரபினரான பிற்காலச் சோழப் பேரரசருள் முதலாம் **இராஜராஜன்** காலமுதலே தென் இந்தியக் கல்வெட்டுக்களிலும் பட்டயங்களிலும் விரிவான முறையில் அரசர்தம் வெற்றிகளை முறைப்படுத்திக்கூறும் 'மெய்க்கீர்த்தி' இடம் பெற லாயிற்று. மெய்க்கீர்த்தி எப்படி அமைந்திருக்கும் என்பதைப் பின் வரும் உதாரணம் கொண்டு அறியலாம்.

"ஸ்வஸ்தி ஸ்ரீ திருமகள் போலப் பெருநிலச் செல்வியும் தனக்கே உரிமை பூண்டமை மனக்கொளக் காந்தளூர்ச்சாலை கல மறுத்தருளி வேங்கை நாடும் கங்கபாடியும் நுளம்பபாடியும் தடிகை பாடியும் குடமலைநாடும் கொல்லமும் கலிங்கமும் முரட்டொழில் சிங்களர் ஈழமண்டலமும் இரட்டபாடி ஏழரை இலக்கமும் முன்னீர்ப் பழந்தீவு பன்னீராயிரமும் திண்டிறல் வென்றித் தண்டாற்கொண்ட தன்னெழில்வளர் ஊழியுள் எல்லா யாண்டுந் தொழுதகை விளங்கும் யாண்டே செழியரைத் தேசுகொள் ஸ்ரீகோ ராஜகேசரி வர்மரான ஸ்ரீ ராஜராஜ தேவர்க்கு யாண்டு 26-வது................................."

இதனால், இராஜராஜன் தனது 26 ஆம் ஆட்சி யாண்டுக்குள் சேரநாடு, வேங்கைநாடு எனப்படும் கீழைச் சாளுக்கிய நாடு, கங்க பாடி, நுளம்பபாடி, தடிகைபாடி, குடமலைநாடு, கொல்லம், கலிங்கம்' ஈழமண்டலம், முன்னீர்ப்பழந்தீவு பன்னீராயிரம் எனப்படும் மாலத்

தீவுகள் என்பவற்றை வென்று சோழப் பேரரசனுக விளங்கினுன் என்பது தெளிவாதல் காணலாம்.

இவ்வாறு சாஸனங்களில் இராஜராஜன் நுழைத்த மெய்க் கீர்த்திமுறை பின்வந்த சோழப் பேரரசர் அனைவராலும் கைக்கொள் ளப்பட்டது. மேலும் சோழப் பேரரசர் சமயவுணர்ச்சி மிக்கவரா யிருந்தமையால், அவர்கள் காலத்தில் கோவில்கள் பெருஞ்சிறப் புற்றன; அரசன் முதல் சாதாரணக் குடிமகன் ஈருக அனைவருமே கோவில்களைத் தம் உயிரெனக் கருதி, அவற்றின் வளர்ச்சிக்குத் தம்மாலான அறங்களைச் செய்தனர்; அவ்வறங்களைக் கல்வெட்டுக் களில் பொறித்தனர். எனவே, சோழர் காலத்தில் ஆயிரக்கணக்கான கல்வெட்டுக்கள் ஏற்பட்டன.

## கல்வெட்டுக்கள் உணர்த்துவன

கல்வெட்டுக்கள் அனைத்தும் வேந்தர் தம் போர்ச்செயல்கள், அரசியல் அமைப்பு, கொடைச் சிறப்பு, சமயநிலை, நாட்டு நடப்பு, உள்நாட்டு வாணிகம், வெளிநாட்டு வாணிகம், கைத்தொழில், பயிர்த் தொழில், நாட்டு விளைபொருள்கள், அயல்நாட்டு உறவு, நாட்டில் வழங்கிய எண்ணல், எடுத்தல், முகத்தல், நீட்டல் முதலிய அளவைகள், பலவகை ஆடைகள், அணிகள் முதலியனபற்றிய விவரங்களை நமக்குத் தெரிவிக்கின்றன. இவற்றுடன், இலக்கியங்களில் உள்ள பல விளங்காத பகுதிகட்கும் கல்வெட்டுக்கள் விளக்கம் தருகின்றன. சிறுத்தொண்டர் வாதாபி வென்ற காலத்தை உறுதிப்படுத்த வாதாபிக் கல்வெட்டுத்தானே உதவி புரிந்தது! மற்றொரு சிறந்த செய்தியையும் இங்குக் குறிக்க விரும்புகிறேன்.

தன் மைந்தனது தேர்க்காலில் பசுக்கன்று அகப்பட்டு இறந்தமைக்காக, அம்மகன் தன் ஒரே மைந்தன் என்பதையும் கருதாது, அவனைத் தேரூர்ந்து கொன்ற மநுநீதிச் சோழனது வரலாறு முழுவதையும் - அதாவது, அரசன் ஏவற்படி அரச குமாரனைக் கொல்ல மனம் வராது தானே தற்கொலை செய்துகொண்ட அமைச்சன் செயல் உட்பட எந்தத் தமிழ் நூலிலும் கூறப்படவில்லை என்பது நோக்கத்தக்கது. இந்த விபரங்களை எல்லாம் நமக்குத் தரும் நூல் பெரிய புராணம் ஒன்றுதான். அந்நூலாசிரியர் இவ் விவரங்களை எங்கிருந்துபெற்ருர் எனின், அவருக்குச்சிறிது முன்னர்ப் பொறிக்கப்பெற்ற திருவாரூர்க் கோவிலில் உள்ள பெரிய கல்வெட் டிலிருந்துதான் எனக்கூறலாம். சேக்கிழார் இரண்டாம் குலோத் துங்கன் காலத்தவர். மேற்சொன்ன கல்வெட்டு இவ்விரண்டாம் குலோத்துங்கனுக்குத் தந்தையான விக்கிரம சோழன் காலத்தில் பொறிக்கப்பட்டது. மனு வேந்தன் ஆணையை நிறைவேற்ற மன மில்லாது இறந்த அமைச்சனது பரம்பரையினருள், ஒருவன் விக்கிரம

சோழனுக்கு அமைச்சன். அவன் பெயர் பாலையூருடையான் சந்திர சேகரன் ஆதிவிடங்கனான குலோத்துங் சோழ மாவலி வாணராயன் என்பவன்.

சுந்தரருடைய தாயாரான இசைஞானியார் திருவாரூர்க்கோவில் தலைமை அர்ச்சகரான ஞான சிவாசாரியார் மகளார் என்பதைத் திருவாரூர்க் கல்வெட்டே உணர்த்துகின்றது. இவ்வாறு கல்வெட்டுக்கள் உணர்த்தும் அரிய செய்திகள் மிகப்பல. இவை நாட்டின் பழம்பெருமைக்கு உயிர்நாடி ஆதலை நன்குணர்ந்தே அக்கால மக்கள் இவற்றைப் பொன்னேபோலப் போற்றிவந்தனர்; இவை சிறிதும் பழுதுபடாதபடி எண்ணெய் பூசிப் பாதுகாத்து வந்தனர்; கல்வெட்டுகளுக்குச் செப்பேடுகளில் படியும் எடுத்துவைத்திருந்தனர்; பழுதுற்ற கோவிலையிடித்துப் பழுதுபார்ப்பதற்கு முன்பு, அவற்றில் இருந்த கலவெட்டுச் செய்திகளைப் பனையோலைகளில் எழுதிக்கொண்டு, கோவில் திருப்பணி முடிந்தபின்னர், அவற்றை ஊரவையோர் காண, அக்கோவிற் சுவர்களில் பொறித்துவைத்தனர்.

## ஆராய்ச்சியாளர் உழைப்பு

இங்ஙனம் நம் முன்னோரால் பாதுகாக்கப்பட்டு வந்த கல்வெட்டுக்கள் இடைக்காலத்தில் ஏற்பட்ட ஆட்சி மாறுபாடுகளால் கவனிக்கப்படாமல் கிடந்தன. ஆங்கில ஆட்சி ஏற்பட்ட பிறகு ஊக்கமும் உழைப்புங்கொண்ட மேனாட்டறிஞர் பலர் சென்ற நூற்றாண்டின் பிற்பகுதியில் இந்தியா வந்தனர். அவருட் சிலர் வடமொழி நூல்களையும் தென்மொழி நூல்களையும் ஆராய்ந்தனர். வேறு சிலர் ஒவ்வொரு மாகாண மொழியையும் உழைத்துக்கற்று ஆராயத் தொடங்கினர். முன் சொல்லப்பட்ட பிராமி, வட்டெழுத்து முதலிய எழுத்துக்களைக் கற்ற அறிஞர் சிலர் இந்திய சாஸனங்களைப் படித்தறிய முற்பட்டனர்; அவற்றைப் படியெடுத்தனர், ‘இண்டியன் ஆன்டிகுவெரி’ முதலிய ஆங்கிலத் தாள்களில் வெளியிட்டு, அவை பற்றிய தங்கள் ஆராய்ச்சியையும் தெரிவித்தனர். இத்துறையில் உழைத்தவருள் **பிலீட்** (Fleet), பேராசிரியர் **வெப்பர்**, எம். ஏ. **பாரத்**, எச். ஜே. **ஸ்டோக்ஸ், மக்கென்ஸி**, சர். டபிள்யூ. **எலியட்**, சி. பி. **பிரௌன்**, என்பவர் குறிக்கத்தக்கவராவர். இப்பெருமக்களது அரிய உழைப்பால், கல்விகற்ற இந்தியர் சிலர் இத்துறையில் பயிற்சிபெறலாயினர். இங்கிலையில் **டாக்டர் உல்ஸ்** என்ற ஜெர்மானியர் இந்தியா வந்தார்; ஆயிரக்கணக்கான கல்வெட்டுக்களைக் கண்டார்; அக்காலை அரசப் பிரதிநிதியாயிருந்த ரிப்பன் பிரபுவிடம் (1884-1888) இந்தியக் கல்வெட்டுக்களின் அருமைப்பாட்டினை விளக்கி, அவற்றைப்படியெடுத்து, ஆராய்ச்சி செய்யவும் வெளியிடவும் ஓர் இலாகாவை அமைக்கச் செய்தார். அதுவே **கல்வெட்டு இலாகா** என்பது. அவ்விலாகாவில் அப்பெரியாரும் இருந்து உழைத்தார். அந்நிலையில் “தென் இந்தியக்

கல்வெட்டுகள்'' என்னும் பெயருடன் அரசாங்க ஆதரவில் மூன்று தொகுதிகள் வெளிவந்தன. ஒவ்வொரு கல்வெட்டுக்கும் ஏற்ற முன்னுரை, ஆங்கில மொழிபெயர்ப்பு, அருஞ்சொல் விளக்கம் முதலிய வெளியிடப்பெற்றன.

உல்ஸ் துரைமகனூர்க்குப் பின்வந்த கல்வெட்டுத் தொகுதிகள் ஒன்பதாகும். ஆயின், அவற்றில் வெறுங் கல்வெட்டுப் பகுதிகளே வெளிவந்துள்ளன. படியெடுத்து இன்றளவும் வெளிவராத கல் வெட்டுக்கள் சில ஆயிரமேனும் இருக்கலாம். அவை அனைத்தும் தக்க அறிஞரால் விளக்கங்களுடன் வெளியிடப்படுமாயின், மேலும் பல உண்மைகளை வரலாற்று உலகமும், பொதுமக்கள் உலகமும் அறிந்து பயன்பெற இடமுண்டாகும்.

---

## சமநிலை

ஏன்? பன்னிரண்டு அடி உயரமும், இருபத்து நான்கு அடி நீளமும் கொண்ட ஒரு சுவரில் முக்கால் அடி நீளமும், அரை அடி அகலமும் கொண்ட ஒரு ஜன்னல் மட்டிலும் இருந்தால், இதென்ன, இத்தனை பெரிய சுவரில் பொந்து வைத்த மாதிரி இருக்கின்றதே, இந்த ஜன்னல் என்று சொல்லுகின்றோம். ஏன்? தாழி வயிறும் கோழித்தலையும் கொண்ட மகோதரர்களைக் கண்டால் நகைப்பு ஏற்படுகின்றது. எதனால்? பெரிய சைக்கிளில் சிறிய பையனும், சிறிய சைக்கிளில் பெரிய ஆளும் சவாரி செய்கிறதைப் பார்த்தால் நமக்குப் பிடிக்கிறதில்லை. ஏன் அப்படி? ஓங்கி வளர்ந்து பாரித்துத் தோன்றும் மாமரத்தில் இரண்டொரு காய்கள் மட்டிலும் அங்கும் இங்குமாகத் தொங்கிக் கொண்டிருப்பதைக் கண்டால் நமக்குப் பிடிக்கிறதில்லை. எக்காரணத்தால்?

அழகினுக்கு அடிப்படையாக உள்ளது சமநிலை. நாம் வாழும் உலகமே அழகு மயம். எதனால் என்றால் சம நிலையினால், ஒளிக்கு இருளும் ஓட்டத்திற்குத் தேக்கமும், வன்மைக்கு மென்மையும், வெம்மைக்குத் தண்மையும், பருமைக்குச் சிறுமையும், நீட்சிக்குக் குறுக்கமும், ஏற்றத்திற்கு இறக்கமும் ஆகிய பண்புகள் தக்கபடி அமைந்து சமநிலை புலப்படுவதனாலேயே அழகு மிளிர்கின்றது.

— முத்துசிவன்.

அசலும் நகலும் 103, 105

# உலகம் உண்டா? இல்லையா?

## திருக்குறள் தரும் விடை

**திரு. அ. கி. பால் நாடார்,** பி. ஏ., பி. எல்., தூத்துக்குடி

தத்துவ ஞானம் பிறந்த காலம் முதல், ஆராய்ச்சியாளர்கள் கேட்கிற கேள்வி உலகம் உண்டா? இல்லையா? என்பது. உலகம் உண்டு என்போர், உலக வாழ்விலே ஒரு சிறப்பு இருக்கிறது; மக்கள் உயிர் மதிப்புடையது; வாழ்க்கையை இனிமை பெறச்செய்தல் அவர்கள் கடமையாகும்; அவ்வாறு இனிமைபெறச் செய்வதற்கு மக்கள் ஒருவர்க்கொருவர் பணியாற்றி அன்பும் அருளும் உடைய வர்களாய் வாழ வேண்டும்; சமுதாயம் நல்ல முறையில் வளர வேண்டும்; ஒரு நாட்டின் குடிகள் யாவரும் ஒன்றுபட்டு அமைதி யோடும், அறத்தோடும் வாழவேண்டும்; மக்களைப் பிளவுபடுத்தும் எந்தத் தடையும் இருக்கலாகாது என்று கருதுகிறார்கள்

"யாதும் ஊரே யாவரும் கேளிர்"

"பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புதல்நூலோர்
தொகுத்தவற்றுள் எல்லாம் தலை."

இவ்வாறு சொல்வதெல்லாம் உலகு உண்டென்போரின் கோட்பா டாகும்.

உலகம் இல்லையென்பாரோ, உலகம் மாயம்; மானிட வாழ்வு வெறும் மாயை; உயிர் உடலில் இருப்பது ஒரு சிறை; அச்சிறையில் இருந்து மீட்சி பெறுவதே மக்களின் லட்சியம்; அம்மீட்சியே பேரின்பம் எனக் கருதுகின்றனர்.

"பிறந்தோர் உறுவது பெருகிய துன்பம்
பிறவார் உறுவது பெரும்பேர் இன்பம்
பற்றின் வருவது முன்னது; பின்னது
அற்றோர் உறுவது."

(மணிமேகலை. அதி. 3)

இவ்வுலகில் பிறப்பதே துன்பம்; உலகப் பற்றினால் திரும்பத் திரும்ப பிறப்பு ஏற்படுகிறது; ஆதலால் பற்றில்லாத வாழ்க்கையே வாழ்க்கை; பற்றினால் வருவது வினை; வினையின் நீங்கியதே ஞானம்; வினை இருந்தாலும் நிஷ்காமியமாய் இருந்தால் தவறு இல்லை. அழிந்து போகிற உடல் எப்படி இருந்தால் என்ன? இம்மை உலகம் எப்படி

யிருந்தால் என்ன? எல்லாம் முன்னைப் பிறப்பின் கர்ம பலன். அனுபவித்துத்தானே தீரவேண்டும். இவை எல்லாம் உலகம் இல்லை யென்போரின் கோட்பாடுகள்.

இப்படி இருதிறத்தாரும் வெவ்வேறு முறையில் சொல்வதற்குக் காரணம் யாது? அவரவர் வாழ்க்கையில் இன்பமோ துன்பமோ எது மேலிட்டதோ அதன் காரணமாக இந்தப் பாகுபாடு ஆதியில் ஏற்பட்டிருத்தல் வேண்டும். இன்ப துன்பங்கள் எல்லாம் சூழ்நிலையைப் பொறுத்தும், அவரவர் வரலாற்று நிகழ்ச்சியைப் பொறுத்தும் இருக்கலாம். எவ்வாறு மனநிலை ஏற்பட்டுள்ளதோ அவ்வாறே அவரவர் வாழ்க்கை நோக்கமும் அமையும். மக்களுக்குள் தனியார்கள் வாழ்விலும் இவ்வாறு வேறுபட்ட கருத்துக்களைக் காண்கிறோம். பல்வேறு தேசங்களிலும் சமுதாயங்களிலும் இதனைப் பார்க்கிறோம். பெரும்பாலும் ஆதித் தமிழரின் கோட்பாடு உலகம் உண்டு என்பதே யாகும். அவ்வாறே பெரும்பாலும் ஆதி வடஇந்தியரின் கோட்பாடு உலகம் இல்லை யென்பதுதான். இதற்கு அவரவர் சூழ்நிலையும் சரித்திர நிகழ்ச்சிகளுந்தான் காரணங்கள் ஆகும்.

தென்னிந்தியா மூன்று பக்கமும் கடல் சூழ்ந்த தீபகற்பம். ஆதியில் அதன் வடபாகம் மக்கள் ஊடுருவிச் செல்லக்கூடாத தண்டகாரணியம் என்னும் பெருங்காடு. அதற்கு அண்மையில் பலம் மிகுந்த பெரிய நாடுகள் எதுவும் இல்லை. கடல் மார்க்கமாக அல்லாமல் வேறு வழியாய் வேற்றவர் இங்கே நுழையவும் வழியில்லை. ஆதலால் அந்நியர் படையெடுப்புக்கு வழியேயில்லை. பதினாறுவது நூற்றாண்டு வரை கடல் மார்க்கமாய் அந்நியப் படையெடுப்பே இல்லை. தமிழர் இந்நாட்டுக்குள் சுயேச்சையாய் அமைதியுடன் வாழ்ந்தார்கள். ஆயினும் குறுகிய நோக்கம் இல்லை. கடல் இன்னொரு வகையில் துணை செய்தது; மெசோபெத்தோமியா, பாலஸ்தீனம், எகிப்து முதலிய மேல் நாடுகளுடனும், சாவகம், சீனம் முதலிய கீழ்நாடுகளுடனும் வாணிபப் போக்குவரத்து இருந்தது. இந்த நாடுகள்தான் அக்காலத்தில் நாகரிகத்தில் மேம்பட்ட நாடுகள். இத்தொடர்பின் காரணமாக, மக்கள் உள்ளம் பரந்த நோக்கத்தை அடைந்தது. அன்றியும், தட்பம் வெப்பம் மிகையில்லாமலும், பூகம்பம், எரிமலை இல்லாமலும் மக்கள் கொடுந்துன்பமின்றி வாழும் இடமாக இருந்தது. நால்வகை நிலங்களிலும் பல பொருட்கள் விளைந்தன. சுவையுள்ள பழங்கள் காய்கட்குக் குறையில்லை. தன்னிறைவு நிறைந்திருந்த நாடாக இருந்தது. வானமளாவிய மலைகள் உண்டு; ஆனால் அவை பனிமலைகள் அல்ல. ஆறுகள் பலவுள; ஆயினும் வெள்ளத்தால் சேதப்படுத்தும் ஆறுகள் எதுவும் இல்லை. மக்கள் மனநிறைவுடன் வாழ நல்ல சூழ்நிலை இருந்தது. இந்நாட்டுக்குள் மக்களை மக்களிலிருந்து பிரிக்கும் ஜாதிமத பேதங்கள் இல்லை. புதிதாய் வந்தவனை விருந்து எனப் பாராட்டினார்கள். தீண்டாமை இல்லை. அரசன் மக்களின் தலைவனே தவிர கடவுளும் அல்ல. கடவுளுக்கு ஒப்பானவனுமல்ல. தெய்வத்தொண்

டிற்கென்றேசிறப்பானவகுப்பாருமில்லை. தெய்வத்தைச்செம்பொருள், மெய்ப்பொருள், கடவுள் என்ற உன்னத லட்சியமுள்ள பெயர்களாலும், வெற்றிதரும் தாய் (கொற்றவை) எனவும் நினைத்தார்கள். இளமை, அழகு, வாசனை எனப் பொருள்படும் முருகனை வழிபட்டார்கள். நாட்டை ஆளுவதற்கென்று தனி வகுப்பாருமில்லை. கற்றவன் வேறு, கல்லாதவன் வேறு, என்ற பாகுபாடு இல்லை. கட்டுப்பாடுள்ள நல்வாழ்வே அறிவின் குறிக்கோள் என உணர்ந்தார்கள். வெளியான சடங்காச்சாரங்களைக் காட்டிலும் உள்ளத் தூய்மையைப் பெரிதும் போற்றினார்கள். உடையவர் இல்லாதவர் என்ற வேற்றுமையும் இல்லை. அறிவுடையார் எல்லாம் உடையார், என்றும் அறத்தான் வருவதே இன்பம், என்ற பேர் உண்மைகளைத் தெளிந்தார்கள். பெண்கள் கற்பே லட்சியம் உள்ளவர்களாக வாழ்ந்தார்கள். ஆகவே சமூகத்தில் அவர்கள் நிலையும் உயர்ந்திருந்தது. இச்சூழ்நிலையில் பண்டைத் தமிழனின் வாழ்க்கையில் துன்பத்தைக் காட்டிலும் இன்பமே மேலிட்டது. அவனுடைய கொள்கை, உலகம் உண்டென்பது. வாழ்க்கையே உறுதி எனக் கண்டான்.

வடநாடு பல இன்னல்களுக்கு உட்பட்ட நாடு; உலகத்தில் உயர்ந்த இமயமலை வடக்கு எல்லையாக இருந்தபோதிலும் வடமேற்குக் கணவாய்கள் வழியாகவும், வடகிழக்குக் காடுகள் வழியாகவும் ஓயாத அந்நியர் படையெடுப்புகளினால் பாதிக்கப்பட்ட நாடு; தட்பமும் வெப்பமும் மிகுதியாகவுள்ள நாடு. பெருவெள்ளத்தாலும் பூகம்பத்தாலும் துன்பப்பட்ட நாடு. ரிக்வேதம் பாடிய முனிவர்கள் பெரும்பாலும் லௌகீக இன்பத்தை நாடித் திளைத்தார்கள். குருக்ஷேத்திர யுத்தத்திற்குப் பின்னர் மன்னர்களின் கொடுங்கோலும், உள்நாட்டுக் குழப்பங்களும், அந்நியர் படையெடுப்புகளும், சிந்து கங்காநதிகள் பெருக்கெடுத்தலும் மக்களுக்கு மனச்சோர்வை உண்டாக்கின. பிறப்பினால் வகுப்பு வேறுபாடுகள் ஏற்பட்டன. மக்களிற் சிலர் பூசுரர்களானார்கள். வேறு சிலர் சண்டாளர்களாகத் தாழ்த்தப்பட்டனர். தீண்டாமையெனும் கொடிய நோய் மக்களை மக்களிலிருந்து பிரித்தது. தெய்வ வழிபாடு வெறும் சடங்காச்சாரமாக இருந்தது. இச்சூழ்நிலையில், உலகம் நிலையாதது; வாழ்க்கையே துன்பம் என்ற கொள்கைகள் மேலிட்டன. உலகத்திற்கு அப்பாலுள்ள நிலையைச் சிந்திக்கலாயினர்; உலகமும் மக்கள் வாழ்க்கையும் மாயை எனக் கண்டனர்; காணும் உலகத்திலும் காணா உலகமே நிலைபெற்றது என்று முடிவுகட்டினர். பிறப்பே துன்பம் என்று கருதும் சமணமும் பௌத்தமும், காணும் உலகத்திற்கு அப்பாலுள்ளவைகளில் ஈடுபட்டுள்ள வைதீக மார்க்கமும் தோன்றின.

வடநாட்டுக் கொள்கைகள் தென்னாட்டிலும் பரவ ஆரம்பித்த பின்னர், வழிவழி வந்த தன்வாழ்க்கை அனுபவத்தோடு வடநாட்டுக் கொள்கைகள் முரணாகத் தோன்ற, பண்டைத் தமிழன் தன் வாழ்விற்கு அடிப்படையாக இருந்த கொள்கைகளைச் சிந்திக்கலானான்.

உலகம் உண்டா? இல்லையா என்ற கேள்விகள் கேட்க ஆரம்பித்தான். உலகம் உண்டென்னும் தன்கோட்பாட்டை நிலைநாட்ட முயன்றான். புறநானூற்றில் கடலுள் மாய்ந்த இளம்பெருவழுதி என்ற ஒரு இளைஞன் பாடியதாக ஒரு பாடல் உள்ளது:

“ உண்டால் அம்மஇவ் உலகம் இந்திரர்
அமிழ்தம் இயைவ தாயினும் இனிதெனத்
தமியர் உண்டலும் இலரே; முனிவிலர்;
துஞ்சலும் இலர்; பிறர் அஞ்சுவது அஞ்சிப்
புகழ்எனின் உயிரும் கொடுக்குவர்; பழிஎனின்
உலகுடன் பெறினுங் கொள்ளலர்; அயர்விலர்
அன்ன மாட்சி அனையர் ஆகித்
தமக்கென முயலா நோன்றாள்
பிறர்க்கென முயலுநர் உண்மை யானே” (புறநானூறு: 182)

உலகம் உண்டா? என்ற கேள்விக்கு இளைஞன் தரும் விடை பாராட்டத்தக்கது. “தேவாமிர்தமே கிடைத்தாலும் அது கிடைக்காத பொருள் என்று தன்னந்தனியாக உண்பதில்லை. அதையும் பிறர்க்கு மகிழ்ந்து கொடுத்துத்தான் உண்பர். யாரோடும், எதன்மீதும் வெறுப்பிலர். பிறர் அஞ்சத்தகும் துன்பத்திற்குத் தாமும் அஞ்சி அது தீர்க்காது சோம்பியிருத்தலும் இலர். புகழ்கிடைக்கின் தம் உயிரையும் கொடுப்பர். பழியெனின் உலகம் முழுவதும் பெறினும் கொள்ளார். மனச்சோர்வு இல்லாதவர். அத்தகைய மாட்சியினர் தமக்கென வாழாது பிறர்க்கெனப் பெருமுயற்சி செய்வர். இவ்வாறு வாழும் மக்கள் உலகத்தில் இருப்பதால் உலகம் உண்டு” என முடிவு கட்டுகிறான். இத்தன்மையான உண்மைகளைத் தமிழர் சான்றோர்நெறியென வகுத்தனர்.

“ இம்மைச் செய்தது மறுமைக்கு ஆமெனும்
அறவிலை வணிகன் ஆய்அலன் பிறரும்
சான்றோர் சென்ற நெறியென,
ஆங்குப் பட்டன்று அவன்கைவண் மையே”
(புறநானூறு: 134)

இனி, உலகம் உண்டா? இல்லையா? என்ற கேள்விக்குத் திருவள்ளுவர் என்ன விடை தருகிறார் என்று காண்போம். இதை ஆராய்வதில் பல இடர்ப்பாடுகள் தோன்றுகின்றன. இப்போது இருக்கிற திருக்குறள் மூலத்தில், உலகம் உண்டு, இல்லை என்கிற இரண்டு கோட்பாடுகளுமே காணப்படுகின்றன. உலகம் உண்டு என்ற கோட்பாடு பெரும்பான்மையாகவும், உலகம் இல்லை என்ற கொள்கை சிறுபான்மையாகவும் இருக்கின்றன. இவ்விதக் கருத்து

களும் விரவி விரவியிருக்கின்றன. ஒன்றோடொன்று பிணைந்து மிருக்கின்றன. இவைகளுக்குக் காரணம் காலத்திற்குத் தக்கவாறு திருக்குறளைத் திருத்தி அமைத்திருக்கிறது எனத் தெரிகிறது. இவ்வாறு திருத்தி அமைத்ததின் பயனாக ஒவ்வொரு சமயத்தாரும் தத்தம் மதத்தினராக வள்ளுவரை ஆக்கிக்கொள்ள முயலுகின்றனர். சமணர், பௌத்தர், சித்தாந்த சைவர், வேதாந்த சைவர், வைணவர் கிறிஸ்தவர்களுங்கூட தத்தம் கொள்கைகளைத் திருக்குறளில் காண்கின்றார்கள். ஆகவே இப்போதுள்ள திருக்குறள் மூலம், கருத்து ஒருமைப்பட்ட நூல் அல்ல. பல கொள்கைகள் அடங்கிய கலப்புநூலேயாகும். இப்படித் திருத்தி அமைத்ததால்தான் வள்ளுவர் வாழ்ந்த காலத்தைப்பற்றிக் கருத்து மாறுபாடு மிகையாக உள்ளது. சிலர் கிறிஸ்துவுக்கு இரண்டு நூற்றாண்டுகளுக்கு முந்தியவ ரென்றும் வேறு சிலர் கிறிஸ்துவுக்குப்பின் ஆறும் நூற்றாண்டைச் சேர்ந்தவரென்றும் சொல்லுகின்றனர். இருதிறத்தாருக்கும் காரணங் கள் இருக்கின்றன. எதார்த்தத்தில் வள்ளுவர் காலம் கி.பி. முதலாவது நூற்றாண்டுக்குச் சற்று முன்னே அல்லது பின்னே இருக்கலாம். திருத்தி அமைத்தது ஆறாவது நூற்றாண்டிற்குப்பின்னே இருக்கலாம்.

திருக்குறளுக்குப் பால், இயல், அதிகாரப் பாகுபாடுகள் வகுத்தவர் யார் என்பதிலும் பலவிதக் கருத்துக்கள் உலவுகின்றன. சிலர் வள்ளுவரே இப்பாகுபாட்டினைச் செய்தார் என்றும், வேறுசிலர் பின்னால் யாரோ செய்திருத்தல் வேண்டும் என்றும் நினைக்கின்றனர். இவ்விருவருக்குமிடையில் வள்ளுவர் செய்த பாகுபாடு வேறு, இப்போது நமக்குக் கிடைத்திருக்கிற பாகுபாடு வேறு என்று எண்ணுபவர்களும் உளர். குறளுக்கு உரையெழுதியவர்கள் பதின் மூவர் எனினும், ஐவரின் உரைகள்தான் நமக்கு இப்போது கிடைத் துள்ளன. உரைகாரர்களில் ஒருவராவது பன்னிரண்டாம் நூற்றாண்டுக்கு முற்பட்டவர் அல்லர். இவற்றில் பால், அதிகாரப் பாகுபாடு சொல்லும் முறையில் எல்லா உரைகாரர்கட்கும் ஒற்றுமை இருக்கிறது. இயல்கூறுவதில் சற்று வேறுபடுகிறார்கள். ஒவ்வொரு அதிகாரத்திற்கும் பாடல்கள் பத்துத்தான் என்பதில் ஒருமைப்பாடு உள்ளது. ஆனால் ஒவ்வொரு அதிகாரத்திலும் பாடல் வைப்பு முறையில் முற்றிலும் வேற்றுமை காண்கிறோம்.

உரைகாரர்கட்கு முந்தியவர்கள் பாடிய திருவள்ளுவமாலையில் தான், முதன் முதலாகக் குறள் பாகுபாடுகளைக் காண்கிறோம். திருவள்ளுவ மாலை-25ம் பாட்டில் பாயிரம் நான்கென்றும் இல்லறம் இருபது என்றும், துறவறம் பதின்மூன்று என்றும் ஊழ் ஒன்று என்றும், அறத்துப்பாலை வகுத்திருக்கிறது. 26-ம் பாட்டில் பொரு ளியலில் அரசியல் இருபத்தைந்து என்றும், அமைச்சியல் பத்து என்றும், அரண் இரண்டு என்றும், கூழ் ஒன்று என்றும், படை இரண்டு என்றும், நட்பு பதினேழு என்றும், குடி பதின்மூன்று என்றும் சொல்லியிருக்கிறது. 27-ம் பாட்டில் காமத்துப்பாலை

ஆண்பால் ஏழு என்றும், பெண்பால் பன்னிரண்டு என்றும், இருபாலர் ஆறு என்றும் கண்டிருக்கிறது. மூன்று பாடல்களையும் பாடியவர்கள் வெவ்வேறு ஆசிரியர்கள். 25, 27-ம் பாடல்களில் இப்பாகுபாடு செய்தவர் வள்ளுவர் என்றே வற்புறுத்தி இருக்கிறது. 16-ம் பாட்டில், குறள், தொகையில் 1330 என வரையறுத்துச் சொல்லியிருக்கிறது. 19-ம் பாடலில் "முப்பாலில் நாற்பால் மொழிந்தவர்" என்ற அடி காணப்படுகிறது. 20-ம் பாட்டில் வீடு ஒன்று என்று உறுதிப்படுத்தியிருக்கிறது. ஆனால் இப்பொழுதிருக்கிற திருக்குறள் மூலத்தில் ஒரு அதிகாரமாவது வீட்டைப்பற்றி இல்லை. காலஞ்சென்ற அறிஞர் வ. உ. சிதம்பரம் பிள்ளையவர்கள் துறவறத்தில் கண்ட துறவு, நிலையாமை, மெய்யுணர்வு, அவாவறுத்தல் என்ற நான்கு அதிகாரங்களையும் வீட்டியல் என அமைத்துள்ளார். அதிகாரம் 133 என்றும் திருவள்ளுவமாலை 28-ம் பாட்டு உறுதிப்படுத்துகிறது. அறம் 38 என்றும், பொருள் 70 என்றும், இன்பம் 25 என்றும் 37-ம் பாட்டில் குறிப்பிட்டிருக்கின்றது. வீடு நீங்கலாக ஏறத்தாழ எல்லாப் பாகுபாடுகளையும் உரையாசிரியர்கள் கையாண்டிருக்கிறார்கள். ஆனால் உரைகாரர்களெல்லாம் காமத்துப்பாலை, கற்பியல், களவியல் என்று இரு பகுதிகளாக வகுத்தார்களேயொழிய திருவள்ளுவமாலை 27-ம்பாட்டின்படி ஆண்பால், பெண்பால், இருபால் என்ற பாகுபாட்டைக் கையாளவில்லை. பரிமேலழகர் பொருட்பாலை, அரசியல், அங்கவியல், ஒழிபியல் என மூன்றாக வகுத்தார். திருவள்ளுவமாலையோ அதை ஏழாக வகுத்திருக்கிறது. மணக்குடவர் அதனை ஆறாகவகுத்தார். அரண் இரண்டு, கூழ் ஒன்று, படை இரண்டு, இவைகளில் பொருளியல் ஐந்தையும் ஒரே பாகுபாட்டில் சேர்த்தனர். நட்பு பதினேழு என்பதை, நட்பியல் ஐந்து என்றும், துன்பயியல் பன்னிரண்டு என்றும் வகுத்திருக்கிறார். பரிமேலழகர், துறவறயியலை விரதம் ஒன்பது என்றும் ஞானம் நாலு என்றும் வகுத்திருக்கிறார். ஆகவே திருவள்ளுவமாலை ஆசிரியர்கள் குறள்மூலம் முழுமையும் பாட்டின் தொகைகளையும், அதிகாரத் தொகைகளையும் வரையறுத்து முடிவுகட்டிவிட்டார்கள். சிற்சில வேறுபாடுகளுடன் உரைகாரர்கள் யாவரும் அதில் கண்ட பாகுபாடுகளைக் கையாளுகிறார்கள் என்பது தெளிவு.

திருவள்ளுவமாலை எக்காலத்தது என்பதிலும் கருத்து வேறுபாடு இருக்கிறது. ஒரு சாரார் அது வள்ளுவர் காலத்தது எனக் கூறுகின்றனர். அது ஒப்புக்கொள்ளத்தக்கது இல்லை. வேறு ஒரு சாரார் அது வள்ளுவர் காலத்திற்கு மிகப்பிந்தியது என்று நினைக்கின்றனர். எவ்வளவு பிந்தியது என்பதுதான் கேள்வி? திருவள்ளுவமாலை பாடியவர்களில் சங்கப்புலவர்களும் இருக்கிறார்கள். பிற்காலப் புலவர்களும் இருக்கிறார்கள். பாரதம் பாடிய பெருந்தேவனார் கி. பி 8-ம் நூற்றாண்டில், நந்திவர்மன் காலத்தில் வாழ்ந்தவர் என்பதற்குத் தக்க சான்றுகள் கிடைத்திருக்கின்றன. அது பல நாயனார், ஆழ்வார்கள் இருந்த காலமுமாகும். இதை வலியுறுத்த குலபதி நாயனார்,

கௌண்ணியனார் என்ற பக்தி காலப் பெயர்களும் திருவள்ளுவமாலை ஆசிரியர்களில் இடம் பெற்றுள்ளன.

திருவள்ளுவமாலையில் பாடல்கள் எல்லாம் சாற்றுக் கவிகளாய் அமைந்துள்ளன. அவைகளிற் சில வடமொழி வேதங்களே, முதல் நூலாய் நின்று குறள் வெண்பாக்களைப் பயந்தன என்றும் (32) அரு மறைகள் ஐந்தும் சமயநூல் ஆறும் நம் வள்ளுவனார் புந்தி மொழிந்த பொருள் என்றும் (44) வேதப் பொருளை உலகத்தார் ஓதத் தமிழில் உரை செய்தான் என்றும் பாராட்டுகின்றன. வேறுசில, வடமொழி வேதத்தின் பொருளும், திருக்குறளின் பொருளும் ஒன்றேயானாலும், வேதம் அந்தணர்க்கு மட்டும் உரியது, திருக்குறள் யாவருக்கும் உரியது (23) என்றும், வேதத்திலும் குறளிலும், குறளே மேம்பட்டது என்றும் (15) வேதங்களை ஏட்டில் எழுதி வைத்தால் வலியில்லாரும் ஓதுவர், ஆதலின் இவற்றின் பெருமை குறையும் என்று அந்தணர் வேதங்களை ஏட்டில் எழுதார் ஆனால் திருக்குறளோ ஏட்டில் எழுதி வைத்து வலியுள்ளாரும் இல்லாரும் ஓதினாலும் பெருமை குன்றாது. ஓதற்கு எளிதாய் உணர்தற்கு அரிதாய், உள்ளுதொறும் உள்ளு தொறும் உள்ளம் உருக்குமே' என்றும் எக்காளமிடுகின்றன. எல்லா வற்றிற்கும் மேலாக 16-ம் பாட்டு, ஆயிரத்து முந்நூற்று முப்பது அருங்குறளும் பாயிரத்தோடு பகர்ந்தபின் வேறு ஒருவர் வாயால் கேட்பதற்கு நூல் உளவோ? இல்லை. திருக்குறளை ஓதி உணர்ந்தவர் நிலைபெற்ற தமிழில் புலவராய், பிறர் தம்மிடம் வந்து கேட்க, எந்த அவையிலும் வீற்றிருக்கலாம் என்று பெருமைப்படுகிறது. இந்தப் பெருமை குறள்களின்தொகை ஆயிரத்து முந்நூற்று முப்பதாக ஆக்கப்பட்டபின் எழுந்திருக்கிறது என்ற தொனி ஒலிக்கிறதல்லவா?

அவ்வாறே வள்ளுவரை தேவர் என்றும், உலகை அளந்த திருமாலுக்கு இணையானவர் என்றும், சிருஷ்டிகர்த்தாவான பிரம தேவன் என்றும், ஒரு பாடல் பலவாறு புகழ்ந்திருக்கிறது. இதற்கு முன்னால் குறள் ஆசிரியரை வள்ளுவன் என்றே சொல்லுகிற வழக்கம் இருந்ததாகத் தெரிகிறது. வள்ளுவன் என்பது வள்ளுவக் குடியில் பிறந்தவன் என்பதைக் காட்டுகின்றது. வள்ளுவர்கள் ஆதிக்குடியான பறையர்கள் தான். "துடியன் பாணன் கடம்பன் பறையன் என்று இந் நான்கல்லது குடியுமில்லை" அவர்களின் குலத்தொழில் பிற்காலத்தில் அரசனுடைய ஆணையை யானைமீது ஏற்றி மக்களுக்குத் தெரிவிப்பது.

'முரசு கடிப்பு இடூஉம் முதுகுடிப் பிறந்தோன்' என்று மணிமேகலை கூறுகிறது. தமிழ் நாட்டில் தீண்டாமை புகுந்த பின்னர் இவர்கள் நிலை தாழ்த்தப்பட்டது. திருக்குறளைத் திருத்தி அமைத்த பின் 'தெய்வப் புலமை' ஆசிரியரைத் தாழ்ந்த வகுப்பாராக எண்ணு வதில் இடர் ஏற்பட்டது. திருவள்ளுவ மாலையில் 8-ம் பாட்டு இதை உறுதிப்படுத்துகிறது:

"அறம் பொருள் இன்பம் வீடுஎன்னு மிந்நான்கின்
திறம் தெரிந்து செப்பிய தேவை—மறந்தேயும்
வள்ளுவன் என்பானோர் பேதை அவன் வாய்ச்சொல்
கொள்ளார் அறிவுடை யார்."

பௌராணிகர்களும் வள்ளுவர் ஆதி எனும் புலைச்சிக்கும் பகவன் என்ற பிராமணனுக்கும் பிறந்தான் என்ற கதையைக் கட்டி விட்டனர்.

வடமொழியிற் கண்ட புருஷார்த்தங்களான அறம், பொருள், இன்பம், வீடு என்ற நான்கு பாகுபாடுகளையும் அடிப்படையாகக் கொண்டு, பழைய சான்றோர்நெறியுடன் சமணம், பௌத்தம், வைதீக மார்க்கம் இவைகளின் கோட்பாடுகளைப் புகுத்தி, அதிகாரம் ஒன்றிற்குப் பத்துப்பத்துக் குறள்களாகத் திருத்தியிருக்கிறது. அவ்வாறு செய்திருப்பது தத்துவ முறையில்; பக்தி முறையிலல்ல. காலத்தால் அடைந்த மாறுதல்களும் இடம்பெற்றுள்ளன. அறிஞர். வ. உ. சிதம்பரம் பிள்ளை சொல்லுகிறபடி, கடவுள் வாழ்த்து, வான் சிறப்பு, நீத்தார் பெருமை என்ற மூன்று அதிகாரங்களும் புதிதாகச் சேர்க்கப்பட்டன. கடவுள் வாழ்த்து, தத்துவ முறையில் கடவுள் தன்மையை சமணர், பௌத்தர், வைதிகர். பழைய சான்றோர் நெறியினர், இவர்களின்கோட்பாடுகளுக்கிணங்க அமைத்திருக்கிறது. ஆடவரின் நற்குணத்தால் நிலம் வளம் பெறுகிறதென்றும், காவேரி பெருக்கெடுப்பது சோழன் அருளால்என்றும் நினைத்தனர் பண்டைத் தமிழர். ஆனால் 'வான்சிறப்பு' அதிகாரத்தில் மழை, வானோரால் கிடைக்கிறது என்றும், அப்படி வானோர்கள் கொடுக்காவிட்டால், அவர்களுக்குப் பூசனை கிடையாதென்றும வணிக முறையில் சொல்லியிருக்கிறது. நீத்தார் பெருமை ஏழாம் பாட்டில்,

"சுவையொளி யூறோசை நாற்றமென் றைந்தின்
வகைதெரிவான் கட்டே யுலகு"

சாங்கியக் கருத்து நுழைந்திருக்கிறது. ஒழுக்கமுடைமையில் நாலாம் பாட்டில்,

"மறப்பினு மோத்துக் கொளலாகும் பார்ப்பான்
பிறப்பொழுக்கங் குன்றக் கெடும்"

வருணாசிரம தர்மமே தலைகாட்டுகிறது. நீத்தார் பெருமையில் ஐந்தாம் பாட்டில்,

"ஐந்தவித்தா னாற்றல் அகல்விசும்பு ளார்கோமான்
இந்திரனே சாலுங் கரி"

வடமொழிப் புராணமும் புகுந்துவிட்டது. முறைசெய்யும் மன்னனை மக்களிலிருந்து பிரித்து இறைவனாக்கியிருக்கிறது (388) சற்று

கவின் கலையரங்கினர், 1952



கல்லூரிச் செயலாளரும், முதல்வரும், பேராசிரியரும்

MADRAS MAY 1956

பின்னர் திருவுடை மன்னர் திருமாலாகிறார். (திருவாய்மொழி) "தற்கொண்டாற் பேணி தகைசான்ற சொற்காத்த" வாழ்க்கைத் துணையைப் பின்னர் சேர்த்த 91ம் அதிகாரம் பெண்வழிச் சேறலில் இழிவுபடுத்தியிருக்கிறது.

இல்வாழ்க்கை முதற்பாடல்.

"இல்வாழ்வா னென்பா னியல்புடைய மூவர்க்கும்
நல்லாற்றி னின்ற துணை" (41)

என்பது மனுதர்ம சாஸ்திரம் 3ம் அத்தியாயம் எழுபத்தெட்டாம் வசனத்திலிருந்தும், அடக்க முடைமையில், ஆறும் பாட்டு,

"ஒருமையு ளாமைபோ லைந்தடக்க லாற்றி
னெழுமையு மேமாப் புடைத்து (126)

பகவத்கீதை இரண்டாம் அத்தியாயம் ஐம்பத்தெட்டாம் வசனத்திலிருந்தும்,

புலான் மறுத்தல் முதற் பாட்டு

"தன்னூன் பெருக்கற்குத் தான்பிறி தூனுண்பா
னெங்ஙன மாளு மருள்" (251)

மனுதர்ம சாஸ்திரம் ஐந்தாம் அத்தியாயம் 52ம் வசனத்திலிருந்தும்,

மெய்யுணர்தல் கடைசிப்பாட்டு,

"காமம் வெகுளி மயக்க மிவைமூன்றன்
நாமங் கெடக்கெடு நோய்" (360)

பகவத்கீதை இரண்டாம் அத்தியாயம், வசனம் 71 லிருந்தும், இறைமாட்சியில் முதலாம் பாட்டு,

"படைகுடி கூழமைச்சு நட்பரணாறு
முடையா னரசரு ளேறு" (381)

அர்த்த சாஸ்திரம் 6-வது புத்தகம் முதலாம் அதிகாரத்திலிருந்தும்,

தெரிந்து செயல்வகையின் கடைசிப் பாட்டு:

"எள்ளாத வெண்ணிச் செயல் வேண்டுந் தம்மோடு
கொள்ளாத கொள்ளா வுலகு" (470)

அர்த்த சாஸ்திரம் ஏழாம் புத்தகம் 4-வது அதிகாரத்திலிருந்தும்,

தெரிந்து தெளிதலில் முதற் பாட்டு,

"அறம்பொரு ளின்ப முயிரச்ச நான்கின்
'றிறந்தெரிந்து தேறப் படும்" (501)

அர்த்த சாஸ்திரம் I-ம் புத்தகம் 10-ம் அதிகாரத்திலிருந்தும்,

தெரிந்து வினையாடல் கடைசிப்பாட்டு,

"நாடோறு நாடுக மன்னன் வினை செய்வான்
கோடாமை கோடா துலகு" (520)

அர்த்த சாஸ்திரம் I-ம் புத்தகம் 10-ம் அதிகாரத்திலிருந்தும்,

செங்கோன்மையில் முதற்பாட்டு,

"ஓர்ந்துகண் ணோடா திறைபுரிந் தியார்மாட்டுந்
தேர்ந்துசெய் வஃதே முறை" (541)

அர்த்த சாஸ்திரம் மூன்றும் புத்தகம் 1-ம் அதிகாரத்திலிருந்தும்,

கொடுங்கோன்மையில் கடைசிப் பாட்டு:

"ஆபயன் குன்று மறுதொழிலோர் நூன்மறப்பர்
காவலன் காவா னெனின்" (560)

மகாபாரதம் சாந்தி பருவம், வசனம் 112 லிருந்தும்,

நாடு அதிகாரத்தில் முதல் இரண்டு பாட்டுகள்:

"தள்ளா விளையுளுந் தக்காருந் தாழ்விலாச்
செல்வருஞ் சேர்வது நாடு" (731)

"பெரும் பொருளாற் பெட்டக்க தாகி யருங்கேட்டா
லாற்ற விளைவது நாடு" (732)

பௌதாயன தர்ம சூத்திரம் 2-வது புராசன 3-வது அத்தியாயம் 51-ம் சூத்திரத்திலிருந்தும், எடுத்தாளப்பட்டவை யென்று வடமொழியாளர்கள் கருதுகின்றனர். இவைகளிற் பெரும்பாலானவை, பொதுக் கருத்துக்கள். தமிழ் முறையில் அவைகளுக்குப் பொருள் சொல்வாருமுளர். ஆயினும் குறள் 41-ம், 560-ம் வடமொழிக்கே சிறப்பாயுள்ளவை. புலால் மறுத்தலும், கொல்லாமையும், சமணத்திற்குச் சிறப்பாயுள்ளவை. மெய்யுணர்தல் வைதீக மார்க்கத்திற்குச் சிறப்பாயுள்ளது. நிலையாமை, துறவு, அவாவறுத்தல், ஊழ் முதலியன, சமணம், பௌத்தம், வைதீகமார்க்கம் இவை மூன்றிற்கும் பொதுவானவை. மேற்கண்டவைகள் நீங்கலாக, ஏனையவை பெரும்பாலும் பழைய தமிழனுக்குச் சிறப்பானவை. ஊழ் என்ற அத்தியாயம், ஊக்கமுடைமை என்ற அதிகாரத்திற்கு முரணாயிருக்கிறது. ஊழ் என்பதும் தமிழ் நாட்டில் பின்னால் தான் புகுந்தது. துறவியல் என்ற பாகுபாடு "அறனெனப்பட்டதே இல்வாழ்க்கை" என்ற வாசகத்திற்கு முரணாகத் தெரிகிறது. ஆயினும் மனத்துறவு சான்றோர் நெறியின் தன்மையது. காட்டுக்குச்சென்று தபசு செய்வது தமிழனின் முறையல்ல. ஆயினும் உலகம் இல்லை யென்போரின் நல்ல கருத்துக்களை யெல்லாம், இப்போதிருக்கிற திருக்குறள் மூலத்தில் தமிழ் மரபிற்கேற்ப சிறந்த முறையில் அமைத்திருக்கிறது. ஆனால் புதிய அமைப்பில் பழைய சான்றோர் நெறி சிதறுண்டுபோய் ஒளி இழந்திருக்கிறது.

"அமைச்சியல்" காலமாறுதலைப் பிரதிபலிக்கிறது. பண்டைத் தமிழ் மன்னர்களுக்கு அமைச்சர் ஆலோசனை சொன்னதாகத் தெரியவில்லை. புலவர்களும், பாணர்களும் நன்மொழிகள் சொல்லி வேந்தருக்குத் துணைபுரிந்து வந்தனர். 65-ம் அதிகாரம் சொல்வன்மை 72-ம் அதிகாரம் அவையறிதல், 73ம் அதிகாரம் அவையஞ்சாமை;

கற்றோர், புலவர், சான்றோர் ஆகியோர் கூடிய கூட்டத்திற்குப் பொருந்துமே தவிர, அமைச்சர் குழுவிற்கோ, அரசியல் துறைக்கோ ஊராண்மைக் கழகத்திற்கோ சம்பந்தமில்லை. வடமொழி ஆதிக்கம் பெற்ற பல்லவர் நாட்டில் முதல்முதல் அமைச்சர் தோன்றினர். பழைய சான்றோர் நெறிப் பாடல்களைப் பொருத்தமில்லாத இடத்தில் சேர்த்ததின் பயனாக உரைகாரர்கள் அம்மூன்று அதிகாரங்களையும் அமைச்சர்களுக்கு இயற்றிப் பொருள் சொல்லி இடர்ப்படுகிறார்கள். அதன் காரணமாக எல்லா மக்களுக்கும் பொதுவாய் வழிகாட்டிய பேருண்மைகள் மறைந்து விடுகின்றன.

இவ்வாறே சான்றோர் நெறியின் சிறந்த பலவுண்மைகள் இங்கொன்றும் அங்கொன்றுமாகச் சிதறிக் கிடக்கின்றன. அவை களிற் சிலவற்றைக் காண்போம்.

"கடனென்ப நல்லவை யெல்லாம் (981)

"அன்பின் வழியது உயிர்நிலை (80)

"மனத்துக்கண் மாசில னாதல்
அனைத்தறன் (34)

"அறத்தான் வருவதே இன்பம் (39)

"கைமாறு வேண்டாகடப்பாடு மாரிமாட்டு
என்னாற்றுங் கொல்லோ உலகு (211)

"ஒத்தது அறிவான் உயிர்வாழ்வான் மற்றையான்
செத்தாருள் வைக்கப்படும் (214)

"ஈத்துவக்கும் இன்பம் அறியார்கொல் தாமுடைமை
வைத்திழக்கும் வன்கண வர் (228)

"மழித்தலும் நீட்டலும் வேண்டா உலகம்
பழித்த தொழித்து விடின் (280)

"உள்ளத்தாற் பொய்யா தொழுகின் உலகத்தார்
உள்ளத்து ளெல்லாம் உளன் (294)

"உள்ளிய வெல்லா முடனெய்தும் உள்ளத்தால்
உள்ளான் வெகுளி யெனின் (309)

"இன்னா செய்தாரை ஒறுத்தல் அவர்நாண
நன்னயஞ் செய்துவிடல் (314)

"அறிவினா னாகுவதுண்டோ பிறிதின்நோய்
தன்நோய் போல் போற்றாக்கடை (315)

"இன்னாசெய் தார்க்கு மினியவே செய்யாக்கா
லென்ன பயத்ததோ சால்பு (987)

"கற்க கசடறக் கற்பவை கற்றபின்
நிற்க அதற்குத் தக (391)

சென்ற இடத்தாற் செலவிடா தீதொரீஇ
நன்றின்பா லுய்ப்ப தறிவு (422)

காக்கை கரவா கரைந்துண்ணு மாக்கமும்
அன்ன நீரார்க்கே யுள (527)

கண்ணோட்ட மென்னுங் கழிபெருங் காரிகை
உண்மையா னுண்டிவ் வுலகு (571)

ஆக்க மதர்வினாய்ச் செல்லு மசைவிலா
ஊக்க முடையா னுழை (594)

நகல்வல்ல ரல்லார்க்கு மாயிரு ஞாலம்
பகலும்பாற் பட்டன் றிருள் (999)

முகத்தா னமர்ந்தினிது நோக்கி யகத்தானாம்
இன்சொ லினதே யறம் (93)

நாணகத் தில்லா ரியக்க மரப்பாவை
நாணா லுயிர்மருட்டி யற்று (1020)

கரவா துவந்தீயுங் கண்ணன்னார் கண்ணும்
இரவாமை கோடி யுறும் (1061)

இரந்து முயிர்வாழ்தல் வேண்டிற் பரந்து
கெடுக உலகியற்றி யான் (1062)

இவைகள் திருத்தியமைத்த பாகுபாட்டின் காரணமாகவும், அதிகாரத் தலைப்பைப் பொறுத்து அர்த்தம் சொல்வதினாலும், இவைகளில் பேருண்மையின் ஒளி பொலியவில்லை.

இவைகளைக் காட்டிலும் வடமொழி மரபிற்கேற்ப திருக்குறளை அறம், பொருள், இன்பம் என்ற மூன்று பாலாகப் பிரித்ததினால், ஏற்பட்ட இடர்ப்பாட்டை, ஒருபாட்டை வைத்துத் தெளிவாகக் காட்டி விடலாம்.

அன்புநாண் ஒப்புரவு கண்ணோட்டம் வாய்மையோ
டைந்துசால் பூன்றிய தூண் (983)

பண்டைத்தமிழர் மக்களிற்சிறந்தவரைச் சான்றோர் என்றனர். சான்றோர் என்பது 'சால்பு' என்ற பகுதியினடியாகப் பிறந்தசொல். நிறைந்தவர் என்று பொருள்படுகிறது.

ஈன்ற பொழுதில் பெரிதுவக்குந் தன்மகனைச்
சான்றோன் எனக்கேட்ட தாய் (69)

சான்றோர் குணத்தை, சான்றாண்மை எனத் திருக்குறள் பாராட்டியிருக்கிறது. சான்றாண்மை என்ற அதிகாரத்தில்தான் மேலே சொன்ன பாட்டும் வருகிறது. 'சான்றாண்மை' என்ற அதிகாரத்தைப் பரிமேலழகர் ஒழிபியலிலும் மணக்குடவர் குடியியலிலும் சேர்த்திருக்கின்றனர். திருவள்ளுவமாலை 26-ம் பாட்டு ஆசிரியர், குடிபதின் மூன்றில் இதைச் சேர்த்திருக்கிறார். இது சான்றாண்மை என்ற

குணம், குடிகளுக்கு மட்டுந்தான் உரியதா? அன்றி அரசர்க்கும் அமைச்சர்க்கும் பொருந்தாதா என்ற கேள்வி எழுகிறது. இது நிற்க, சான்றாண்மை என்பது மேற்கண்ட பாடலில் ஐந்து அம்சங்களாகக் காட்டியிருக்கின்றது. அவைகளாவன: 1. அன்பு, 2. நாண், 3. ஒப்புரவு, 4. கண்ணோட்டம், 5. வாய்மை. இப்போதிருக்கிற பாகுபாட்டில் அன்பு அறத்துப்பால் இல்லறவியலிலும், நாண் பொருட்பால் குடியியலிலும், ஒப்புரவு அறத்துப்பால் இல்லறவியலிலும், கண்ணோட்டம் பொருட்பால் அரசியலிலும், வாய்மை அறத்துப்பால் துறவறவியலிலும் இடம் பெற்றிருக்கின்றன. அன்பு, இல்லத்திற்குத் தான் வேண்டுமா? நாண், குடிமக்களுக்குத்தான் உரியதா? ஒப்புரவு, பொருள் ஈட்டுவார்க்கு வேண்டியதில்லையா? கண்ணோட்டம், அரசர்க்குத்தான் உரியதா? வாய்மை துறவிகளுக்குத்தான் வேண்டுமா?

இந்த முறையில் ஆராய்ச்சி செய்து பார்க்கும்பொழுது, உலகம் உண்டு என்போரின் கோட்பாடுகளையும், உலகம் இல்லையென்போரின் கொள்கைகளையும் இணைத்து, சமரசப்படுத்தி வடமொழி புருஷார்த்தங்களுக்கு ஏற்பத் திருத்தி அமைத்தகாரணத்தின் பயன் இதுவாகத் தெரியும். இந்த உண்மையைப் பல துறையில் ஈடுபட்ட பேரறிஞர்கள், பற்பல கோணங்களிலிருந்து பார்த்து, சீர்தூக்கி முடிவிற்கு வருவது, திருக்குறளின் மேன்மையை அறிந்து கொள்ளுவதற்குத் துணை செய்யுமல்லவா?

---

## அழுத்த நடை

"சாணினும் உளன், ஓர் தன்மை அணுவினைச் சதகூறிட்ட
கோணினும் உளன், மா மேருக் குன்றினும் உளன், இந்நின்ற
தூணினும் உளன், நீ சொன்ன சொல்லினும் உளன்; இத்தன்மை
காணுதி விரைவின் என்றான்; நன்றெனக் கனகன் நக்கான்."

(சதகூறு-நூறுபங்கு கோன்-அணுவின் பகுதி)

சாணினும் கடவுள் இருக்கின்றார், அணுவின் சதகூறிட்ட கோணினும் இருக்கின்றார், குன்றிலும் இருக்கின்றார், இன்னும் தூணிலும் இருக்கின்றார், அதற்கெல்லாம் மேலதாகக் 'கடவுள் எங்கே' என்று கேட்ட சொல்லினும் இருக்கின்றார் என்று சொல்லுவதன் மூலம் கவிதை எவ்வாறு சிறக்கின்றது என்பதைப் பார்க்கவேண்டும். சாணும், அணுவின் கோணும், குன்றும், தூணுமாகிய இத்தனை பொருள்களிலும் பொதிந்து கிடக்கும் உண்மைக்கு அதிகமான அழுத்தம் கொடுக்கும் பொருட்டு அற்புதமாக வந்து விழுகின்றது 'நீ சொன்ன சொல்லினும் உளன்' என்னும் தொடர்.

— **முத்துசிவன்**
அசலும் நகலும் 107

# வாணிக மந்திரம்

சித்தாந்த கலாநிதி, பேராசிரியர் ஔவை. சு. துரைசாமிப்பிள்ளை,

தியாகராசர் கல்லூரி, மதுரை.

வாணிகம் என்பது நமது நாட்டில் பொதுவாக யாவரும் செய்யக்கூடிய தொழில் என்று பலரும் கருதுகின்றனர். உடம்பை வருத்திச் செய்யக்கூடிய உழவு முதலிய தொழில்கள் இழிந்தவை என்றும், அரசியலில் அரைப்பணச் சம்பளத்துக்காயினும் வேலை பார்ப்பதுதான் உயர்ந்தது என்றும், வாணிகம் செய்வது நடுத்தர மானது என்றும் இடைக்காலத்தில் மக்கள் மனதில் ஒரு கருத்துத் தோன்றி நிலவுவதாயிற்று. இதன் விளைவாகக் கற்றவர் அரசியல் வேலையாட்களாகவும், பணிபுரிபவர்களாகவும் அலுவலாளர்களாகவும் புகுந்து வாழ்க்கை நடத்துவாராயினர். கல்லாதவர் பலரும் உழவு முதலிய தொழில்களை மேற்கொண்டனர். சிறிது கற்று இடை நிலையில் நின்றவர் வாணிகம் செய்பவராயினர். வேலைகிடைக்காதவன் வெற்றிலை பாக்குக் கடையேனும் வைத்து வாணிகம் செய்து வாழலாம் என்று கருதும்அளவுக்கு வாணிகம் நடக்கத் தலைப்பட்டது.

சிறந்த கல்வியறிவும் வலிய உடலுழைப்பும் இல்லாதவர் பலரும் வாணிகத்தில் நுழைந்தமையால் வாணிகத் தொழில் ஒரு சில இடங்களில் தாழ்வாகவும் கருதப்படுவதாயிற்று. ஒரு சிலர்க்குப் பொழுது போக்காகவும் பயன்பட்டது. இத்தகைய வாணிகத்தில் வளர்ச்சியும் வளமையும் உண்டாதற்கு வழி இல்லாமையால் நட்டம் வருவதும், நிலைதவறி வீழ்வதும், எழுவதும் இயற்கையென்று மக்கள் கருதுகின்றார்கள். "முப்பதாண்டு வாணிகம் செய்து வாழ்ந்தவரும் இல்லை, கெட்டவரும் இல்லை" என்றொரு பழமொழியும் உலகில் நிலவு கின்றது. மேனாட்டு வணிகர்கள் தங்கள் வணிகத்திற்கு வெள்ளிவிழா (25 ஆம் ஆண்டுவிழா) பொன்விழா (50 ஆம் ஆண்டுவிழா) மணிவிழா (80 ஆம் ஆண்டு விழா) நூற்றாண்டு விழா என விழாக் கொண்டாடு கிறார்களே ; அதுபோல் நம்மவர் ஏன் செய்யமுடிவதில்லை? அவர்கட்கு மாத்திரம் நிலையாக நின்று இப்படி விழாக்கள் நடத்த இயலுகின்றது ஏன்? என்று நினைப்பது இல்லை. செய்யும் வாணிகத்தில் உயர்ச்சி யுண்டானால் "நல்ல காலம்" என்றும், "நல்ல யோகம்" என்றும், வீழ்ச்சியுண்டானால் "திசை கெட்டுப்போயிற்று", "கிரகம் சரியா யில்லை" என்று சொல்லிப் பழி பாவங்களைக் காலத்தின் மேலும் கிரகங்களின் மேலும் தள்ளிவிட்டுத் தாம் குற்றமற்றவர்களாகக் கருதிக்கொள்வது இயல்பாக இருக்கிறது. விதி யென்றும், வினை யென்றும், கருமம் என்றும் சொல்லிக்கொள்வது பெருவழக்கு. விதி வினைகளின்மேல் பழிபோட்டுக்கெடுகின்றவருக்கு நமதுபெரியோர்கள்

நல்ல அறிவுரையும் சொல்லியுள்ளார்கள்; செய்யும் தொழிலில் விதி வினைகள் குறுக்கிட்டாலும் நாம் நமது உழைப்பாலும் அறிவு வன்மையாலும் வென்றுவிடலாம் என்று நம் முன்னோர் நன்றாக அழுத்தம் திருத்தமாக அறிவுறுத்தியுள்ளார்கள். அப்படியிருந்தும் மிகப்பலர் தெளிவில்லாமல் "ஐயோ, வினையே" என்று அழுவதும், அதற்காக நவக்கிரகங்களுக்கு வழிபாடு செய்வதும்மேற்கொண்டு அவதிப்படுகின்றார்கள். அவர்களுக்குத் திருஞானசம்பந்தர் முதலியோர் அறிவுறுத்தஉரை செவியில் ஏறுவதில்லை; தெளிவில்லாத சோதிடரும் திறமையில்லாத கோயில் பூசாரியும் சொல்லுவதுதான் நல்ல அறிவுரையாக விளங்குகிறது. வணிகர் சமுதாயத்தில் இந்த இழிவானநிலை எப்படி உண்டாயிற்று? ஏன் உண்டாயிற்று? என்பன போன்ற ஐயங்கள் இப்பொழுது எழுந்துள்ளன. அவற்றை ஆராய்ந்தால் அது பாரதமாய் விரியும்.

வாணிகத்தின் கீழ்நிலைக்குக் காரணமாக ஒன்றைமாத்திரம் இப்போது தெளிவாகக் கூறலாம். வாணிகம் என்பது மக்கட் சமுதாயத்துக்குச் செய்யும் சிறந்த தொண்டு என்பது மேனாட்டவர் கொள்கை. நம் நாட்டவர் அதனை ஒரு சூதாட்டமென்று கருதுகின்றார்கள். பெருத்த நிலையில் வாணிகம் செய்து ஒருவர் கெட்டுவிடுவாரானால் "சூதாட்டத்தில் எப்படி வெற்றி தோல்விகள் நிலையில்லையோ அப்படியே வாணிபத்திலும் இலாப நட்டங்கள் நிலையில்லை" என்று சொல்வது வழக்கமாக இருப்பது யாவருக்கும் தெரிந்த செய்தி. வாணிபம் ஒரு சூதாட்டம் என்று எவன் எக்காலத்தில் சொன்னானோ தெரியவில்லை. அந்தப் படுபாவியின் சொல்லால் நமது நாடு வாணிக வுலகில் மதிப்பிழந்து போயிற்று. வணிகரிடையே பொய்யும் வஞ்சனையும் மோசமும் இயற்கைப் பண்பாக அமைந்துவிட்டன.

நமது நாட்டுப் பாராளுமன்றத்தில் ஒருமுறை நமது நாட்டு வாணிகத்தைப்பற்றிப் பேச்சுவந்தபோது வணிகத்துறை அமைச்சர் எழுந்து நின்று நம்நாட்டு வணிகரிடம் உள்ளதென ஒரு பெருங் குறையை எடுத்துக்கூறினார். நம்நாட்டு வணிகர் தாம் விற்கும் பண்டங்களில் மோசமும் வஞ்சனையும் செய்கிறார்கள்; அதனால் வெளி நாட்டவர்க்கு நம்பிக்கை குறைந்துவிட்டது என்று வருந்திக் கூறினார். வெளிநாட்டு மக்கள் இகழ்ந்து வெறுத்துத் தள்ளக்கூடிய அளவு பண்டங்களில் மோசம் செய்யப்படுகிறதென்றால், உள்நாட்டு வாணிகத்தில் நடக்கும் வஞ்சனைக்கு அளவு சொல்ல முடியுமா?

மக்களுக்குத் தேவையான பொருள்களுள் அரிசி, பருப்பு, புளி, மிளகு, மிளகாய்ப்பொடி முதலியன மிகவும் சிறந்தவை. நமது நாட்டுக் கடைத்தெருவில் விற்கப்படும் அரிசி முதலியவைகளை ஆராய்ந்தால் கல்லும் மணலும் கலவாத அரிசியும், பருப்பும் கிடையாது. புளியில் களிமண்ணையும், மிளகில் வேறு விதைகளையும் மிளகாய்ப்பொடியில் செங்கற் பொடியையும் கலந்துவிடுகிறார்கள்.

நல்லெண்ணெயில் வேறு எண்ணெய்களைக் கலப்பதும், சீனியில் மணலைக் கலப்பதும், பாலில் நீரையும் வெண்ணெயில் மெழுகையும் கலப்பதும் இயல்பாகவுள்ளன. துணிக்கடையில் நடக்கும் மோசங்களுக்கு எல்லையில்லை, எட்டு கசம் துணி வாங்கினால் அது மீள அளக்கும்போது ஏழரை கசத்துக்கு மிகுவதில்லை; ஏழு கசச் சீலையென்பான்; அளந்தால் அது ஆறரை கசமேயிருக்கும்; ஆறு முழ வேட்டியென்பதை அளந்தால் அது ஐந்தரை முழந்தான் இருக்கும். இவற்றை நாடோறும் காண்பதால் மக்கள் மனதில் வாணிகம் என்பது சூதும் வஞ்சனையும் கலந்ததொழில் என்ற கருத்து வேரூன்றிவிட்டது. மக்களில் பெரும்பாலார் போதிய கல்வியறிவில்லாதவர்களாதலால் வாணிகத்திற்கு இந்த இழிநிலை இயல்பாய்ப்போய்விட்டது; இந்த மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட மக்களும் இவர்களில் வேறானவரல்லர் ஆதலால், அவர்கள் நடத்தும் அரசியலும் இதைத் தீங்கு என்று நினைக்கவோ, இத்தீங்கை ஒழித்துக்கட்டுதற்கேற்ற நடவடிக்கை மேற்கொள்ளவோ முன்வரவில்லை. உள்நாட்டில் இப்படிச் செய்து பழகிய மோசம் வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்யும் பொருள்களில் பெருவாரியாகப் புகுந்து வெளிநாட்டவர் இகழ்ந்து வெறுத்துத் தள்ளுதற்குரிய அவகேட்டை விளைவித்திருக்கிறது. பொருள்துறையில் படிப்படியாக முன்னேற முயன்றுகொண்டிருக்கும் நமது நாட்டுக்கு இந்த இழிசெயல் பெருத்த தீங்கை உண்டு பண்ணிவருவதை நமது நாட்டு வணிகர்கள் நினைப்பதாகவும் தெரியவில்லை; சமுதாயத்துக்கு இதனால் எவ்வளவு பெரிய துரோகம் செய்யப்படுகிறது என்பதும் அவர்கள் அறிவுக்கு எட்டியதாகத் தோன்றவில்லை. இன்றும் இந்த வஞ்சனையும் மோசமும் துரோகமும் நமது நாட்டு வணிகர் சூழலில் வளமாக நிலைபெற்றிருப்பதே இதற்குத் தக்க சான்று பகருகின்றது.

இந்தநிலை நமதுநாட்டு வாணிகத்துறையில் நிலவுவதால் ஒருவர் பல ஆயிரக்கணக்கில் வைத்து வாணிகம் செய்தாலும் அவர் சொல்லும் விலையில், சொல்லில், ஏழை மக்களும் நம்பிக்கை வைப்பதில்லை. ஒரு பொருளின் விலை அவர் ஒரு ரூபா என்பாரானால், வாங்குபவர் அதைச் சிறிதும் நம்பாமல் முக்கால் ரூபா அல்லவா? என்று கேட்பார். பின்பு சிறிதுபோது சொல்லாடல் நிகழும்; முடிவில் அவர் அந்தப் பொருளை முக்கால் ரூபாய்க்கோ பதினன்கணுவுக்கோ வாங்கிக்கொண்டு போவார்; பல்லாயிரம் ரூபாய் முதல்வைத்து வாணிகம் செய்யும் முதலாளியின் சொல் மதிப்பிழந்து பொய்பட்டே போகும். தனது சொல் பொய்படுவதையோ அதனால் தனது நாணயம் பொதுமக்கள் முன்பு கெட்டுநிற்பதையோ அவர் நினைப்பதும் இல்லை; உணருவதும் இல்லை. வேறுசிலர் தமது சொல்லுக்கு மதிப்போ நாணயமோ பொதுமக்கள் வையாமைகண்டு "ஒரே விலை" என்று வாணிகம் செய்யத் தலைப்பட்டனர்; ஆயினும், ஒரே விலைக்கேற்ற உயர்ந்த பொருளை அளவு குறையாமல் விற்பதை நெகிழவிட்டனர்; ஒரே விலை என்பாரிடத்தும் பொதுமக்களுக்கு நம்பிக்கை இல்லாமல் போய்விட்டது.

மக்கள் சமுதாயத்தில் நம்பிக்கையும் நாணயமும் உண்டு பண்ணாத வாணிகமோ தொழிலோ எதுவும் பலநாள் நீடிக்க இயலாதாகையால், நிறுவிய ஒருசில ஆண்டுகளில் மிகப்பல வணிகர் வீழ்ச்சியுற்று இருந்த இடம் தெரியாமல் மறைந்து போயினர்.

நமதுநாட்டு வணிகர் சொல்லும் சொற்களில் நம்பிக்கை இல்லாது போனபடியாலும், அவர்கள் விற்கும் பொருள்களில் வஞ்சனையும் மோசமும் கலந்துள்ளமையாலும், வாங்கும் பொதுமக்கள் எந்தக் கடைக்குச் சென்றாலும், கடைக்காரர் சொல்லும் விலையைக் குறைத்துக் கேட்கும் (பேரம் பேசும்) வழக்கமும், அவர்தரும் பொருளின் தன்மையிலும் அளவிலும் ஐயப்படும் வழக்கமும் இயல்பாய் உள்ளன. இதனால் நமது நாட்டின் பெயரும் மதிப்பும் கெடுவது கண்டே நமது அரசியலார் வெளிநாடு செல்லும் நமது நாட்டவர்க்கு சில அறிவுரைகளை அச்சடித்துத் தருகின்றார்கள். அவற்றில் ஒன்று: "நீங்கள் வேறுநாடுகளில் கடைக்குச் சென்றால், வாங்கவிரும்பும் பொருளுக்கு என்ன விலை சொல்லப்படுகிறதோ, அதை அப்படியே கொடுத்துவிடவேண்டும்; பேரம் பேசக்கூடாது" என்பது. சென்ற சில ஆண்டுகட்குமுன் நமதுதென்னாட்டிலிருந்து அமெரிக்கநாட்டிற்குச் சென்றிருந்த ஒருவர், ஒருகடையில் ஒருபொருளின் விலையைக் கடைக்காரர் சொன்ன விலைக்குக் குறைவாகக் கேட்டாரென்பதற்காக அக் கடை முதல்வர், அவர்மேல் "மானநட்ட வழக்குத் தொடுத்த" செய்தி நாடறிந்ததொன்று. அதனால் நமது நாட்டு வாணிகத்தின் மானம் "கப்பலேறிவிட்டது." இப்படியே மிளகுப் பொதியில் வேறு பொருள் கலந்தும், புளியில் மண்ணைக் கலந்தும் நமதுநாட்டு வாணிகம் நமது நாட்டின் புகழுக்கும் பெருமைக்கும் பொல்லாத பழியும் வசையும் கொண்டுவந்ததைச் செய்தித்தாள்கள் தெரிவித்துள்ளன.

வட அமெரிக்காவில் இல்லினாய்ஸ் என்பது ஒரு மாகாணம்; அங்கே சிகாகோ என்றொரு பெரிய நகரம் உளது. அந்நகரத்தில் ஒரு வாணிக நிலையம் சிறப்புடன் தொடங்கி வாணிகம் புரிந்துவந்தது. பல செல்வர்கள் அதற்குப் பங்காளிகளாக இருந்தனர். சில ஆண்டுகட்குப்பின் அதன் வாணிகத்தில் ஏதோ ஒரு குறையுண்டாக, அவ்வாணிக நிலையம் பெருநட்டத்துக்கு உள்ளாகி வீழ்ச்சியடையத் தொடங்கிற்று. பங்காளிகளுக்கு மனவேதனைமிகுந்தது. "முதலிலார்க்கு ஊதியம் இல்லை" என்றாற்போல முதலுக்கே கேடு தோன்றத் தலைப்பட்டது. அப்போது அதன் பங்காளிகளில் ஒருவரான **ஹேர்பார்ட் டெய்லர்** (Herbart Taylor) என்பவர் தலைமையில் அதனை ஒப்படைத்தனர். அப்போது அவர் வேறோரிடத்தில் மிக்க வருவாயுள்ள தொழிலில் ஈடுபட்டிருந்தார். ஆயினும் அவர் அதனைத் துறந்துவிட்டு இந்த வணிக நிலையத்தை ஏற்று நடத்தும் பொறுப்பை மேற்கொண்டார்.

டெயிலர் (H. Taylor) முதல்வராய் வந்து சிறிது காலம் அதன் நடைமுறைகளை நன்கு ஆராய்ந்தார். தொழிலாளிகளின் சொற்

களையும் செயல்களையும் ஊன்றி நோக்கினர். விற்கப்படும் பொருள்களின் நலம் தீங்குகளை நன்ருகப் பார்வையிட்டார். வாணிகத்தின் மதிப்புக்கும் நாணயத்துக்கும் மாசு உண்டாக்கிய காரணங்களைக் கண்டார்; அதைப் போக்கும் துறையில் அவர் கருத்து ஆழ்ந்து நின்றது. முடிவில் அவர் மாசு துடைத்து மதிப்பை உயர்த்திப் பொது மக்கள் மனதில் நம்பிக்கை உண்டுபண்ணுதற்கென்று ஒரு சில "மந்திரங்களைக்" கண்டு பிடித்தார். அதைப் பின்பு ஒவ்வொரு தொழிலாளிக்கும் "உபதேசித்து" அதை மறவாமல் கைக்கொள்ள வேண்டும் என்று வற்புறுத்தினர். தொழிலாளரின் மனதில் வேரூன்றிய "மந்திரம்," விரைவில் செயல்பட்டது, சிறிது காலத்திற்குள் அவரது வாணிக நிலையத்தின் புகழ் காட்டுத் தீப்போல எங்கும் பரவிற்று; வாணிகம் பெருகிற்று; ஊதியம் மிகுந்தது; வீழும் நிலையிலிருந்த நிலையம் 200000 டாலர் வருவாயுள்ள பெரு வாணிகமாய் இன்று பிறங்கியுளது. மக்கள் அனைவருக்கும் அதன்பால் மிக்க நம்பிக்கையும் நன்மதிப்பும் உண்டாகவே, இப்போது யாவரும் பாராட்டும் பெருமை பெற்று விளங்குகிறது.

அப்படியானல் அந்த "மந்திரம்" யாது என அறிய வேண்டுமன்றே? அதனை அவர் **ரோட்டரி** யென்னும் சுழல்கழகத்தின் வாயிலாக உலக மக்கள் அறிந்து பயன்படுமாறு விளக்கமாகத் தெரிவித்துள்ளார்.

1. யாரேனும் தமது வாணிக நிலையத்துக்கோ கடைக்கோ வந்து ஏதேனும் ஒரு பொருளைக் கேட்டால், அப்பொருள் இருக்குமானல், அதை ஆராய்ந்து, "இது உண்மையான பொருள்தானு?" என்று முதலில் பார்க்கவேண்டும். **இதுதான் முதல் மந்திரம்.** போலியாகவோ மோசமானதாகவோ அந்தப்பொருள் இருக்கக் கூடாது. உண்மையானதாக இருந்தால்தான் கொடுக்கவேண்டும்.

2. ஒரு பொருளின் விலையைச் சொல்லி வாங்கும்போது நாம் வாங்கும் விலை நேர்மையானதா? என்று காணவேண்டும். **இஃது இரண்டாவது மந்திரம்.** நேர்மையில்லாத வழியில் விலை குறிப்பதும் விற்பதும் மக்கள் மனதில் அருவருப்பை உண்டாக்கும்; அதனல் வாணிகம் தடைப்பட்டுச் சீரழியும்.

3. நாம் இப்படிச் சொல்லுவதாலும் செய்வதாலும் நம்மிடத்தில் பொதுமக்களுக்கு நல்ல நம்பிக்கை உண்டாகுமா? பொதுமக்களுக்கும் நமக்கும் இடையே உயர்ந்த நட்பு உண்டாகுமா? என்று ஆய்ந்தறிய வேண்டுவது **மூன்ருவது மந்திரம்.** நம்பிக்கையால் வாணிகம் பெருகும்; நட்பினல் அது செழிக்கும். நாட்டில் நமது தொழிலுக்கு மதிப்பும் புகழும் தோன்றிச் சிறக்கும்.

4. நமது இந்தச் செய்கையால் எல்லோர்க்கும் நன்மை விளையுமா? என்று நோக்குவது **நான்காவது மந்திரம்** பிறர்க்கு நன்மை செய்வது குறித்தே வாணிகத் தொழில் உண்டாகியிருக்கிறது.

1954, பீ. ஏ. மாணவரின் பிரிவு விருந்தில்,



தோன்றல் அழகப்பாவும் தமிழ்ப்பேராசிரியரும்

MADRAS 20 1 1955

# மூன்றும் பகுதி

# முத்துசிவனின் நூல், கவிதைப் பகுதிகள்

# மாணவரின் திறனாய்வுக் கட்டுரைகள்

# 1. அசோக வனம்

**1. அசோக வனம். 2. சிரிப்பின் தத்துவம். 3. சோக நாடகத்தின் தத்துவம். 4. கவிதை என்ற நான்கு கட்டுரைகள் கொண்டது.**

1. நன்மை தீமையாகிய இரண்டினையும் தோற்றுவித்த தெய்வ-நீதியானது அவைகளை மோதவிட்டு, நன்மையைக் கொண்டு தீமையை வெல்ல முயல்கின்றது. இப்படி வெல்ல முற்படும் முயற்சியில் நன்மையானது தன்பாலுள்ள நலத்தில் எவ்வளவோ அளவைத் தியாகம் செய்கின்றது. அப்படிச் செய்யவேண்டியதும் அவசியமாகிறது. இப்படி நிகழுகின்ற தியாகத்திலும் நன்மை-நஷ்டத்திலும் எவ்வளவோ சோகத்திற்கும் இடம் ஏற்படுகிறது. எல்லா முயற்சியும் தீமையை அழிப்பதற்காக ஏற்பட்டுள்ளதுதானே, தீமைதானே அழிகிறது, இதில் சோகத்திற்கு இடம் ஏது என்று கேட்கலாம். தீமை அழிவதில் இல்லை சோகம். இந்தத் தீமை அழிவதற்காக வேண்டி நன்மை எவ்வளவோ பாழாகிறதே, அதிலேதான் சோகமிருக்கிறது. 'There is no tragedy in its expulsion of evil; the tragedy is that it involves the waste of good'' (Bradley) பொற்கொல்லன் அழிவதில் இல்லை சோகம். பாதகச் சின்னமாகிய அவன் காரணமாக 'மன்பதை காக்கும் தென் புலங்காவல்' அழிய, மதுரை அழிய, கண்ணகி நாவிழக்க, பாண்டியனும் தேவியும் பரகதி அடைய, எத்தனை நன்மை-நஷ்டங்கள் ஏற்படுகின்றன! [பக்கம் 9-10]

2. "என்னுடைய காலை ஆகாரத்திற்குக்கூட நீ காண மாட்டாய்" என்று அவளைப் பார்த்து ஓரிடத்தில் இராவணன் கூறுகின்றான். கேவலம், காலை வேளைக்குக்கூட காணமாட்டாதவளாகிய சீதை, அசுரர்களது பிரளயம் போன்றவன், அமரர்தம் கூற்றாய் விளங்குபவன், திரிலோகமும் நடுங்க, திசை யானைகள் நடுங்க, தேவரும் மூவரும் மற்றும் யாவருமே நடுங்க மட்டற்ற திறல் காட்டும் மன்னவன், போர்மகளையும் கலைமகளையும் புகழ்மகளையும் சதா தழுவித் தழுவி இருபது கரங்களிலும் தழும்பேறியவன், முக்கோடி வாழ்நாளைப் பெற்றவன், முயன்று பெற்ற பெருந்தவத்தை உடையவன், எக்கோடியிலும் எவராலும் வெல்லப்படான் என்ற வரச் செல்வத்தைப் பெற்றவன், சாக்ஷாத் இராவணேச்வரன், அவனை எதிர்த்து, அவன் செவி சுடும்படியான வீர வசனங்களை வாரி எறிந்து, தனது கற்பு, பெண்மை, குடிப்பிறப்பு ஆகிய பண்புகளைக் காப்பாற்றினாள் என்றால் அவளுடைய பண்பு மஹோன்னதம் வாய்ந்த மனப் பண்பேயன்றி வேறு எதுவாக இருக்க முடியும்?" [20]

3. என்றும் அழியாத பேரறத்தை நிலைநாட்ட ஜானகி மிக உகந்த கருவியாக வாய்த்துவிட்டாள். அப்படி வாய்த்த காரணத்தால் அவளுடைய தொல்லை தொலையாத தொல்லையாகவே அமைகிறது.

அருந்திறன் வாய்ந்த கருவியாக இருப்பதால், தெய்வநீதியானது அதர்மத்தோடு தான்மேற்கொண்ட போரில் அவனையே இடைவிடாது கையாள முற்படுகின்றது. தர்மத்தின் வெற்றிக் கொடியைத் தாங்கும் ஜயஸ்தம்பமாக நிலைபெற வேண்டுமென்றால் இன்னலுக்கு இரை யாகிக்கொண்டிருக்க வேண்டியதுதானே? [36]

4. சிரிப்பென்பது சாமான்யமான ஒன்றில்லை. அது அபூர்வ சக்தி வாய்ந்தது. திரௌபதி, பாவம், ஒரு சிரிப்புச் சிரித்தாள். மஹாபாரத யுத்தமே வந்து சேர்ந்துவிட்டது. சிவன் ஒரு சிரிப்புச் சிரித்தார். திரிபுரமே எரிந்துவிட்டது. இப்படி இருக்கிறது சிரிப்பின் ஆற்றல். ஒரு சிரிப்பு வெல்லும், ஒரு சிரிப்பு கொல்லும். இதன் ஆற்றலை உலகத்தில் எத்தனை பேர் அறிந்திருக்கிறார்கள் என்பதை அறிய மிகவும் மன வருத்தமாக இருக்கின்றது. [40-41]

5. ஹாஸ்யம் என்பதின் ஆரம்பமே பொருந்தாத நிலையிலிருந்து தான் என்பது தெளிவாகிறது. அதாவது ஒன்று சாதாரணமாக எப்படி இருக்கிறதோ அல்லது எந்த நிலையில் இருக்க வேண்டுமோ அந்த நிலையிலிருந்து எந்த நிலைக்கு மாற்றப்படக்கூடாதோ அந்த நிலைக்கு மாற்றப்படுமானால், ஆதி நிலைக்கும் புது நிலைக்கும் உள்ள வேறுபாட்டில் நகை அல்லது ஹாஸ்யம் தோன்றுகிறது என்பதாகும். ஒருவன் ஒரு ஆட்டுக்குட்டி ஒன்றைத் தோளில் சுமந்துகொண்டு போனால் பார்த்து விட்டுச் சும்மா இருக்கிறோம். ஆனால் ஒரு கழுதைக் குட்டியையோ பன்றிக் குட்டியையோ தோளில் போட்டுக் கொண்டு போனால் நகை தோன்றுகிறது. வெள்ளைக்கார உடை அணிந்த நம்மவருள் ஒருவன், ஒரு கருத்தத்துரை, சாதாரணக் குடையைப் பிடித்துக்கொண்டு போனால் ஒன்றுமில்லை. தாழங் குடையைப் பிடித்துக்கொண்டு போனால் சிரிப்பு வரத்தான் செய்யும். ஆகவே இப்படிப் பொருந்தாத நிலையில்தான் சிரிப்பானது தோன்றுகிறது. [43]

6. உச்சரிப்பாலும் முறைமாற்றத்தாலும் நகை ஏற்படுகின்றது. வார்த்தைகளை ஒருவிதமான முறையில் உச்சரித்துக் கேட்டுவருவது நமது பழக்கம். அவைகள் பொருந்தாத முறையில் உச்சரிக்கப்படு மானால் நகை தோன்றத்தான் செய்யும். "அன்பர்களே" என்று பிரசங்கிகள் சொல்லுவதை நாம் கேட்டிருக்கிறோம். திடீரென்று ஓர் வெள்ளைக்காரர் (தமிழ் அறிந்தவர்தான் என்றாலும்) "ப்ரியமான வர்கலே, மனிக்கவாசகர்" என்று சொல்லக் கேட்டால் நமக்கு நகை தோன்றாமல் என்னசெய்யும்? தொல்காப்பியத்தில் நகைச்சுவையைப் பற்றிவரும் சூத்திரத்திற்கு உரை எழுதிய உரை ஆசிரியர், அந்தக் காலத்தில் நகைச்சுவைக்கு "ஆரியர் கூறும் தமிழும்" என்று உதா ரணம் காட்டினர். நாம் இப்பொழுது "வெள்ளைக்காரர் கூறுந் தமிழும்" என்று மாற்றிக்கொள்ள வேண்டும். "உன் மாடு என் தோட்டத்தில் வந்து மேய்ந்தது" என்பது நாம் சொல்லக் கேட்பது. மேலும் கேட்டுக்கேட்டுப் பழகியது. திடீரென்று ஓர் வெள்ளைக்காரர்

"நீ மாடு நான் தோட்டம் மேய்ந்தது" என்றால் சிரிக்காமல் என்ன செய்ய முடியும்? "சின்னக் குதிரைக்குக் கொஞ்சம் புல் போடு" என்பது நாம் சர்வசாதாரணமாகச் சொல்லிவருவது. "கொஞ்சம் குதிரைக்குச் சின்னப்புல் போடு" என்று ஒரு துரை சொன்னால், அவர் சீமைத்துரையாகவே இருக்கட்டும், நமக்கு நகை தோன்றத் தானே செய்யும்? ஒரு ஆந்திர நாட்டு ஆசிரியர் (Muthiah) முத்தையா என்ற பெயரை மூதியா என்று வகுப்பில் உச்சரித்தாராம். இப்படியெல்லாம் உச்சரிப்பு வித்தியாசத்தால் நகை ஏற்படும். [45]

7. உலகம் துன்பம் நிறைந்தது. நகை என்பது இல்லாவிட்டால் எவ்வளவு அநியாயமாகப்போய்விடும் நமது வாழ்க்கை? மருந்துகளோ மருத்துவர்களோ குணப்படுத்த முடியாத மனக்குறைகளை ஹாஸ்யம் குணப்படுத்திவிடும். சிரிப்பு அத்தனை உயர்வானது. கவலையும், சகிப்பின்மையும்கலந்த வாழ்க்கையிலிருந்து தப்புவதெப்படி? மரணந் தான் தப்பும்வழி என்று சொல்லிவிடலாம். செத்தவன் முகத்தைப் பார்த்தால், அதனிடத்து வேதனைத் தோற்றம் இல்லை. முடிவடைய மறுத்த இன்னல்களின் தடமோ தழும்போ அங்கு இல்லை. சாந்தத்தின் தடமே, துன்ப முடிவின் முத்திரையே நாம் அங்கு காண்பதெல்லாம். இந்த மரணம் செய்வதைத்தான் சிரிப்பும் செய்கிறது. இயற்கை அதற்கு அப்படியான ஒரு குணத்தைக் கொடுத்திருக்கிறது. கவலை, சகிப்பின்மை, வேதனை ஆகிய இவற்றைப் பல ஆண்டுகளுக்கு அப்பால் நினைவுகூர்ந்து பார்த்தால், ஒரு காலத்தில் பனையாக நமக்குத் தோன்றியவை எல்லாம் தினையாகப் போய்விடும். கோபம் சிரிப்பாக மாறும். கடுப்பு கேலியாகமாறும். இரண்டு கிழவர்கள் சந்தித்து ஆதி நாளைய விருத்தாந்தங்களைப்பற்றிப் பேசும்பொழுது இந்த உண்மை விளங்கும். [64]

8. மனிதன் ஒரு நிலையில் தன்னையே மறந்து விடுகின்றான். தன்னைச் சுற்றிலும் படிந்து கிடந்து தன்மீது ஆதிக்கம் செலுத்தும் கட்டுப்பாடுகளை மறந்து விடுகின்றான். தனது குணபாவங்கள், தனது சங்கற்பம், தனது கர்மங்கள் ஆகிய இவைகளுடைய விரிவிலும் பரப்பிலும் சமநிலையோ, சராசரி விகிதாசாரமோ மேவப் பெறாமல் குறைந்தும் கூடியும் அமையும் காரணத்தால், சமய சந்தர்ப்ப நீர்மையை மதியாமலும், உலக இயலை உணராமலும், தெய்வ ஆதிக்கத்தின் மர்மத்தைப் பாராட்டாமலும் ஏதோ ஒரு திசையை நாடியே செல்ல முற்படுகின்றான். எல்லாமும் தன்னால்தான் நடைபெறுகின்றது, தான் இல்லாவிட்டால் எதுவுமே இல்லை என்பதாக மமதைகொண்டு, "நாராயணநம" என்பது வேண்டாம், "ஹிரண்யோ நம" என்றே சொல்லவேண்டும் என வற்புறுத்திய இரணியன் போன்று போலி இரணியனாகிவிடுகின்றான். உலகம் அவனைக்கண்டால் நடுங்குகிறது. வாயொடுங்கிவிடுகிறது. இன்னார் என்று அவன் பெயரைச் சொன்ன அளவில் அழுத பிள்ளையும் குரலொடுங்கும். அவ்வளவு கெடுபிடிக்கும் மனிதன் வந்துவிடுகின்றான். வரக்கூடிய சந்தர்ப்பங்களும் அவன்

வாழும் உலகில் பரவிக்கிடக்கின்றன. எத்தனை இருந்தாலும் கடைசியில் அவனும் அவனைவிட மேலான ஒரு சக்தியின் ஆதிக்கத்திற்கு இரையாகி விடுகின்றான். அவனும் விழுந்து விடுகின்றான்.

"நாட்டுக்கு நாயகன், நம்மூர்த்தலை மகன்,
காட்டுச் சிவிகை ஒன்(று)ஏறிக் கடைமுறை
நாட்டார்கள் பின்செல்ல, முன்னே பறைகொட்ட
நாட்டுக்கு நம்பி நடக்கின்ற வாறே" (திருமந்திரம்)

என்று வரும் பாடலுக்கு மிகப்பக்குவமாக அமைந்த ஓர் இலக்கியம் ஆகிவிடுகின்றான். [68-69]

9. உத்தம பாத்திரங்களினுடைய மனப் போக்கைப் பார்த்தால் நமக்கு அச்சம் கலந்த வியப்பு உணர்ச்சி தோன்றும். 'நாடகத்தில் பார்க்கின்ற தலைவனும் மனிதன். நாமும் மனிதர்கள். என்ன அபாரமான மனப்போக்கு இந்தப் பாத்திரத்திற்கு! என்று வியந்துநெஞ்சம் பறையடிக்கும்படி காணப்படும். நிகழ்ச்சிகள் நிகழ நிகழ, கதை போகப் போக பாத்திரம் வெளிக்காட்டும் பக்தியோ, காதலோ, கோபமோ, கொள்கை வெறியோ அளப்பரிய பரிமாணமும், ஆழமும் கொண்டதாய், அகண்ட வடிவினதாய், மண்ணோ விண்ணோ மறி கடலோ எதுவும் அதற்கு இணையில்லை என்று சொல்லும்படியாக மேலோங்கி நிற்பதைப் பார்க்கலாம். பிள்ளையைக் கறி சமைத்து இட வேண்டுமென்றால், பிள்ளைப் பாசம் பெரிதா, கொள்கைவெற்றி தான் பெரிதா என்று எழுகின்ற அகண்ட பிரச்னையில் கொள்கை வெற்றிதான் பெரிதென மனம் துணிந்துவிடுகின்றது. யாரால் இப்படித் துணியமுடியும்? கண் பெரிதா கண்ணுதலான் அன்புதான் பெரிதா என்று உள்ளத்தே எழுகின்ற அகண்ட பிரச்னையில், கண்ணுதலான் அன்பே பெரிதெனக் கொண்டு கண்ணைத் தோண்டும் அளவில் மனம் துணிகின்றது. [78]

---

## 2. கவிதையும் வாழ்க்கையும்

1. வியாபாரத்தின் ஒரு பகுதியாகிய விளம்பரப் பகுதிக்கு, இக்காலத்தில் பணிப்பெண்ணாக ஏவல் புரிந்து வருகின்றது கலை. கலையின் தலைவிதி அவ்வாறு அமைந்துவிட்டது காலத்தின் கோலந்தான். [2]

2. கலை வெளியீட்டின் நோக்கங்கள் எவை? ஒப்பமுடிந்த உண்மைகளாக அறிஞர்கள் எவைகளைக் கூறுகின்றார்கள்? இதோ பார்ப்போம். கலை வெளியீட்டின் மூலம் உண்மை பிறக்க வேண்டும். அழகு பிறக்க வேண்டும். நன்மையும் பிறக்கவேண்டும். உண்மையும் அழகும் நன்மையுமாகிய முப்பயனையும் விளைய வைப்பதே கலையின் நோக்கம். [10]

3. மனிதன் தான் வாழுகின்ற உலகத்தை மூன்று விதங்களில் மதிப்பிடுகின்றான். அவை முறையே பின்வருமாறு: 1. உடலைக் கொண்டு, 2. அறிவைக்கொண்டு, 3. ஆத்மாவைக்கொண்டு. [29]

4. மிருகம் தன் உடல் தேவையைத் திருப்தி செய்துகொள்ளும் கருத்துடையது. அதனுடைய முயற்சியெல்லாம் தன்னைக் காப்பதி லும் தனது இனத்தைக் காப்பதிலுமே கவிந்து கிடக்கின்றது. சில்லறை வியாபாரிக்கு எவ்வாறு தனது வியாபாரத்தில் அதிக இலாபம்கிடையாதோ, அவ்வாறே மிருகத்திற்கும் தனது ஜீவிதமாகிய வியாபாரத்தில் அதிக இலாபம் கிடையாது. அசலுக்கு வட்டி செலுத் துவதிலேயே அத்தனை இலாபமும் கழிந்துவிடும். அதாவது வாழும் வாழ்க்கைக்கே அத்தனை முயற்சியும் செலவு செய்யப்படும். [32]

5. நம்மையும் நம்மைச்சுற்றியுள்ள சூழலையும் அதற்கும் நமக்கும் ஏற்படும் உறவையும்பற்றி நாம் ஏதேனும் தெரிவிக்க முற்படும்போது இருவிதமான முறைகளைக் கையாளுகின்றோம். ஒருமுறை உள்ளதை உள்ளபடி கூறுவது. மற்றொன்று உள்ளதை உணர்ந்தபடி கூறுவது. உள்ளதை உள்ளபடி கூறும்போது, கூறப்படும் பொருளுக்கும் நமக்கும் ஆத்மத் தொடர்பு ஏற்படுவதில்லை. உள்ளதை உணர்ந்தபடி கூறும்போது, கூறப்படும் பொருளுக்கும் நமக்கும் ஆத்மத்தொடர்பு ஏற்படுகின்றது. [44]

6. ஒரு நண்பர். அவருக்கு எட்டுக்குழந்தைகள். என்ன தீவினையோ தெரியவில்லை, ஒரே வாரத்தில் ஏழு குழந்தைகளையும் எமன் கவர்ந்து விட்டான். போதாக்குறைக்கு மனைவியும் எமனுடன் வாதாடிக் கொண்டிருக்கின்றாள். நாங்கள் யாவரும் துக்கம் விசாரிக் கச் சென்றிருந்தபோது அன்பர் சிரித்துக்கொண்டே இருந்தார். எங்களுக்கெல்லாம் அவர்மீது சந்தேகம் பிறந்துவிட்டது. ஒருவேளை புத்திமாறாட்டம் ஏற்பட்டு விட்டதோ என்பதுதான் எங்கள் சந்தேகம். ஆனால் உண்மை வேறு. துன்பம் ஆகஉச்சத்திற்குப் போய்விட்டால், போன எல்லையே முடிவாக முடிந்த எல்லை, இனிமேல் அதற்கடுத்த எல்லை கிடையாது என்று ஆகிவிட்டால், துன்பத்தைக் கண்டு கண்ணீர்விட்ட நெஞ்சமானது அதனைக்கண்டு நகை செய்யவே துணிந்துவிடும். ஆனந்தம் மிகுதியாகும்போது கண்ணீர்வருகின்றது. அதனை எவ்வாறு மதிக்கின்றோமோ அவ்வாறே துன்பத்திலிருந்து பிறக்கின்ற நகையையும் மதிக்க வேண்டும். [51]

7. மனிதன் வாழ்வதற்குரிய உலகங்கள் இரண்டு. ஒன்று காலம் இடம் ஆகிய வரம்புகளுக்குட்பட்டது. மற்றொன்று காலம் இடம் ஆகிய வரம்புகளைக் கடந்தது. ஒன்று முடிவுடையது. மற்றொன்று முடிவிறந்தது. முடிவுடைய ஒன்றிலே நமது சுவைக்கு முடிவுண்டு. சுகத்திற்கும் முடிவுண்டு.முடிவிறந்த ஒன்றிலே சுவைக்கும் முடிவில்லை. சுகத்திற்கும் முடிவில்லை. முடிவுடைய உலகத்தில் வாழும் மனிதன் முடிவிறந்த உலகைக் காணத் துடிக்கிறான். ஏன் துடிக்கின்றான் என்றால் அதெல்லாம் கருவிலே அமைந்த இயற்கை. [54]

8. கவிதை என்று வரும்போது பொருளைப்பற்றிய சித்தாந்தத்தையே மாற்றிக்கொள்ள வேண்டும். பொருளை நல்ல பொருள் என்றும் தீயபொருள் என்றும் பாகுபாடு செய்வதெல்லாம் உலக நடையில் தான். கவிதை வரம்பிற்குள்ளே அத்தகைய பாகுபாட்டிற்கு இடம் கிடையாது. ஏன் கிடையாதென்றால் கவிதையின் மதிப்பை அளவிடற்குரிய உரைகல் பொருளில்லை யாதலினால். பொருள் என்பது கவிதைக்கு வெளியே உள்ள சரக்கு. வெளிச்சரக்கை மதிப்பிட வேண்டுமா அல்லது அதன்மூலம் உருவான கவிதையை மதிப்பிட வேண்டுமா என்றால் கவிதையைத்தான் மதிப்பிடவேண்டும். *[79]*

9. பொதுவாகக் கவிதையில் இரண்டு இனங்கள் உண்டு. ஒன்று அலங்கார இனம். மற்றொன்று ஆத்மீக இனம். அலங்காரம் என்பது தெரிந்தவைகளை முன் இருத்திக் கொண்டு அவைகளைக் கவிதை வடிவில் புனைந்து காட்டுதல். மற்றொன்று கவிஞனாலும் அறியமுடியாதபடி தற்செயலாக அமைதல். *[102]*

10. கவிதையிடம் காணுகின்ற வார்த்தைகளில் அநேகம் நாம் கையாண்டவைகளே. கவிதைக்குள்ளே அவைகள் சஞ்சாரம் செய்யும்போது புதுமை அழகுடன் காணப்படுகின்றன. மற்றும் அவைகளின் ஸ்தானமே மாறிவிடுகின்றது. ஓசை வளமும் சந்த நலனும் ஆகிய இரண்டுங் கூடி அவைகளின் மீது ஒருவிதமான மெருகையேற்றிவிடுகின்றன. பார்த்து அப்படியே மயங்கிவிடுகின்றோம். *[127]*

11. கற்பனை என்பது சிந்தனையும் காட்சியும் கலந்த ஓர்வகையான கூட்டுத்திறன். *[139.]*

12. வெறுக்கக்கூடிய ஒன்றை விரும்பும்படி செய்வது கற்பனைதான். *[164.]*

13. கவிஞன் என்பவன் மனிதன் என்ற அளவிலே நம்மைப் போன்றவன்தான் என்றாலும், திறமை அளவில் நம்மினின்றும் வேறுபட்டவன். அவனுடைய மனம் தனியான வார்ப்புடையது. அந்தக் காலத்தில் உள்ளவர்கள் 'கருவிலே திருவுடையவன் கவிஞன்' என்றும், 'கண்ணுள்ளவன் கவிஞன்' என்றும், 'தீர்க்கதரிசி' என்றும், 'தெய்வப்புலவன்' என்றும் கவிஞனைப் பாராட்டியுள்ளார்கள். *[203.]*

14. தபால் ஆபீஸ் முத்திரை போன்று ஈச்வர முத்திரை தாங்கிய காரணத்தால் சிலாக்கியமான பாடல்கள் என்று அவைகளை மதித்துவிட முடியாது. முடியாது என்பதோடு மதிப்பதும் பொருந்தாது. காமத்தைக் காதலாக மாற்றித் தருவதுதான் கவிதையின் தொழிலேயொழிய காமத்தைக் கழிகாமமாகக் கலிக்கச் செய்வது கவிதையின் தொழில் அன்று. ஊனினை உருக்குவதோடு கவிதை நின்றுவிடக்கூடாது. ஊனினை உருக்குவதோடு உள் ஒளியையும் பெருக்க வேண்டும். *[207]*

15. இலக்கியம் என்பது மனிதனைப் பற்றியும் இயற்கையைப் பற்றியும் வெளியாகும் வெறும் சொல்லடுக்கில்லை. மனித வாழ்வு எத்தனை அளவெல்லாம் விரிவடைய முடியுமோ அத்தனை அளவையும் விளக்கிக் காட்டும் மெய்யுரை. [210]

16. கவிஞன், தத்துவஞானி, விஞ்ஞானி ஆகிய மூவரும் ஒரு துறையில் நின்று வேலைபார்க்கும் ஊழியர்களே. அவர்களுக்கிடையில் தொழில்முறை பற்றிய வேற்றுமைதான் உண்டேதவிர பயன்பற்றிய வேற்றுமையில்லை. [211]

---

## 3. அசலும் நகலும்

(1. அசலும் நகலும், 2. அழகின் மர்மம், 3. துன்பம், 4. கம்பர் காட்டும் மதம் என்ற நான்கு கட்டுரைகள் கொண்டது.)

1. காமத்தை உதாரணமாக எடுத்துக்கொள்வோம். இலைமறைவு குழை மறைவாக மிக்க அடக்கத்தோடு ஈடுபட வேண்டிய ஒரு சுவை அது. விஸ்தாரமாக அது சித்தரித்துக் காட்டப்படுமேயானால், அதைப் பார்க்கின்ற பொதுமக்களுடைய உள்ளம் திருந்துமா அல்லது திறம்புமா? திறம்பும் என்பதைச் சொல்லவா வேண்டும்? குட்டிச் சுவரில் முட்டிக்கொள்ள வெள்ளெழுத்தா? அடக்கப் பழகும் மனது அழிக்கப்படுகின்றது. இது பொருந்துமா? [9]

2. தமிழ் நாட்டின் எல்லை. இது ஒரு வறண்ட உண்மை. வெறும் நில எல்லை எப்படி உணர்ச்சியை ஊட்ட முடியும்?

"வடவேங்கடம் தென்குமரி ஆயிடைத் தமிழ் கூறும் நல் உலகம்."

"வடக்கே வேங்கடமலை, தெற்கே குமரி எல்லை, இவற்றின் நடுவே இருப்பது தமிழ்பேசும் நல் நாடு"—இதுதான் பொருள். இதில் உணர்ச்சிக்கு இடமிருக்கிறதா என்றால், இல்லை.

"குணகடல் குமரி குடகம் வேங்கடம் எனும் நான் கெல்லையின் இருந்தமிழ்க் கடலுள்."

இந்த அடிகளும் தமிழ் நாட்டின் எல்லையைத்தான் குறிப்பிடு கின்றன. உணர்ச்சி இருக்கிறதா என்றால் "தமிழ்க் கடலுள்" என்ற உருவகத் தொடரில் ஏதோ கொஞ்சம் அரும்புகிறது.

"நீலத்திரைகடல் ஓரத்திலே—நின்று
நித்தம் தவஞ் செய் குமரி எல்லை—வட
மாலவன் குன்றம் இவற்றிடையே—புகழ்
மண்டிக்கிடக்கும் தமிழ்நாடு."

இந்தப் பாடலும் தமிழ் நாட்டின் எல்லையைத்தான் குறிப்பிடுகிறது. ஆனாலும் வெறும் வறண்ட விஷயமாகத் தெரியவில்லை தமிழ்நாட்டின் எல்லை. உணர்ச்சி செறிந்திருக்கிறது. கடவுளே! “பஃறுளியாற்றுப் பன்மலை அடுக்கத்துக் குமரிக் கோடும் கொடுங்கடல் கொண்டது போகட்டும். இனி இருக்கிற தமிழ் நாடாவது க்ஷேமமுற வேண்டும். அதற்கு நீ அருள் செய்” என்று குமரித் தெய்வம் தவங்கிடப்பதாகச் சொல்கின்றார். [23-24]

3. கருத்து வடிவில் இருக்கின்ற உண்மைகளை, வேண்டும் உண்மைகளோ வேண்டா உண்மைகளோ அக்கறையில்லை, உணர்ச்சி மயமாக ஆக்கித்தரும் சக்தி கவிதைக்கு உண்டு. [27]

4. தெருவிலே வருகின்றது ஒரு எருமை மாடு, வடவேங்கடம் முதல் தென்குமரிவரை அதைப் பார்க்கின்றவர்கள் எல்லோரும் அதை ‘எருமைமாடு, எருமைமாடு’ என்றுதான் அழைக்கின்றார்கள். யாரேனும் அதைப் பார்த்து ‘எமன் ஏறும் பரி’ என்ற தொடரை ஞாபகப்படுத்தினால், கேட்பதற்குக் கொஞ்சம் சுவையாகத்தான் இருக்கிறது. இன்னும் கற்பனை நிறைந்த ஒருவர் அதைப் பார்த்து (Brake Inspector) ‘ப்ரேக்-இன்ஸ்பெக்டர்’ என்று சொல்லும்போது கேட்பதற்கு மிகவும் ருசிகரமாக இருக்கின்றது. ஏனென்றால் கற்பனை முலாம் பூசிய தொடராக இருப்பதனால். [51]

5. அரிச்சந்திர மயான காண்ட நாடகத்தை அற்புதமாக நடிக்கப் பார்த்த நாம், வீடு திரும்பும்போது, அழுதுகொண்டு வருகிறோமா அல்லது கொடுத்த காசு தகும் என்ற ஆனந்த உணர்ச்சியோடு வருகிறோமா? ஆனந்த உணர்ச்சியோடுதான் வருகின்றோம். அம்மாதிரியான அனுபவந்தான் காவியத்திலும். [63]

6. அழகுணர்ச்சியை எவ்வாறு பெறமுடியும்? நம் நாட்டில் இன்றுவரை கதையாக ஒன்றை வழங்கி வருகின்றார்கள். கதையென்றாலும் அதன் மூலம் ஒரு அற்புதமான உண்மையானது வெளியாகின்றது. துரியோதனன் உலகமெல்லாம் சுற்றியும் பத்து உத்தமர்களைக் காணமுடியவில்லையாம். தருமர் உலகமெல்லாம் சுற்றியும் கெட்டவர்கள் பதின்மரைக் காண முடியவில்லையாம். ஆகவே எல்லாம் பார்வையைப் பொறுத்தது என்பது தெளிவாகின்றது. [90-91]

7. இராமாயண காவியத்தில் இராவண வதைக்கு அப்புறம் கதையெல்லாம் அத்தனை சாரமில்லைதான். ஏனென்றால் காவியத்தின் பிரதான அங்கங்களெல்லாம் இராவண வதையாகிய கதிக்கே நம்மை இட்டுச் சென்றன. வதையைக் கண்டதும் நமக்கு அடுத்து வரும் நிகழ்ச்சிகளில் சுவை தட்டத்தான் செய்யும். [124]

8. கலையில் காணும் அழகின் மர்மம் யாதென்றால், கலை அழகு கர்ம நெருக்கடி அற்றது. வீட்டு வாழ்க்கையின் ஒரு அங்கமாக அரிச்சந்திர மயானகாண்டம் நடப்பதென்றால் தாங்காது. ஆனால் மேடை

நடிப்பாக வெளிப்படுவதென்றால் தாங்கும். இன்னும் இன்பமாகவும் இருக்கும். எதனால் என்றால் கர்ம நெருக்கடி இல்லாததினால். [133]

9. போரின் பயனாக நாம் தியாகம் செய்யப் பழகுகின்றோம். எங்கே அடிமைத்தனம் தாண்டவமாடுகிறதோ அங்கேதான் சகோதரத்துவம் தோன்றவும் வழி ஏற்படுகின்றது. எங்கே விபசாரம் தலை விரித்து ஆடுகிறதோ அங்கேதான் பெண்ணின்பெருமையை உணரும் சந்தர்ப்பமும் உருவாகின்றது. இன்னல்களின் பயனாகவே மனிதன் மனிதனாகின்றான். இன்னும் அமரனாகவும் வழி ஏற்படுகின்றது. ஒழுக்கம் பிறக்கின்றது. மதி ஓங்குகின்றது. இன்னும் எத்தனை எத்தனையோ பண்புகளெல்லாம் பிறக்கின்றன. ஒருவேளை துன்பம் என்பதே இல்லாது போய்விடுமானால், இந்தப் பண்புகளெல்லாம் பிறவாதே போனாலும் போய்விடும். [197-198]

10. மனிதன் ஒரு உண்மையைக் கண்டுகொண்டான். அது யாது? குறை என்பது நிறைக்கு விரோதமானதில்லை; அநித்தியம் என்பது நித்தியத்திற்கு விரோதமானதில்லை; ஆனால் குறை என்பது நிறையினுடைய **பகுதி வெளியீடு**; அநித்தியம் நித்தியத்தின் **பகுதி வெளியீடு**; **பரிபூரணத்வமே** முடிவாக **முடிந்த கதி** என்ற உண்மைதான் அவன் கண்டுகொண்ட உண்மை. [203]

11. உலகத்தில் நாளது தெய்திவரை மரித்துப்போன உயிர்களையும் அழுகிப்போனபதார்த்தங்களையும் கணக்கெடுத்தால்," ஐயோ கடவுளே! இவ்வளவு அழிவா?" என்று நெஞ்சு பறையடிக்க ஆரம்பித்துவிடும். ஆனால் தீமையின் நிலை என்ன? அது நகர்ந்து கொண்டே இருக்கிறது. நாம் அதை நிறுத்திவைத்துக்கொண்டு, அதை மிகைப் படுத்தி நடுங்குகின்றோம். தீமைக்கு எவ்வளவோ வலிமை இருக்கத்தான் செய்கின்றது. ஆனாலும் வாழ்க்கையின் போக்கை முற்றிலும் அணைகட்டித் தடுத்துவிடுகின்றதா என்றால், இல்லை. [204]

12. மனிதன் எப்பொழுது தன்னைத் 'தன்னலம்' என்னும் கூண்டிலிருந்து விடுவிக்கின்றானோ, இன்னும் 'தன்னலம்' என்ற நிலையைக் காட்டிலும் விரிந்த நிலை ஒன்றிருக்கிறது என்பதை எப்பொழுது உணருகின்றானோ அப்போதுதான், அவன் தன்னுடைய ஆத்ம இயல்பையே அறிந்தவனாகின்றான். அப்பொழுதுதான் **இருக்கும் நிலையை ஒதுக்கி இருக்கவேண்டிய நிலை** யாது என்பதையும் தெரிந்து கொள்ளுகின்றான். [208]

13. ஒரு குடம் தண்ணீரைத் தூக்கும்பொழுது நமக்கு அதனுடைய கனம் தோன்றுகிறது. ஆனால் ஆற்றில் நீராடும்பொழுது எத்தனை குடம் தண்ணீர் தலைக்குமேலே கூடிப்போகின்றது? கனம் தெரிகின்றதா? அம்மாதிரியே தன்னலம் என்ற ஒன்று நமது மனத்தினுள்ளே இருக்கும்போது இன்பத்தின் கனத்தையும் உணருகிறோம் துன்பத்தின் கனத்தையும் உணருகிறோம். ஆனால் தன்னலம்

என்பதை அறவே துறந்துவிட்டு பரோபகார நலத்தில் மனம் திளைத்து விடுமேயானால் இன்ப துன்பங்களின் கனமே நமக்குத் தென்படாது. [210]

**14.** துன்பத்தினின்றும் காப்பாற்றப்படுவதில் இல்லை மனித சுதந்திரத்தின் மாண்பு. தனது இன்ப அனுபவத்தின் ஒரு பகுதியாகத் துன்பத்தை ஏற்றுக்கொள்வதில்தான் மாண்பு மிளிர்கின்றது. [215-16]

**15.** கம்பருடைய காவியத்திலுள்ளே புகுந்து விருப்பு வெறுப்பு அற்ற முறையில் ஆராய்ச்சி செய்யும்போது ஒரு உண்மை தெளிவாகப் புலப்படுகின்றது. கம்பர் பொதுநோக்க முடையவர் என்பதே அந்த உண்மை. [224]

16. வில்லிபுத்தூரார் பாரதம் போலக் கம்பராமாயணமும் சைவ வைணவ பாரபட்சமில்லாத இதிகாசம் என்பது அதனை முற்றப் படிப்போர்க்குத் தெற்றெனப் புலப்படும். [226]

## 4. மின்னல் கீற்று

(மகான் நீலகண்ட சிவனின் வாழ்க்கை வரலாறு)

*1.* மனத்தை நாகரிகப்படுத்தாது மிருகத்தனத்தையே நாகரிகப் படுத்தும் இந்தக் காலத்திலும் கடவுள் நம்பிக்கைக்கு இடம் உண்டு. (முகவுரை)

*2.* மகானுக்குரிய அறிகுறி நாளும் கிழமையும் நல்லோரையும் பார்த்து, தபால் பார்சல் வந்த மாதிரி வந்துவிடப் போகிறதில்லை. விளையும் பயிர்தான் முளையிலே தெரியுமே. [2]

3. எப்போதும் பெற்றோர்களுக்குத் தங்களுடைய இச்சை வெறுப்பாகிய அளவுகோல் கொண்டே தங்களுடைய பிள்ளைகளை அளப்பது இயற்கை. மிகவும் சொற்பம் பிள்ளைகளின் நீக்குப் போக்கை உணர்ந்து ஒழுகும் பெற்றோர்கள். அன்பருடைய (நீலகண்ட சிவம்) பெற்றோருக்கு மிகுந்த வியாகூலம் உண்டாகிவிட்டது எங்கே பிள்ளை துறவியாகப் போய்விடுவானோ என்று. ஆகவே உலக பந்தமாகிய பாச வலையில் அவரை வீழ்த்துவதற்குச் சதி செய்ய முற்பட்டனர். பிள்ளையின்பால் விளங்கும் அழுத்தமான சிவப்பித்தை அவர்கள் உணர்ந்தார்களில்லை. ஒருவேளை உணர்ந்தாலும் பிள்ளைப் பாசத்தால் மதிக்க முற்பட்டார்களில்லை. ஏதோ ஒரு கல்யாணத்தைச் செய்துவைத்தால் மூக்குச்சரடுக்கு அடங்கின காளை போன்று பையனும் அடங்கிவிடுவான் என்று எண்ணினர்கள். [27]

**4.** மகான் மாணிக்கவாசகர் மந்திரி உத்தியோகம் பார்க்க வில்லையா? சிறுத்தொண்டர் தண்டத் தலைவராக விளங்கவில்லையா?

சேக்கிழார் மந்திரத் தலைமை பூணவில்லையா? ஆகவே ஸ்ரீ நீலகண்ட சிவமும் உத்யோகம் தரித்ததில் எந்தவிதமான புதுமையும் இல்லை. உத்யோகம் பார்த்தும் உள்ளச் சிதைவு ஏற்படாதிருந்ததுதான் ஆச்சரியம். [45]

5. கடவுள் விரகம் உந்தி, உள்ளம் கறங்காகச் சுழலும்போது, வீடு கட்டவும், மாடி சமைக்கவுந்தான் மனம் ஒருப்படும்போலும்? அரியோடு பழகிவிட்டு அங்கணத்து அழுக்குத் தின்னும் நரியோடு பழகுவதா? தம்மாலே தாங்கமுடியவில்லை. நிற்கவோ நிலைக்கவோ பொறுமை இல்லை. கூழில்லை என்றாலும்கூட வறுமை நிலைக்கு அழுத்தங்கிடையாது. ஆனால் கூழுக்கு இட உப்பில்லை என்னும் போதுதான் அழுத்தம் கிடைக்கிறது. அதே போன்று வீடு கட்டாது விட்டுவிட்டால் அவருடைய துறவு உள்ளத்தின் மேம்பாடு தெரியாது. ஆரம்பித்து இடையில் விடும்போதுதான் துறவு உள்ளத்தின் சீலம் துலங்குகின்றது. [49]

6. ஆலயத்தைச் சென்று பார்வையிட்டால், ஒருவன் சிற்ப உள்ளத்தோடு மதிப்பிடுவான். ஒருவன் வயிறு கொண்டே மதிப்பிடு வான். அதெல்லாம் அவனவன் பாவனையையும் மனப் பக்குவத்தை யும் பொறுத்தது. ஆகவே பக்தருக்கு வீடுவீடாகவே தோன்றவில்லை. பஜனை மடமாகவே தோன்றிற்று. [51]

7. இன்று வரை நம் நாட்டிலே ஒரு குறை இருந்து வருகின்றது. அது என்னவென்றால் உள்ளூர் மகிமையைக் காலந்தாழ்த்தியே மதிக்க முற்படுதல். இந்தக் குறை வடவேங்கடம் தென்குமரி எல்லைக் குள் ஒரு வியாதி போன்றே உலவி வருகிறது என்று சொன்னாலும் குற்றமில்லை. முற்றத்து முல்லைக்கு மணம் இல்லைதானே? எட்டப் போய் உதாரணம் தேட வேண்டாம். வ. உ. சிதம்பரம் பிள்ளை அவர்கள், அமரகவி பாரதியார் ஆகிய இவர்களை ஞாபகப்படுத்திக் கொண்டால் போதுமானது. [74]

8. எளிமை துடியாக விளங்குவதை யாரிடம் காணலாம்? இலக்ஷிய வாதிகளிடம்தான் காணலாம். அவர்களுக்கு இலக்ஷியந்தான் பெரிது. இலக்ஷியப் பித்து ஏறஏற அவர்களுடைய உடை, அணி, பேச்சு, செயல் எல்லாம் அந்த இலக்ஷியத்தைச் சுட்டிக் காட்டும் சின்னங்க ளாகவே தோன்றும். [82]

---

## 5. மேடைக்கலை

1. பேச்சுக்கலை மிகமிகப் புனிதமானது. ஆயிரம் யானைகளைக் கூட வெட்டி வீழ்த்திவிடலாம்; ஆனால் ஐம்பது இதயங்களை வெல்வ தென்பது கடினமான காரியந்தான். (முன்னுரை)

2. எழுத்துக்கு மதியை வசீகரிக்கும் ஆற்றல் நன்ருக உண்டு. பேச்சுக்கோ மனத்தை வசீகரிக்கும் ஆற்றல் நன்ருக உண்டு. மதியின் மூலம் மனத்தைத் திருத்துவதைவிட மனத்தின்மூலம் மதியைத் திருத்துவது மிகமிக இலாபகரமானதே. (முன்னுரை)

3. சித்திரம் வரைவது ஓர் கலை; இசைபாடுவது ஓர்கலை. கவிதை எழுதுவதும் ஓர்கலை. அம்மாதிரியே பிரசங்கம்செய்வதும் ஓர் கலைதான். ஏனையகலைகளில் தேர்ச்சிபெறுவதற்குப் பயிற்சி எத்தனை அவசியமோ அத்தனை அவசியம் இந்தக்கலைக்கும். [4]

4. பேசுகின்றவன் இருவிதமான கட்டுப்பாடுகளை மேற் கொள்ளுவது அவசியம். ஒன்று விஷயக்கட்டுப்பாடு; மற்ருென்றுஎதிர் இருப்பான் கட்டுப்பாடு. விஷயக் கட்டுப்பாடானது தெள்ளத்தெளியச் சிந்திப்பதனுல் உருவாகின்றது. எதிர் இருப்பான் கட்டுப்பாடு தெள்ளத்தெளிந்த விஷயத்தை எடுத்துச் சொல்வதன் மூலம் உருவா கின்றது. பெரிய பிரசங்கத்திலும் இந்த இரண்டு கட்டுப்பாடுகளே மிகவும் முக்கியமான கட்டுப்பாடுகள். [10-11]

5. முதன் முதலில் பேசும் பொழுதே ஒருவன் நடுக்கம் இல்லாது பேசிவிடுவானுயின், பிரசங்க சம்பிரதாயம் அதனை அபசகுனமாகவே கொள்ளும். ஏனென்ருல் நடுக்கம் அத்தனை இன்றியமையாததா கின்றது. பேசுகின்றவன் மண்ணுளிப் பாம்பு போன்ற மசணை இல்லை; மிகுதியான தன்மரியாதை உடையவன் என்பதை நடுக்கம் குறிப்பிடுகின்றது. தன்னிடத்திலுள்ள திறனை யெல்லாம் வெளிக் கொணர மிகவும் துணை செய்கின்றது. [16]

6. மேற்கோள்களை மனப்பாடம் செய்துகொள்வது மிகமிகப் பொருத்தமானதே. பிரசங்கம் முழுவதையும் மனப்பாடம் செய்வதை அறவே ஒழித்துவிட வேண்டும். [28]

7. குறிப்புகள் கையில் இருக்கின்ற தெம்பினுல் விஷயத் தெளிவைச் சித்திரமயமாக்கி மனக்கண்முன் நிறுத்தும் முயற்சியில் அதிகப்படியான ஊக்கம் பிறக்காது. தன்னிடத்திலே நம்பிக்கை கொள்ளப்பழகும் திறமை வளராது. "குறிப்புத்தான் கையில் இருக் கின்றதே, வேண்டும் போது பார்த்துக்கொண்டால் போதுமானது" என்றெல்லாம் எண்ணத்தோன்றும். அத்தகைய எண்ணம் தோன் றுவதெல்லாம்சோம்பேறித்தனத்தின் அறிகுறியல்லவா....?... நடக்கப் பழகும் பிள்ளை சதாகாலமுமா தூணையோ, சுவரையோ பிடித்துக் கொண்டு நடக்கிறது? நடை பழகுகின்றவரை பிடித்துக்கொள் கின்றது. அப்பாலே விட்டு விடுகின்றது. அம்மாதிரியே இப்பழக்கத் தையும் விட்டுத்தள்ள வேண்டும். [29-30]

8. ஆரம்பப் பயிற்சியில் ஈடுபடுகின்ற அநேகர் ஓர் தவறு செய் கின்றனர். அதிலுள்ள விசேஷம் என்ன வென்ருல் தவறு என்பதை உணராமலே செய்கின்றனர். எது பொருள்பற்றிப் பேசமுற்படுகிருர்

களோ அதனைப்பற்றிய குறிப்புகளைத் தேடும் இடம் அவர்களுடைய அகமே என்பதை மறந்து, அவர் என்ன சொல்லியிருக்கிறார், இவர் என்ன சொல்லியிருக்கிறார் என்று, இரவல் சரக்குகளை வேட்டையாடித் திரட்டுவர். முற்றமுழுக்க இரவல் சரக்குகளையே வாங்கிப் பகட்டினால் கேட்கின்றவர்கள் கேலிசெய்வார்களே என்று தங்களுடைய சொந்தச் சரக்குகளையும் இடையிடையே கலந்துவைப்பர். இந்த ஆத்திரம் பெரும்பாலோர்க்கும் உண்டு. இவ்வாறு கலப்பது நல்லதாகுமா என்றால் ஆகவே ஆகாது. [38]

9. கையாளப்படும் மேற்கோளானது கருத்தை நாடி வரக்கூடியதாக இருக்க வேண்டுமே தவிர, கருத்தானது அதனை நாடிச் செல்லக் கூடியதாக இருக்கவேகூடாது. கருத்தை நாடி வருவது சிறக்கும். கருத்தை நாடிச் செல்வது சிறக்காது. பிரசங்கம் அழகு பெறும் என்ற நோக்கத்தோடு வலிந்து புகுத்தினால் அழகு குன்றுமே யொழிய எவ்விதத்தும் கூடாது. [41]

10. மனிதக் கூட்டம் உடையை மதிக்கின்றது. அலங்கார உடையைக்கண்டு மனிதக்கூட்டம் மகிழ்ச்சி கொள்ளுகிறது. 'ஆள் பாதி ஆடை பாதி' என்ற பழமொழி வெறும் பழமொழி அன்று. உள்ள அழகை உடைஅழகு திருத்துகின்றது. பார்க்கின்றவர்களுக்குப் பிரியத்தை ஊட்டுகின்றது. மதிக்கத் தூண்டுகின்றது. ஆகவே பிரசங்கிகளாக வருகின்றவர்கள் எளிமையும் கவர்ச்சியும் கலந்த முறையில் உடை அணிவது மிக முக்கியமான ஓர் கடமை என்பதை உணர்வார்களாக. [54]

11. பிரசங்கத் துறையில் வெற்றி கிடைப்பதெல்லாம் சொல்லும் பொருளால் அன்று, சொல்லும் முறையால்தான். [56]

12. சபையோரின் கவனத்தை இழக்கும் முறையில் பிரசங்கியார் பேசுவதைக் காட்டிலும் பேசாதிருப்பதே நல்லது. இன்னும் வேண்டாத அங்க அசைவுகளையும் செயல்களையும் கையாண்டு கொண்டு பேசமுற்பட்டால், பயிருக்கிட்ட உரத்தைக் களை கவர்ந்து பயிரை மெலிவிப்பதுபோன்று, கேட்பார்தம் கவனத்தை இக்குறைகள் கவர்ந்து கொண்டு பிரசங்கத்தைச் சாரமற்றதாக ஆக்கிவிடும். கேட்கின்றவர்களில் பலரும் அக்குறைகளைக் கவனிப்பதிலேயே ஈடுபடுவார்களேயன்றி பிரசங்கியார் பேச்சைக் கேட்கப்போவதில்லை. [59]

13. குழந்தையினிடம் நிகழும் மெய்ப்பாடு எத்தனை இயற்கையுடையதோ அத்தனை அளவு இயற்கைத்தன்மை உடையதாகவே பிரசங்கியினிடமும் மெய்ப்பாடு நிகழவேண்டும். வலிந்து புகுத்துதல் என்பது எவ்விதத்தும் கூடாது. மெய்ப்பாடுகள் இயல்பான முறையில் நிகழக்கூடியனவாக இருக்குமானால், கருத்தை விளக்குவதற்குக் கையாளப்படும் வார்த்தைகள் போன்று இன்றியமையாதனவாக இருக்குமானால், அவைகள் வரவேற்கவேபடும். அதற்கு எவ்விதமான ஆட்சேபணையும் கிடையாது. [62]

14. பேச்சைத் தயார்செய்யும் பிரசங்கி வெறும் அறிவால் தயார் செய்வது போதாது. ஆத்மாவாலும் தயார்செய்யவேண்டும். "நான் வாழவேண்டும்" என்றான் ஒருவன். "உன் வாழ்வின் அவசியம் எனக்குப் புலப்படவில்லையே" என்றான் வால்ட்டையர். அவருடைய எண்ணந்தான் அநேகருக்கும். பிரசங்கி சொல்வதைப்பற்றி யாருக்கும் கவலை கிடையாது. பிறரைக் கவலைகொள்ளச் செய்வது பிரசங்கியின் கடமை. [64]

15. பக்தனுக்கு ஆண்டவனிடம் எத்தனை பக்தியோ, காதலனுக்குக் காதலியினிடம் எத்தனை காதலோ, உலோபிக்குப் பணத்தினிடம் எத்தனை மோகமோ, அத்தனை அளவுக்கு விஷயத்தோடு பற்றுக்கொள்ளவேண்டும். [65]

16. எந்தப்பிரசங்கியானாலும்சரி, அவன் மேடைமீது ஏறின உடனே இரண்டு மூன்று நிமிஷங்களுக்கு அமைதியைக் கண்டிப்பாக அனுபவிக்கலாம். அந்த அமைதி அவகாசத்தை நன்றாகப் பயன் படுத்திக்கொள்வது பிரசங்கியின் பொறுப்பு. வேண்டாத பாணியில் சபையினர் தம் பொறுப்பை இழக்கும் ரீதியில் அவையடக்கம் கூறிக் கொண்டு போனால் 'கனியிருப்பக் காய் கவர்ந்தற்று' என்றுதான் சொல்லவேண்டும். [72]

17. பிரசங்கிகளாக வரவிரும்புகின்றவர்கள் தயவு செய்து, தங்களுடைய அறிவிலும் ஆற்றலிலும் நம்பிக்கை இல்லாமல், பேச வந்திருப்பதாகக் கூறும் ஏளனப் பழக்கத்தை ஒழிப்பார்களாக. அல்லாமலும் பிரசங்க மேடைமீது நிற்கும்போது, தூக்குமேடையில் நிற்பவன் எவ்வாறு கவலை தேக்கிய முகத்தினனாக நிற்பானோ அவ்வாறு நிற்காது, வயது எத்தனை ஆனாலும், துள்ளுமான் கன்றாக நிற்கப் பழகுவானாக. நிற்கும் நிலையே பிரசங்கம் என்னும்படி நிற்க வேண்டும். [89]

18. கருத்து நன்றாகப் பதிய வேண்டும் என்றால் வாக்கியம் நன்றாக அமையவேண்டும். வாக்கியம் முறுக்கேறியிருந்தால் கருத்தும் முறுக்கேறியிருக்கும். வாக்கியம் தளர்ச்சியுடையதாக இருந்தால் கருத்தும் தளர்ச்சியுடையதாகவே இருக்கும். ஆகவே வாக்கியங்களை அமைப்பதில் பிரசங்கிகள் நன்றாக முயற்சி செய்யவேண்டும். சிலர் கட்டை வடிவமான வாக்கியங்களைப் பெரிதும் உபயோகிப்பர். சிலர் தென்குமரி முதல் திருவேங்கடம் வரை நீளும்படியான அத்தனை நீண்ட வாக்கியங்களை உபயோகிப்பர். [123]

19. இனி அதிக நீளமாக நீண்டு, சுருண்டு, நெளிந்து, வளைந்து, கூம்பி, குறுகி, ஓய்ந்து, ஒடுங்கி, தேய்ந்து, திரைந்து, பேசுகிறவரும் மூச்சுவாங்க, கேட்கிறவர்களும் மூச்சுவாங்க, இடையில் சிறிது பானம் அருந்தி, மீட்டும் தொட்டு, தொடர்ந்து, இணைத்து, பிணைத்து, திருக்கி, முறுக்கி, விரித்து, செறித்து, ஆல், ஆன், உம், ஒடு, ஆகவே, எனவே, ஆதலால் என்பதால் என்பவைகளையெல்லாம் தொடுத்து, மடுத்து

வாக்கியங்களைப் படுத்து உயிரைவாங்கும் உபந்நியாசர்களும் உண்டு. ஏன்தான் இப்படி நீட்டிப்பேச வேண்டுமோ தெரியவில்லை? கடவுள் வாழ்த்திலிருந்து திருச்சிற்றம்பலம் கூறும்வரை, இரண்டுமணிநேர அளவில், எண்ணிப்பார்த்தால் எட்டுவாக்கியங்களேபேசியிருப்பார்கள். இவ்வாறு பேசுவது பேச்சுத்திறமையின் அறிகுறியா என்றால், அவ்வாறு பேசுவதைப் பேச்சென்று ஒப்புக்கொண்டால் அல்லவா, திறமையைப்பற்றிய கேள்வி எழும்? அது பேச்சே இல்லை. வெறும் கதைப்பு. அவ்வளவுதான் சொல்லலாம். வாக்கியங்களை அமிதமாக நீட்டிப் பேசினால் கருத்தின் கதி என்ன? கருத்தின் உருவமே சிதைந்துவிடும். கடலில் கரைத்த கோட்டம் போன்று ஒன்றுமில்லாது ஒழிந்து மறையும். மற்றும் கேட்கின்றவர்களும் சலிப்படைந்து விடுவார்கள். எட்டு மைலுக்கு அப்பாலே எழுவாயை மூளை அறைந்து கட்டிவிட்டு மனம்போன போக்கில் காடும் செடியும், கட்டியும் கரணும், முள்ளும் புதரும் செறிந்த இடங்களின் வழியே கேட்கின்றவனுடைய மூளையை இழுத்துக்கொண்டு சென்றால், சிவனுடைய அடிமுடி காணாத பிரம்ம விஷ்ணுக்கள் போன்று, கேட்கின்றவனும் கருத்தினுடைய அடிமுடி காணாத பிரம்ம நாராயணனாகத்தான் வீடு திரும்ப வேண்டும். "படித்தவன் பாட்டைக் கெடுத்தான் எழுதினவன் ஏட்டைக் கெடுத்தான்" என்ற கதையில், "பேசினவன் மூச்சை இழந்தான், கேட்டவன் நாட்டம் இழந்தான்" என்றுதான் சொல்ல வேண்டும். [126-27]

20. மேன்மைவாய்ந்த சில பிரசங்கிகளுடைய முடிவுரைகளைப் படிக்கும்போது, இம் முடிவுரைகள் அனைத்தையும் ஒன்றாகத் தொகுத்து வெளியிட்டாலும் புண்ணியம் என்று எண்ணத் தோன்றுகிறது. ஏனென்றால் முடிவுரையின் எல்லைக்குள்ளே விரிவுரையின் சொரூபம் விளங்குகின்றது. அவ்வாறு விளங்குவதே முடிவுரையின் சிறப்பு. [128-129]

---

# 6. கவிதை

1. உலகத்தில் எங்கும் நீக்கமற நிறைந்திருக்கும் அழகை எதார்த்தம் என்ற திரையானது மறைத்து வைக்கின்றது. கவிதை அந்தத் திரையைக்கிழித்து அழகைக் காணும்படி துணைசெய்கின்றது. [4]

2. கவிஞனுக்கு நம்மைவிட எவ்வளவோ மேலான அறிவுஉண்டு. உணருகின்ற ஆற்றலும் உண்டு. மற்றும் உணர்ந்ததை உணர்த்துகின்ற ஆற்றலும் உண்டு. [5]

3. கவிதை என்பது உண்மையும் ஆகாது. ஞானமும் ஆகாது. ஆனால் உண்மைக்கு அழகைக் கொடுப்பது. ஞானத்திற்கு ஒளியைக் கொடுப்பது. [39]

4. புனிதமான கவிதாலயத்திற்குள் செல்லும்போது ஆலயத்தின் முன்னுள்ள பலிபீடத்தில் இந்தச் 'சுயஉணர்வை'ப் பலியிட்டுவிட வேண்டும். [42]

5. தண்ணீரே கிடையாத வறண்ட காடு என்று சொல்வதைவிட அக்காட்டிலே செல்கின்றவன் தண்ணீர் கிடையாது மனம் அழுங்கிக் கண்ணீர்விட, அக்கண்ணீரே அவனுடைய நாவை நனைத்து அவனுடைய தகையை அடக்கும். அத்தகைய கொடிய காடு என்று சொல்லும்போது காட்டின் தீத்தன்மை தெளிவாக விளங்குகின்றது. மனதில் அழுத்தமாகப் பதிகின்றது. இதயச் சலனத்தையே கூட்டி வைத்து விடுகின்றது.

> "உண்ணீர் பெறாத் தடுமாற்(று) அருந்துயரம்
> கண்ணீர் நனைக்கும் கடுமைய காடு"

இப்படிச் சொல்வது நமது நெஞ்சத்தை அள்ளவில்லையா? [37]

6. கவிதையை அனுபவிப்பதில் எவ்வளவு அளவுக்கு மனச் சுருளை விரிக்க முடியுமோ அவ்வளவு அளவுக்கு விரித்து அனுபவிக்க முற்படவேண்டும். [50]

---

# 7. அமரகவி பாரதி

1. பாரதியாரைக் கவிஞனாகக் கண்ட பெருமை பாமரர்களுக்கே உண்டு. பாமரர்களைக் கலைஉணர்வு பெறச்செய்த யுகத்தின் பிதா கவி பாரதியே ஆவர். வித்தகர்கள் யாவரும் மதியால் அளந்து மதிப் பிடும் முன்பே பாமரர்கள் பலர் தம்தம் மனத்தால் அளந்து மதிப்பிட்டு விட்டார்கள். [5-6]

2. பாரதியார் ஓர் மகத்தான பரிசு. யார் தந்த பரிசு? காலம் தந்த பரிசு. சிலருக்காகவே பலர்என்ற வேதாந்தம் மாறி எல்லோரும் எல்லோருக்கும் என்ற வேதாந்தம் தடித்து வருகின்ற காலம் இந்தக் காலம். காலத்தை பாரதியார் உணர்த்தினார் என்று சொல்வதைவிட காலம் பாரதியார் மூலம் தன்னை உணர்த்திற்று என்றுதான் சொல்ல வேண்டும். ஏனென்றால் அவ்வாறு பேதமற நிற்கும் பெருமை பாரதி யாருக்கு வாய்த்திருக்கிறது. கண்ணும் செவியும் கருத்தும் மழுங்கிக் கிடந்த பாமரர்களுக்கு விழியும் மொழியும் விழுமிய கதியும் வழங்க வல்ல கற்பகமாக அல்லவா பாரதியார் தோன்றிவிட்டார். [6-7]

3. சாம்பிக் கிடக்கும் உள்ளங்களையெல்லாம் தட்டி எழுப்பும் சங்குகளே அத்தனை கீதங்களும். சுதந்திரப் போருக்கு **வில்லும் வேலுமாக** நின்று அவைகள் செய்த சேவை மிகவும் மகத்தானது. துள்ளு நடையிலும் துடிக்கின்ற செந்தமிழிலும் வார்த்த வார்ப்புகள் ஆதலினாலே அவைகளுக்கு அத்தனை வன்மை இருக்கின்றது.

அணுக்குண்டு போன்று **தேசத் துரோகச் சிந்தைகளைத்** தகிப்பதில் பேராற்றல் பெற்றவை [12]

4. இந்தியர்களுடைய பார்வையும் **பாவனையும்** திசைதிரும்பி விட்டன. நெறி விலகிவிட்டன. அவைகளை உரிய நெறியில் செலுத்த வேண்டும். அதற்காக வேண்டி ஓர் சக்தியின் அவதாரம் இன்றியமையாததாகி விட்டது. தெய்வ அருளால் அவதாரம் கைகூடிற்று. அந்த அவதாரத்தின் ஓர் அம்சமாகவே பாரதியார் தென்னாட்டில் தோன்றியுள்ளார். **தேச விடுதலை ஒன்றை உணர்த்தவே அவர் தோன்றவில்லை. வாழும் வகையை உணர்த்தவே அவர் தோன்றினார்.** [35-36]

5. பாரதியார் தேச விடுதலை குறித்துப் பிரசாரம் செய்வதற்கு மட்டிலுமே தோன்றினார் என்று கொண்டுவிட வேண்டாம். அழுகல்மயமான **பிற்போக்கு ஆசாரங்களிலிருந்தே** நம்மை விடுதலை செய்வதற்குத் தோன்றியவர். [37]

6. அவரை எப்படி வரகவி என்று கொள்ளலாம் என்பதாகச் சிலர் தயங்கக்கூடும். ஏனென்றால் அவருடைய பாடல்கள் எல்லாம் மிக எளிமை உடையனவாக இருக்கின்றன. வெடிமருந்து மிகவும் எடை குறைந்த பொருள்தான். ஆனால் அதன் ஆற்றலோ சொல்ல முடியாது. பாரதியார் பாடல்களும் அம்மாதிரியே. [43]

---

## 8. மதம் வேண்டுமா?

1. மதம் மதம் என்று முழங்கப்படுகிறதே; இந்த மதத்திற்குரிய ஆதாரம் என்ன? என்று சிலர் கேட்கலாம். மதத்திற்குரிய ஆதாரம் மெய்ஞ்ஞானிகளின் அனுபவந்தான். விஞ்ஞானிகள் எவ்வாறு ஆராய்ச்சிசாலைகளில் அமர்ந்து, ஊணையும் உறக்கத்தையும் துறந்து, பௌதிக ரஸாயன உண்மைகளைக்கண்டுபிடிக்கிறார்களோ அவ்வாறே மெய்ஞ்ஞானிகளும் ஆன்ம ஆராய்ச்சிசாலைகளில் அமர்ந்து, உற்றாரையும் ஊராரையும், இகத்தையும் சுகத்தையும் துறந்து தெய்விக உண்மைகளைக் கண்டுபிடிக்கிறார்கள். அவர்கள் வெளியிடும் அனைத்தும் அனுபூதிமயம். [11-12]

2. விஞ்ஞானத்தின் விளைவை நாம் நன்றாக அறிவோம். ஆனாலும் ஒன்று நம்முடைய கண்ணை உறுத்திக்கொண்டிருக்கிறது. அது யாது? இகஉணர்வு வீங்குகின்றது. பரஉணர்வு மெலிகின்றது. உடல் அளவில் வளம். உள்ளத்தளவில் வறுமை. அறிவு பெருகுகின்றது. அகம் அருகுகின்றது. [22]

3. ஒவ்வொருவருக்கும் ஆன்ம இயல்பினைப் பற்றிய நாட்டம் ஏதாவது ஒரு வடிவத்தில் சிறிதளவாவது இருக்கத்தான் செய்கிறது. மதமானது அதனை விருத்தியடையத் துணைபுரிகிறது. [25]

4. உண்மை மதம் எதை உணர்த்துகிறது? உள்ளத்தைத் தெளிவு செய்யும் மார்க்கத்தைத்தான் உணர்த்துகிறது. நம்மகத்தே அடங்கியுள்ள கடவுள் அம்சத்தை வெளிக்காட்டும் வழிவகைகளை உணர்த்துகிறது. [27-28]

5. சமுதாயம் என்பது மழை பெய்ய முளைக்கும் காளானில்லை. எத்தனையோ விதமான பிரச்னைகளுடன் முட்டிமோதிப்பெற்றஅனுபவ பலத்தினால், மதம் என்பது மக்கள் சமுதாயத்தினிடையே பல நூற்றாண்டுகளாக நிலவி வருகின்றது. நிலவக்கூடிய தகுதிவாய்ந் துள்ள காரணத்தால் நிலவிவருகின்றது என்பதை மறந்துவிடக் கூடாது. அவ்வாறு நிலவுவதற்குரிய அடிப்படை யாது என்பதை ஆராயவேண்டுமே தவிர மேற்பரப்பில் தோன்றும் ஒரு சில குறை பாடுகளை வைத்துக்கொண்டு அறவே தாக்கிவிடக்கூடாது. [34-35]

6. மனிதன் எப்பொழுதும் தன்னின் மிஞ்சிய ஒன்றைக்காணும் போதுதான் அடக்கத்தைக் கைக்கொள்ளுகிறான். ஆகவே தன்னி னும் மிஞ்சியது தெய்வம். அது அகத்தும் புறத்தும் விளங்கி அருள் புரிகின்றது. அதை உணர்ந்து அதன் அருளுக்குப் பாத்திரனாவதே பிறவிப் பயன்? [50-51]

---

# 9. நடராஜ தத்துவம்

1. மக்களுடைய சமய அறிவானது பெருகி, வளர்ந்து தெய்வத் திற்குரிய நடராஜவடிவத்தைக் கற்பிக்கும் அளவினில் முன்னேற்றம் அடைந்ததை ஒரு அற்புத நிகழ்ச்சியாகவே பாவிக்கவேண்டும். [1]

2. நடராஜ வடிவம் முழுவதையும் பலவகையான சின்னங்களைத் தாங்கிய சின்னத் தொகுப்பாகவே மதிக்கலாம். ஒவ்வொரு சின்னத் திற்கும் பொருள் உண்டு. [3]

3. விஞ்ஞானம் சமய உண்மைகளைப் புறக்கணிக்கவில்லை. அது சமய உண்மைகளின் விரிவுரையாக விளங்குகின்றது. [4]

4. ஐவகையான, அதாவது, படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் ஆகிய தொழில்களின் மூலம் உயிர்கள் எல்லாம் பக்குவம் அடையும் பொருட்டு அவைகளுக்கு வேண்டிய தனுகரண புவன போகாதிகளை இறைவன் கொடுக்கின்றான். ஐவகையான இத் தொழில்களைச் செய்வதற்கு நிகழ்த்தும் நடனமே நாதாந்த நடனம் எனப்படும். [25]

5. முயலகன் தன்னுடைய கழுத்தை இடது புறமாகத் திருப்பிக் கொண்டு கடவுளைக் காண முயலுகிறான். கழுத்தை நன்றாகத் திருப்ப இயலாதபடி காலானது ஊன்றி நிற்கிறது. கடவுள் உண்மையாகவே

இப்படி மிதிக்கின்றாரா என்றால், கிடையவே கிடையாது. கடவுள் உண்மையை நடராஜ வடிவத்தின் மூலம் உணர்த்தமுயன்ற ஞானியானவன் கடவுள் - உண்மையை வெறும் பகுத்தறிவுகொண்டு காண முடியாது என்பதை இந்தமுறையில் நமக்கு உணர்த்திக் காட்டுகிறான். [31 - 32]

6. ஆண்டவனுடைய நடனம் எக்காலத்திலும் நடைபெற்று வருகின்றது. அதனை அறிவதற்கு இரண்டு அறிகுறிகள் துணை செய்கின்றன. ஒன்று ஆண்டவனுடைய சடைகள். மற்றொன்று அவனுடைய அரையில் காணும் பரிவட்டம். அவன் சுழன்று சுழன்று ஆடாவிட்டால் அவனுடைய சடைகள் பரந்து விரிந்து தோன்றுவதற்கு அவசியமில்லை. இன்னும் அவன் சுழன்று சுழன்று நடம் புரியாவிட்டால் அவன் அணிந்திருக்கும் பரிவட்டமானது சற்று நிமிர்ந்து தோன்றுவதற்கு அவசியமில்லை. சடைகள் பரந்து விரிந்து தோன்றுவதாலும், பரிவட்டம் சற்று நிமிர்ந்து மேலெழும்பித் தோன்றுவதாலும், அவன் எக்காலமும் ஆடிக்கொண்டிருக்கிறான் என்பது தெளிவாக விளங்குகின்றது. [36]

7. நடனம் இருபிரிவாகப் பிரிக்கப்படுகின்றது. ஒன்று ஊன நடனம். மற்றொன்று ஞான நடனம். அதாவது நாம் காணுகின்ற இயற்கையின் நடனம் ஒருபக்கம் நிகழ்கின்றது. நாம் காண விரும்புகின்ற ஞான நடனம் மற்றொருபக்கம் நிகழ்கின்றது. நம்முடைய கடமை என்னவென்றால் ஞான நடனத்தின் நடுவில் நம்முடைய மனத்தைப் பதிக்கவேண்டும். ஊன நடனம் சக்தியால் நிகழ்த்தப் பெறுகின்றது. ஞான நடனம் இறைவனால் நிகழ்த்தப் பெறுகின்றது. உடல் - தத்துவம் அனைத்தும் சக்தி. உயிர்த் தத்துவம் அனைத்தும் சிவம். [37]

8. நடராஜ வடிவம் பக்தர்களுக்கு மட்டிலுமே இன்பம் தருகின்ற வடிவமன்று. கலை உணர்வுகொண்டு பார்க்கமுயலும் எவருக்குமே இன்பத்தை ஊட்டவல்லது. [47]

9. உண்மை, நன்மை, அழகு ஆகிய மூன்று அருமைகளையும் கொண்டுவிளங்கும் எதனையும் கலைச்சின்னமாகக் கொள்ளலாம். நடராஜ வடிவத்தில் அந்த மூன்று அம்சங்களும் அருமையாக அமைந்திருக்கின்றன. [48]

10. நடராஜ தத்துவம் உலகத்தை ஒதுக்கவில்லை. உலகத்தை ஒப்புக்கொள்ளுகிறது. வாழ்க்கையைத் தள்ளவில்லை. வாழ்க்கையைத் தழுவுகிறது. நன்மையை நாட்டுகிறது. தீமையை நசுக்குகிறது. [52]

---

# முத்துசிவனுர் இயற்றிய கவிதைப் பகுதிகள்

### 1. யாமறிந்த கம்பன் (1949)

1. அறத்தின துயர்வு காட்டி அல்வழிச் சாரும் பொல்லா
மறத்தின திழிவு காட்டி வாய்மையின் மாண்பு காட்டித்
திறத்தமை விதியின் ஆற்றல் தெளிவுறத் தெரியக் காட்டிச்
சிறப்புறக் கவிதை செய்த செந்தமிழ்க் கம்பன் வாழி.

2. வெய்யிற் கேற்ற நிழலாகும் விசுந்தென்றல் காற்ருகும்
கய்யிற் கிசைந்த நூலாகும் கருத்திற் கமைந்த கலையாகும்
வய்யம் புரக்கும் திருவாகும் மதுரத் தமிழுக்குருவாகும்
பொய்யில் புலவன் கம்பனெனும் புகழோன் தந்த ராமகாதை.

3. பம்பும் புகழ்சேர் தமிழர்தம் பரந்த வாழ்வாம் கடல் பாய்ந்து
அம்ம் புவிக்கே அணியாகும் அருமை நலங்கள் மிகப்பருகி
நம்பன் ராமன் அறம் வளர்த்த நவைதீர் காதை நலமுயரக்
கம்பன் என்னுங் கார்மேகம் கவிதை சொரிந்து காத்துளதால்

### 2, கம்பன் என் தெய்வம் (1950)

தன்னலம் அறிவைக் கௌவத் தாரணி மாந்தர் தம்முள்
அன்னியர் என்ன மாறி ஆணவ முனைப்புக் கொண்டு
பன்னருந் தீமை செய்து பாரினை நரகமாக்கும்
இன்னலை நீக்கித் தெய்வ வாழ்வினை இருத்த வந்தேன்.

புழுவெனத் தோன்றிப் பின்னர் புத்தனுய் ஓங்கும் செய்ய
வழுவிலா மார்க்கந் தன்னை மானுடன் வாயிலாகப்
பழுதற விரித்து நாளும் பாரினில் வாழ்வு பொங்கும்
விழுமிய கடமை செய்ய மேதினி மீது வந்தேன்.

## 3. மழை (1952)

1. காலமெனுந் தொட்டிலிலே கண்வளருங் கார்முகில்தான்
கோலம் மலரக் குணங்குறிகள் தாமலர
ஞாலம் மலர இயற்கை எழில் மலர
சீலம் மலர செயல் நலங்கள் தாமலர
வேலை தனில்முகந்து விண்ணேறி நீர்பொழியும்
சீலம் உரைப்பேன் சிறிததனைக் கேளுங்கள்.

2. பன்னரு நலங்கள் கோடி உலகிடைப் பரப்பினாலும்
உன்னிடங் குறைகள் உண்டு உரைக்குவன் அவற்றைக் கேட்டி
நன்னய மானசேவை நலத்தினில் ஆர்வம் மிக்காய்
இன்னமும் சேவைக்குற்ற இரகசியம் தெரியகில்லாய்.

3. வேண்டிய இடத்தும் பெய்யாய் விரும்பிய போதும் பெய்யாய்
யாண்டும் நீ மாந்தர் நாட்டம் ஏற்றிடுந் தன்மை இல்லாய்
ஆண்டுதோ றுன்னாலுற்ற அவஸ்தைகள் கொஞ்சமல்ல
பூண்டநின் நெறியிலுள்ள புரையினைப் புகலக் கேளாய்.

4. பெய்வது போதுமென்றால் மேலும்நீ பெய்து தீர்ப்பாய்
செய்வதன் அளவு தேறாய் சித்தம்போல் கடமை செய்வாய்
நெய்தலில் உன்னை நாடின் முல்லையை நாடிச் செல்வாய்
செய்நிறை மருதம் நாடின் தீயுமிழ் பாலைசெல்வாய்.

5. பாதியைக் கடலில் தீர்ப்பாய் எஞ்சிய பகுதி தன்னுள்
பாதியை மலையில் தீர்ப்பாய் மீத்துள பங்கில் இன்னும்
பாதியைக் காட்டில் தீர்ப்பாய் இன்னமும் உள்ள தாய
பாதியை நிலத்தில் தீர்ப்பாய் என்னதான் பரிவோ அம்மா.

## 4. நாத்தி (1953)

நாரதர் தோற்றந்தான் நாத்தி யென்று நானுரைத்தால்
யார்தான் மறுப்பர் மறுத்தால் பொருளுண்டா ?

குலராமன் வாழ்வைக் குலைத்திட்ட கூனியவள்
தொலையவில்லை இன்றைக்கும் நாத்தியாத் தோன்றுகிறாள்.

காய்ச்சிய வெந்நீரை வாழ்வாம் செடிகருகப்
பாய்ச்சும் பழிகாரி பாதகி சண்டாளி

குற்றமே காண்பாள் குறைகள் புனைந்திடுவாள்
சற்றும் கருணையிலாள் வாழ்வைச் சதித்திடிவாள்.

## 5. அழகின் மர்மம்

வாச மலரிடத்தும் வான் நிமிர்ந்த மலைமீதும்
வையம் பனிக்கவிழும் வாலருவி வீழ்ச்சியிலும்

மோன நிலைதிரிய முரலுகின்ற ஓடையிலும்
கானப் பறவைதன் கன்னல் இசையினிலும்,

குழலிடத்தும் யாழிடத்தும் குழந்தை மிழற்றி வரும்
மழலை மொழியிடத்தும் வண்ண நகையிடத்தும்
பழகும் மனத்துலவு பண்நிறைந்த பாட்டினிலும்
அழகு உறைகின்ற அருமைதனை என் சொல்ல.

செஞ்சொற் கவியிடத்தும் திறல் வீரர் தோள்மீதும்
அஞ்சொல் மடவார்தம் அணிமலிந்த ஆகத்தும்
நெஞ்சம் நெகிழ அவர் நேர்கின்ற காதலிலும்
கொஞ்சமோ மைந்த கொள்ளை கொள்ளையடா.

உடைகின்ற உள்ளத்தும் உணர்வோங்கு நிலையினிலும்
மடைதிறந்த வெள்ளமென வழங்கும் சொற் கலவையிலும்
நடையினிலும் உடையினிலும் நாகரிகப் போக்கினிலும்
அடையவே அழகிலங்கும் அருமை அளப்பரிதே.

## 6. அன்பு

ஊரும் குடியும் உயர்அறமும் நிம்மதியும்
சீரும் திருவும் திறப்பாடும் சேவகமும்
பாருள் எப்பொழுதும் பயன்கொழிக்கும் நோக்குடனே
சாரும் அன்பினுக்குச் சதகோடிப் பல்லாண்டு.

அன்பெனும் நறவம்மாந்தும் மந்திரம் அறிந்துவிட்டால்
துன்பம்வந் தேதுசெய்யும் துயரமும் ஏதுசெய்யும்
இன்பமே காணின் அல்லால் எத்திசை செலினும்யாண்டும்
வன்பெதுங் காணத்தோன்று அன்புசெய் மகிமைஈதாம்.

திருச்சிராப்பள்ளி

அனைத்திந்திய வானொலிக் கவியரங்கம்



CONNEMARA PUBLIC LI[illegible]
26 1 1956

காரைக்குடியில்



கம்பன் திருநாள் பட்டிமண்டபம்

MADRAS

### பேராசிரியர் முத்துசிவனாரின் நோக்கம்
( அவர்தம் கையெழுத்துப்படி )

எனக்குக் கிடைத்துள்ள தமிழ் அறிவையும் ஆங்கில அறிவையும் தக்க முறையில் பயன்படுத்தி, எவ்விதமான விருப்பும் வெறுப்பும் இல்லாத முறையில் கருத்துச் செல்வம் பெருக்க வேண்டும் என்பது என்னுடைய ஆசை. அதுவே என்னுடைய இதயப் பேரார்வமும். இதுவரை நான் எழுதியுள்ள நூல்கள் அனைத்தும் அந்த ஆசை காரணமாகவே எழுதப் பெற்றவை. இனியும் அப்படித்தான். வெள்ளைக்காரர்கள் பொருளைப் படைத்துள்ள பெருக்கத்தைக் கண்டு பொறாமையாக இருக்கிறது.

கருத்துச் செல்வம் பெருக வேண்டும். நுணுகிச் சிந்திக்கும் ஆற்றலும் ஆர்வமும் வளர வேண்டும். இனவெறி, மொழிவெறி, பண்பாட்டு வெறி ஆகிய வெறிகளுக்கு இரையாகாது உண்மையைத் திறந்த கண்ணுடன் காண வேண்டும். அவ்வாறு கண்டதைத் திறந்த மனத்துடன் எடுத்துரைக்க வேண்டும். இன்று பொதுவாக நூலின் உண்மைக் காணும் முயற்சி பெருகவில்லை. நூலினுள்ள தன்னைக் காணும் முயற்சியே பெருகி வருகிறது. தன்னுடைய இனம் வேறு என்று கூறித் தேடும் முயற்சியே பெருகி வருகிறது. இதனை நோய் என்று கருதுவதைவிட நோயின்

சின்னமாகவே கருதவேண்டும்.

வேண்டாத சித்தாந்தங்களுக்கும் பொருளற்ற சித்தாந்தங்களுக்கும் தெய்வ வழிபாடு கற்பித்துக்கொண்டு, சிறு கல்வியையும் வளர்த்த திறமையையும் பாழ்செய்து, ஆக்கத்துறைபற்றிய கவலை எதுவுமின்றி அழிவுத் துறையிலேயே முனைந்து நிற்கும் ஆசாரம் வளர்ந்து வருகிறது.

இது காரணமாக இந்நாடு உலகத்திற்கு ஏற்படும் நஷ்டம் சொல்லுந்தரமன்று. அதைத்தான் நாம் உணர்ந்து கவனிக்க வேண்டும். இந்நாட்டினுடைய [illegible] இன்றுள்ள பெரியவர்கள் ஏதேதோ பெயரால் பணம் வைத்துச் சாப்பிடுகின்றனர். எதையும் திறந்த உள்ளத்துடன் பார்க்கும் ஆசாரம் மங்கி வருகிறது. சித்தாந்தக் கண் கொண்டு காணுவதே பெருவழக்காகிவிட்டது. சிறு வயதிலேயே சித்தாந்தக் கண் கொண்டு காணுவதென்பது, அறிவைப் பக்கவாத நோயல்லவா பற்றுவதாகும். அப்புறம் வளர்ச்சி ஏது, பெருக்கம் ஏது?

ஆகவே கருத்துச் செல்வத்தைப் பெருக்கி, உண்மை எதையும் திறந்த கண்ணுடன் காணும் ஆசாரத்தை வளர்க்க வேண்டுமேயல்லாமல், சித்தாந்தக் கண்கொண்டோ பாசாங்குக் கண்கொண்டோ காணுகிற ஆசாரத்தை இன்னும் பெருக்கக்கூடாது.

இதுதான் என்னுடைய அந்தரங்க நோக்கம். என்னுடைய எழுத்துப் பணியெல்லாம் இந்நோக்கத்தின் மொழிபெயர்ப்பே. வேறு எதுவும் இல்லை.

# முத்துசிவனாரின் அசலும் நகலும்

திறனாய்வு: சோ. பழநிவேலு, பீ. ஏ. இறுதியாண்டு.

( பரிசு பெற்ற கட்டுரை )

தமிழ் இலக்கிய மறுமலர்ச்சியினைப் புலப்படுத்திநிற்பது பேராசிரியர் முத்துசிவன் அவர்களின் 'அசலும் நகலும்' எனுங் கட்டுரைத் தொகுப்பு. இவ்விலக்கியக் கருவூலத்தினைச் சீர்தூக்கிப் பார்க்கும் ஒருள்ளம் ஆசிரியரின் சொல்லாட்சியினையும், தீஞ்சுவைக் கருத்துக்களைச் செவ்வையாக ஒருநெறிபற்றித் தெரிவிக்கும் பேராற்றலினையும் போற்றக்கூடும். கருத்தணி பழமையாயினும் மெருகிட்டுத் தமிழன்னைக்குப் பூட்டிக் களிபேருவகை பூத்திடும் அவர்தம் உள்ளத்து இன்னுணர்வினை, கற்குங்கால் நாம் உணரவல்லோம்.

'அசலும் நகலும்' எனும் முதற்கட்டுரை, பிளேட்டோ கவிதை, கலை, இவற்றின் மேற்கொண்ட முடிபினை ஆய்ந்து, அசல், நகல் என்பவற்றிற்கு விளக்கம் கொடுத்து அவற்றின் சீர்த்தியினைப் புலப்படுத்துதலைக் குறிக்கோளாகக் கொண்டது. ஒன்றிற்கு மூலமாக விருப்பதை 'அசல்' எனக்கூற, அதனைத் துணைக்கொடு உருவாகும் பிறிதொன்றை 'நகல்' என நவில்கிறோம். ஞானி பிளேட்டோ, 'நகல் வேண்டப்படுவதன்று; அதனை உருவாக்கும் கலைஞர், கவிஞர் பொய்யராவர்' எனக் கூறுகிறார். மூலத்தின் சாயை முற்றும் தோன்ற ஒன்றைச் சித்தரிக்கும் கலைஞன் ஒரு சிறு அணியினை அமைத்து மூலத்தினழகைப் பன்மடங்காக்குகிறான். இவ்வாற்றான் நகலிலே மூலத்தின் அழகைப் பெருக்கிடும் கலைஞனைப் போலிக் கலைஞன், பொய்யன் என இழித்துக் கூறுதல் அமைவுடையதன்று என ஆசிரியர் கருதுகிறார். கற்பனையைப் 'போலி' எனக் கூறும் பிளேட்டோவின் மாணவராகிய அரிஸ்டாட்டிலின் மனப்போக்கு வேறானது. கவர்ச்சியான ஒரு பொருளின் தோற்றத்தினால் உள்ளத்துக் கிளர்ந்தெழும்உணர்ச்சியினால் ஒரு பாவனைஉருவாகிறது. அப்பாவனையே போலி. இதனைச் சொல்லிலே தீட்டுவதுதான் கவிதை என்று கருதுகிறார் அவர். அமரகவி பாரதியின் தீஞ்சுவைப் பாடல்கள், கவிக்கோமான் கம்பனின் கனிமொழிக் கவிதைகள் இவையனைத்தும் அவரவர் மகிழ்ந்த மகிழ்வினால் மனத்துள் உருவான பாவனையை வெளியிடுபவையே.

கவிதை, உண்மையைக் கொண்டு உருவாகிய நகல் எனினும், அதனைச் சீர்தூக்கிப் பார்க்கும் உள்ளம் பண்புடையதாக இருக்க வேண்டும்; நோக்கும் கண்களும் நற்பயிற்சியுடையனவாக இருக்க வேண்டும். கவிதை, கருத்தினை எம்முறையில் வெளியிடுகிறது, அம்முறை தனிசிறப்புடையதா என்று ஆராய்வதுதான் ஆய்வாளனின்

குறிக்கோளாக இருத்தல் வேண்டும். கவிஞன் சீர்த்தி பெறுதற்குக் காரணம் உண்மை உலகில் காணவியலா மாந்தரை இலக்கியத்திலே காட்டி,"அம்மாந்தரைப்போல் அவனியிற் காண்போமா" என ஏங்கும் உள்ளத்திற்கு ஆறுதல் அளிப்பதுதான். குறைவினை நிறை செய்திடுவதே கவிஞனின் கடமையாகும்.

இரண்டாம் கட்டுரையான "அழகின் மர்மம்" அழகு என்ருல் என்ன? அழகுணர்ச்சியின் பெற்றிகள் யாவை? அதனை ஏன் நாம் வளர்க்கவேண்டும்? என்ற வினக்கட்கு விடையிறுப்பதை அடிப்படையாகக் கொண்டதாகும். 'அழகு' என்பது அகத்தே உருவாகும் ஒரு அமரத்தோற்றம். இதனைக் கண்ணுல் காணவியலாது. ஆனுல் கண்ணைத் தாண்டிநிற்கும் கருத்திலே அழகு மிளிரும். அழகை உணர வேண்டின் ஒன்றிலிருந்து பிறிதொன்றின் பெற்றியைப் பகுத்து ஒப்புநோக்குந்திறன் உடையவராயிருத்தல் வேண்டும். அவ்வொப்பு நோக்குந்திறனைச் 'சமநிலை' காணுந்திறன் என்று ஆசிரியர் கூறுகின்ருர். கவிதையிலே சமநிலையில்லாவிடின் அக்கவிதை சிறக்காது, குழுதமுடையதாகாது. அழகுணர்ச்சியுடைய ஒருவன் தன்னிலையையும் சூழ்நிலையையும் மறந்து தனது கற்பனைத் தோற்றமாம் அழகு அணங்கை இயற்கையிற் கண்டு மகிழ்கிருன். அழகுணர்ச்சியைப் போற்றிவளர்ப்பதால் 'அழகுஅனைத்தும்உண்மை, உண்மையேஅழகு' என்று கீட்சு கருதுகின்ற நிலை ஏற்படுகிறது. அதுகாலை இரு உள்ளங்கட்கிடையுள்ள பிரிவினையைப்போக்கி இரு உள்ளங்கள் ஓருள்ளமாகி எல்லையிலா இன்பங்காணத் துணைசெய்கிறது. எனவே நலம்பல நல்கிடும் அழகுணர்ச்சியினை நாம் போற்றி வளர்க்க வேண்டும். தந்நலம் நீக்கி உலகநலம் போற்றிக் காணும்பொருளில் மாறுபாடு காணுத ஒரு பரந்த மனப்பான்மை நம்பால் நிலவின் அழகுணர்ச்சி வளர்பிறை போன்று வளரக்கூடும்.

மூன்ருவது கட்டுரையாக வரும் "துன்பம்" என்பதன்கண் துன்பத்தைப்பற்றிய பல்வேறு கொள்கைகளின் விளக்கம் கொடுக்கப் பெற்றுளது. துன்பத்தினை இயற்கைத்துன்பம், செயற்கைத்துன்பம் என இரு கூறுபடுத்தி, அவற்றை விளக்கிச் செல்கிருர். கடவுள் உண்டு என்ற நம்பிக்கையின்மேல் எழுதப்பெற்றதாதலின் துன்பம் என்பது, புன்னெறிப்படுவார் உழக்கும் துயரனுபவம் எனக்கூறுகின்ருர். துன்பம் இன்பத்தின் மறுபுறமே. துன்பத்தால் கைவரப் பெறும் நன்மைகள் பல. சுற்றுப்புறத்தைத் தழுவாது வாழும் ஒருவன் அதனைத் தழுவி வாழவேண்டியதின் இன்றியமையாமையை உணர்வதற்கு ஒரு தூண்டுகோலாக இருப்பது துன்பம். துன்ப உணர்வு உள்ளத்தெழாவிடின் மாண்புடை மாந்தர் பலர் தோன்றியிருக்கவியலாது; மனிதனும் நாகரிக வளர்ச்சியின் சிகரத்தை எட்டிப் பிடிக்கவும் இயலாது. மனிதன் மனிதனுகின்ருன். அமரனுகின்ருன். ஒழுக்கம் பெருகவும், மதி ஓங்கவும் துணை செய்வது துன்பம்தான். தவிர, மனிதன் 'நான்' எனும் அகந்தைக்கிழங்கினை அகழ்ந்தெறிவானுயின், உலகநலமே போற்றுவானுயின்,இன்ப துன்பப் பிணைப்புக்

கள் நீங்கிடும். நன்மை தீமை என்று பகுத்தல் அறிவுக்குறைவினால் எழும் மருளாகும். அவற்றோடு இறைவனை இயைபுறுத்தல் பொருந்தாது. எனவே விபரீத உணர்வின்றி இறைவனுடன் மருவமுற்பட்டால் எஞ்ஞான்றும் இன்பமே என்று கூறுகிறார் ஆசிரியர்.

இறுதிக் கட்டுரை "கம்பர் காட்டும் மதம்" என்பதாகும். இராமகாதைப் பாடல்கள் கம்பர் பொது நோக்குடையவர் என்று கருதுவதற்கிடமளிக்கின்றன. திருமால், சிவன் இவ்விரு பேருருவங்களின் பெற்றிதனை இராமாயணத்தில் பரக்கக்கூறுகிறாராதலின், கம்பர் பொதுநோக்குடையவர் என்ற முடிபுக்கு ஆசிரியர் வருகிறார். கம்பர் வைணவ சமயத்தைச் சார்ந்தவர் என்று திட்டவட்டமாகக் கூறுவதற்கில்லை. சிந்தனைக்கு வேலை கொடுத்துப் பின்னர் ஒப்புக்கொள்ளவோ மறுக்கவோ வேண்டியதாகும். கம்பராமாயணத்துப் பெரும் ஈடுபாடுடை அறிஞர்குழு முற்ற ஆராய்ந்துகூறவேண்டிய பொருள் 'கம்பர் காட்டும் மதம்' என்பதாகும்.

இதுகாறும் பேராசிரியரின் 'அசலும் நகலும்,' 'அழகின் மர்மம்,' 'துன்பம்,' கம்பர் காட்டும் மதம்' எனும் நான்கு கட்டுரைகளின் சாரத்தையும் அவை தம் சிறப்பியல்புகளையும் பார்த்தோம். அவை ஆசிரியரின் கருத்தாழத்தினையும் முதிர்ந்த புலமையினையும் நமக்குணர்த்த வல்லன. தம் கருத்துக்கேற்றவாறுள்ள பிறமொழிக் கருத்துக்களைத் தொகுத்து, மொழியாக்கப்படுத்தி இயைபுறச் செய்து கொண்டகருத்தினைத் தெள்ளிதின் விளக்கும் முறை போற்றற்பாலது. இள உள்ளங்கட்குரிய நூலன்றெனினும் சிந்தனைக்கு வேலை கொடுத்துப் பழக்கப்பட்ட ஒருள்ளம் ஆசிரியரின் உளவியல் தத்துவ இயல் கருத்துக்களை ஒருவாறு புரிந்துகொள்ளக்கூடும். வாழ்வோடு இயைந்த கருத்துக்கள் பரக்கக் காணப்பெறுவதால் இந்நூல் மிக எளிமையுடையதாகத்தோன்றும். எனினும் சொல்லச்கூடிய கருத்தாக இருந்தும் சொல்லத் தெரியாமல் விழிக்கும் நிலையினை நீக்கி, கொண்ட கருத்தினைச் செவ்விய நெறியிலே கூறுகின்றமையின் இந்நூல் கற்போர் சிந்தனைக்கு ஓர் இனிய விருந்தாக அமைந்துளது.

---

## முத்துசிவனாரின் அசோகவனம்

திறனாய்வு: வை. வேங்கிடராமன், பீ. ஏ. இறுதியாண்டு.

( பரிசு பெற்ற கட்டுரை )

மேலைநாட்டார் தங்கள் இலக்கியத்திற்கு வளம் ஊட்ட எத்துணையோ முறைகளைக் கையாளுகிறார்கள். அவற்றுள் ஒன்று நூல்களுக்கு விமர்சனம் எழுதுவது. தமிழில் இத்தகைய நூல்கள் ஆக்கவிழைந்தார் ஆசிரியர். கருத்தைச் செயல் ஆக்கினர்; செயலின் வடிவே "அசோகவனம்." இது ஒரு விமர்சன நூல். தமிழ்த்துறையில் இது புதியதொரு முயற்சி.

"அசோக வனம்" எனப் பெயரிய இந்நூலில் நான்கு கட்டுரைகள் உள. அவையாவன: (1) அசோகவனம் (2) சிரிப்பின் தத்துவம் (3) சோக நாடகத்தின் தத்துவம் (4) கவிதை.

அசோகவனம் என்றதும் நம் சிந்தைக்கு வருவது "வேலையுள் இலங்கை எனும் விரிநகர் தன்னுள்" அமைந்த "காலையும் மாலை தானும் இல்லதோர் கனகக் கற்பகச் சோலை"யே. ஆனால் ஆசிரியர் அசோக வனத்துள் புதியதொரு தத்துவத்தினைக் காண்கிறார்.

"இலக்ஷியமே பெரிது, மண்ணே திரண்டு வந்தாலும் சரி, மறிகடலே பொங்கி எழுந்தாலும் சரி, விண்ணே இடிந்துவிழுந்தாலும் சரி, இலக்ஷியமே கண், அதுவே குறி, அதுவே ஜீவன் என்று விடாப்பிடி தொடாப்பிடியாக இறுகப்பற்றிக்கொண்டு வாழமுற்படுகின்ற உத்தம பாத்திரங்களுடைய வாழ்க்கையில் எல்லாம் ஒரு அசோகவனம் உண்டு. மனிதனை மனிதனுக்கவும், அவனை வேதித்தெடுத்த சுவர்ண விக்ரகமாக்கவும் அமைந்த உலைக்களமே அது." ஆசிரியர் காட்டும் "அசோகவனத் தத்துவம்" இதுதான்.

குறிக்கோள் ஒன்றினை வாழ்வினில் கொண்டு, அதனைச் செயலாக்கித் தன்வாழ்வோடு ஒன்றாக்க விழைபவரின் வாழ்விலெல்லாம் அசோகவனம் ஒன்று உண்டு. அவர்தம் உளத்திண்மையைச் சோதிக்கும் உரைகல் என அதனைக் கொள்ளலாம், "அதர்மம் தொலைந்து, தர்மம் தலையெடுக்க வேண்டுமின், அந்தப் புனித சேவைக்கென்று தெய்வநீதி தேர்ந்தெடுக்கும் கருவி இவ்வாறெல்லாம் அவஸ்தைப்பட வேண்டியதுதான்" என்கிறார் ஆசிரியர். இதுவே அவர் காணும் அசோகவனத்தின் மர்மம்.

அடுத்து, ஆசிரியரின் "சிரிப்பின் தத்துவத்தைக்"காண்போம். சிரிப்பு மனித வாழ்வோடு இயைந்ததொன்று. "பண்புடைய ஒருவன் பண்புகளின் கருவூலமாய் இலங்கல் வேண்டும். அப்பொழுதுதான் அவன் பண்புடையான் எனப் பிறரால் கருதப்படுவான். இந்நிலையினை எய்தவிழைபவன் சிரிக்கப் பழக வேண்டும்" என்கிறார் ஆசிரியர். வாழ்வில், பொருந்தாதனவற்றைச் செயலாக்க முயலுழி எழுவதே நகை. சிரிப்பு தோற்றக்காலம்தொட்டே மனித வாழ்வோடு இயைந்து வளர்ந்ததொன்று. கோபம், தாபம், பழி, பாதகம் இவைகள் நிறைந்த ஒன்றினை நாம் பொருள் தெரியாமல் வாழ்க்கை என மதித்தோம். ஆனால் அவைகள் ஒரு நிலையில் நின்று பார்த்தால் வெறும் சிரிப்பாக மாறிவிடுகின்றன. சக்திகள் ஒன்றினை ஒன்று தாக்கி ஒன்றுமே இல்லாது அழியப்போகின்றன. இதுதான் பிரபஞ்சம், இதுதான் உலகம் என மதித்த எதனையும் காண இயலாத நிலைகண்டு, நாம் சிரிக்க இயலாது. ஆகவே இந்தப் பிரபஞ்ச மாற்றம் வெறும் ஊமைச் சிரிப்பாகவே முடிந்துவிடுகிறது. இதுவே சிரிப்பின் சுத்த-தத்துவ நிலை" என்கிறார் ஆசிரியர்.

அறிஞன் அரிஸ்டாட்டில் மனிதன் ஒருவன்தான் சிரிக்கும் உயிரினம் என்றனன். "அத்தி முதல் எறும்பு வரை ஆன உயிர்

அத்துணையும் சித்தம் கனிந்து சிரிக்குதடா தேசிகா'' என்ற மேற்கோள் துணைகொடு அரிஸ்டாட்டில் கூற்றினை ஆசிரியர் மறுக்கிறார். ''சிரிப்பின் தத்துவம்,'' விளக்கமுயலும் பொருளினை இனிய, எளிய உவமைகளின் துணைகொடு விளக்கும் ஆசிரியரின் திறனுக்கு ஓர் எடுத்துக்காட்டு.

அடுத்து ''ஆசிரியரின் ''சோக நாடகத்தின் தத்துவத்தைக்'' காண்போம். அறிவுலகில் உயரிய நிலையினை எய்தி ஒளிர்கின்றன சோக நாடகங்கள். மனிதனுக்கு அவன் தன் நிலையினை உணர்த்தி, அவன் உயர்நிலையினை எய்துதற்கு உரிய ஆற்றினையும் சோக நாடகங்கள் உணர்த்தா நிற்கின்றன. சோகநாடகங்களின் துணைப்பண்பாம் (1) ''அசாதாரணமான மனப்பான்மை, (2) தெய்வத் தலையீடு, (3) எதிர்பாராத அம்சம்'' ஆகியவற்றைத் தமிழ் நூல்களிலிருந்து மேற்கோள்கள் எடுத்து விளக்குகிறார் ஆசிரியர். பேராசிரியர் பிராட்லியின் கட்டுரை ஒன்றினைத்தழுவி இக்கட்டுரையை ஆசிரியர் எழுதியுள்ளார். தமிழ் மணங் கமழும் கட்டுரை இது. ஆசிரியரின் ஆங்கிலப் புலமைக்கு ஓர் எடுத்துக்காட்டு. அடுத்து ஆசிரியரின் ''கவிதை''யினைக் காண்போம்.

கருத்துணர்வில் இருப்பதை உணர்ச்சி மயமாக மாற்றுவதே கவிதை. கவிஞன் ஒரு பொருளைக் காண்கிறான். காணும் காலை அவன் உள்ளத்தே காட்சி ஒன்று எழுகின்றது. உள்ளத்தெழுந்த அக்காட்சியினுக்குச் சொற்களின் துணையான் வடிவு கொடுக்க முயலுகிறான். முயற்சியின் வடிவே கவிதை. கவிதையின் சுவையிலே தன் நிலை மறந்து ஈடுபட்டவர் ஆசிரியர். அறிஞன் கெராட் கூறுகின்றான் ''மருந்து மயக்கத்திலோ, மது மயக்கத்திலோ அழுந்தி மரிக்கின்றது போன்று ஓசை இன்பத்திலேயே மயங்கி மரித்தலும் ஒண்ணும்.'' இதனை ஆசிரியர் தம் '' கவிதையிலே கூறுகிறார். இதற்கு உவமையாக ஆசிரியரையே கூறலாம். கவிதை நயம் நிறைந்த அடிகள் வந்துவிட்டால் மணிகள் உருளுவது தெரியா.

ஆசிரியன் ஒருவனின் உளநிலையை அவன்தன் நூல்களின் துணையான் அறிதல் கூடும். இதனை உரைகல்லாய்க் கொண்டு ஆசிரியரின் ''அசோகவனத்தை'' நோக்குறின், ஆசிரியரின் உள நிலையை அறியலாம். தமிழில் புதியன பல படைக்க விழைந்தார் ஆசிரியர். மேலைநாட்டு மொழிகளில் உள்ள உயரிய கருத்துக்களைத் தமிழிலே மொழிபெயர்க்க வேண்டும் என்ற கருத்துடையவர் ஆசிரியர். வாய்ச்சொல் வீரர் அல்லர்; சொல்லைச் செயலாக்க முயன்றவர். முயற்சியின் முழு உருவே ''அசோகவனமும்'' ஆசிரியரின் ஏனைய பிறநூல்களும்.

''அசோகவனம்'' ஒரு வண்ண மலர்ச்சோலை; கருத்துக்களின் கருவூலம். ''கவிஞன் இறப்பதில்லை; அவன் தன் நூல்களிலே வாழ்கின்றான்.'' பேராசிரியர் இறந்திலர்; அவர் தம் ''அசோக வனத்தே'' வாழ்கிறார்.

---

# முத்துசிவனாரின் மின்னல் கீற்று

**திறனாய்வு: சோ. பாலகிருட்டிணன், கல்லூரி இடைநிலை முதலாண்டு.**

இளம் வயதில் பேராசிரியர் முத்துசிவனார் பக்தி நூல்களை யெல்லாம் வீண் கட்டுக்கதைகள் எனமதித்து வந்திருக்கிறார் என்பது "அநேக பக்தர்களுடைய வாழ்க்கையைப் பற்றிக் கதையாகக் கேட்ட தெல்லாம் கதையில்லை. அத்தனையும் உண்மை என்று நம்பும்படி தூண்டும் வாழ்க்கை, மகான் நீலகண்டதாசருடைய வாழ்க்கை" என்ற வரிகள் நமக்குப் புலப்படுத்துகின்றன. நம் பேராசிரியர் இளம்பருவத்து நாத்திகச்சாயல் உடையவராக இருந்தார் என்பதற்கு மேலே சொன்ன ஒன்றுமட்டும் இல்லை, எத்தனையோ எடுத்துக் காட்டலாம் 'மின்னல் கீற்றிலி'ருந்து.

"திருநீலகண்டசிவம் எனும் சிவ பக்தர் மிகக் கடவுள் பற்றுள்ளவர், வியத்தகு நிகழ்ச்சிகள் பல கடவுளின் திறனால் செய்திருக்கிறார். வேண்டும் வரமெல்லாம் கொடுத்திருக்கிறார்" என்று அந்தப் பெரியார் பத்தி மூலமாகக் கேள்விப்படுகிறார் ஆசிரியர். இவற்றை யெல்லாம் கேட்டபொழுது 'உண்மையா பொய்யா' என அறியாது ஊசலாடுகிறது பேராசிரியர் மனம். இதனை ஒரு நல்ல உவமையால் வெளியிடுகிறார். "மேலே குறிப்பிட்ட சம்பவங்களையும், தற்கால நிலையையும் உத்தேசித்தால் 'கடிகார நாக்கு, (Pendulum) மாதிரி **நம்பிக்கை, அவநம்பிக்கை** ஆகிய இரு முனைகளையும் தொட்டு மனது ஊசலாடத்தான் செய்கின்றது" என்பதைப் படிக்கும் பொழுது, பக்தருடைய மகிமையில் நம்பிக்கை கொள்ளத் தயங்கினவர்களும் உள்ளூர மறுத்தவர்களும், பெரிய அபசாரம் செய்தவர்களாக எண்ணி, அதற்கு மறைமுகமாகப் பிராயச் சித்தம் செய்கிற ரீதியில், விழுந்து, விழுந்து நமஸ்காரம் செய்தார்கள்" என்ற வரிகளைப் படிக்கும்பொழுதும் நமது பேராசிரியர்உள்ளத்தில் எவ்வளவு மனப்போராட்டம் அக்காலத்து நடந்திருக்கிறதென்பது தெள்ளென விளங்குகின்றது. அவருடைய பக்தியில் மிக்க நம்பிக்கை ஏற்பட்டவுடன் "பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் இப்படி ஒரு மனிதர் வாழ்ந்திருக்கிறாரே" என்று வியப்புறுகின்றார் ஆசிரியர்.

முத்துசிவன் அவர்கள் சில நிகழ்ச்சிகள் பற்றிச் சொல்லும் பொழுது அவர்கள் கையாண்டுள்ள சொல் நயம் படிப்போர்க்கு மிக்க இனிமையை ஊட்டுகின்றது. ஒரு தடவை திருநீலகண்டசிவமும் சுவாமி விவேகாநந்தரும் சந்தித்தனர். இப்படியா சொல்லுவார் நமது பேராசிரியர்! "பௌர்ணமியன்று கிழக்கே முழுமதியும் மேற்கே சூரியனும் ஒருசேரத் தோற்றமளிப்பதைக் குமரிமுனையில் நின்றுபார்க்கின்றவர்களுக்கு என்ன ஒரு வியப்பு உணர்ச்சி தோன்றுமோ! அந்த மாதிரியான வியப்பு உணர்ச்சியே தோன்றியிருக்கும் மகான் சிவம் அவர்களையும்சுவாமிவிவேகாநந்தரையும் ஒருசேரஓரே இடத்தில்கண்டவர்களுக்கு!" என்ற அழகான உவமை மூலம் அவ்விருவர்தம் பெரு

மையை எடுத்துக்காட்டுகிறார். வேறொரு சமயம் கவி குஞ்சர பாரதியும், திருநீலகண்ட சிவமும் ஒருவரை யொருவர் பார்க்க ஆசைப்பட்டனர். இந்நிகழ்ச்சியை இவ்வளவு வெளிப்படையாகச் சொல்ல பேராசிரியர் மனம் விரும்பவில்லை. "சம்பந்தரை அப்பரும் அப்பரை சம்பந்தரும் காண ஆசைப்பட்ட மாதிரிதான்" என்று ஒரே கொள்கையுடையவர்களைச் சுட்டிக்காட்டுவதிலிருந்து கவிகுஞ்சரபாரதியும், சிவம் அவர்களைப் போன்று, தமிழ், சிவபக்தி ஆகியவற்றில் அளவிலா ஆர்வமுள்ளவர் என்பது தெளிவாகின்றது.

பேராசிரியரின் உண்மைப்பற்று, தெய்வ நம்பிக்கை, மனவுறுதி பெரியோரை மதித்தல் ஆகிய நற்குணங்கள் 'மின்னல் கீற்றிலி'ருந்து அறியத்தகும். திருநீலகண்ட சிவன் என்னும் அன்பரின் வாழ்க்கையைக் கூறும் இந்நூலுக்கு 'மின்னல் கீற்று' என ஓர் உருவகப் பெயரைச் சூட்டியிருப்பது முதலிலேயே சுவையுடையதாகின்றது. "லௌகிக மேகங்கள் மண்டிச் செறிந்த வானவெளியிலே இப்படியான தெய்வீக மின்னல் கீற்று ஒன்று பத்தொன்பதாம் நூற்றாண்டில் வெளிப்படுவதென்றால்" என்று பேராசிரியர் நூலின் பெயர்க் காரணத்தைக் கவிதையாக முகவுரையில் எழுதியிருக்கின்றார்.

---

# முத்துசிவனாரின் கவிதையும் வாழ்க்கையும்

திறனாய்வு : ர. பிரபாகரன், பீ. ஏ. இறுதியாண்டு.

பேராசிரியர் முத்துசிவனார் கவிதையின்பால் கொண்ட எண்ணம், தொடர்புகளை அவருடைய "கவிதையும் வாழ்க்கையும்" என்ற நூலில் பரக்கக் காணலாம். அவர் கவிதை என்ற சொல்லுக்குக் கொண்ட பொருள் ஏதேனும் ஓர் அனுபவத்தை சிந்தனைக்கு விருந்தூட்டும் வண்ணம் வார்த்துக் கொடுப்பது என்பதுவே. அப்படி வார்த்துக்கொடுக்கின்றபோது எதுகை மோனை அமைவுடனும் இனிய சந்தத்தோடும், அளவான ஞானத்திரளையும், இன்ப அனுபவங்களையும் மக்கள் இனத்தார்க்கு அக்கவிதை நல்குதல்வேண்டும். இவ்வாறு ஒழுக்கம், உணர்ச்சி, ஞானம், இன்பஒளித்திரளாய் அமையும் கவிதை மக்களிடையே பொருளை அறியாத இடத்திலும் செவிக்கு இன்பத்தை ஊட்டவல்லது. பொருளை அறிந்த இடத்தோ அது ஊட்டும் இன்பத்திற்குக் கரையின்று. இப்பேருண்மையை நாங்கள் வகுப்பறையில் உணர்ந்திருக்கிறோம். சந்த இன்பத்துடன், வண்ணம் தவறாமல், உடல் அசைவுடன் அவர் பாடும் கவிதைகளில் நாங்கள் ஊன்றிவிடுவோம் என்றால் அது மிகையாகாது. அவர்தம் முதிர்ந்த அனுபவத்திலே எழுதிய, சொல்லிய உண்மையெல்லாம் "கவிஞனுடைய பாவநீர்மையைத் தெரிந்து கொண்டால், கவியை நன்றாக அனுபவிக்க முடியும். தெரியாதுபோனால் அனுபவிக்க முடியாது இதனை மனத்தில் வைத்துக்கொள்ளுங்கள்" என்பதே. "கவிதை

கவிதைக்கே " என்ற கொள்கை சிறிதும் இவர்மாட்டு இல்லை. கவிதை வாழ்க்கைப் படகின் துடுப்பு என்ற நோக்கம் உடையவர். இந்த அடிப்படை கொண்டே கவிகளை விளக்கஞ் செய்பவர்.

பேராசிரியர் கவிதைகளை நூலிலே மட்டும் கண்டாரில்லை. மனிதனின் வாழ்வில் ஒவ்வொரு துறையிலும் கவிதையைக் கண்டார். இளம் வயதுக் கணவன் இறந்து விடுகின்றான். மாமியார் கொடுமையால் கணவன் இருந்தபோதும் வாழக்கொடுத்துவையாத மனைவி அழுகிறாள். காரணம் அவளுடைய பெண்ணலமெல்லாம் புல்லில் இட்ட தவிடாகப் போய்விடுகின்றது. வருத்தம் அளவுக்குமிஞ்சிய தறுவாயில்,

> " புற்றிலே பாம்பிருத்தல் பூதலத்தில் கண்டதுண்டு,
> மனையிலே பாம்பிருந்து வாழவிட ஒட்டலையே!
> வீடென்று கால்வைத்தால் வெடுக்கென்று தீண்டிடுமே!
> மனையென்று கால்வைத்தால் வந்து கடித்திடுமே!"

என ஒப்பாரி எழுகிறது. இது துன்பக்கவிதை. இனி வாழ்க்கையில் "நிணந்தீயில் இட்டன்ன நெஞ்சினைப்" போன்று காதல் நோயால் துடிக்கின்ற காதலர்கள் மெய்தழுவிக் கூடுங்காலையில் இன்பம் கரை கடந்த போக்குடையதாக இருக்கும். இக்கையறு நிலையில் காதலன் காதலியை நோக்கி உணர்ச்சிப் பெருக்கால்,

> " சல்லாப் புடவை தன் ஜரிகை நுனிப்பட்டுவிட்டால்
> கல்லான கல்லும் கரைந்துருகிப் போகுமடி "

என்று பாராட்டு வழங்குகின்றான். இது இன்பக்கவிதை. இவ்வாறு வாழ்வின் துன்ப இன்ப எல்லைகளில் கவிதையைக் கண்டவர். கவிதையில் பயிலும் வாழ்க்கையானது வடிவமைந்த வார்ப்பு. கவிதையின்பால் ஈடுபடுவதெல்லாம் ஓர் வகையான இன்பம் என்று அவர் கொண்ட கருத்துக்களெல்லாம் போற்றற்குரியவை.

கவிதையின்பால் ஒன்றிய பேராசிரியர் கவிதையைப்பற்றிப் பிறர் பொல்லாங்கு கூறுவதைக்கேட்டு மனம் உருகினார். "உள் ஒளி பெற்ற மாபெரும் கலைஞர்கள் மனிதக்கூட்டுக்குள் இருந்துகொண்டே மனிதனால் சாதிக்கமுடியாத பெரிய காரியங்களை சாதிக்கின்றார்கள். ஆனால் கட்டைச்சிறுமதி படைத்த மனிதன் துள்ளலையும் பொய்யையும் துறவாது அவர்களுடைய படைப்பின் புதுமையைக் கண்டு மிரண்டு என்னென்னவோ சொல்லிக் கதைக்கிறான்" என்று தான்கண்ட உண்மையை அஞ்சாது உரைத்தார். இவ்வாறு கவிதையின் உட்பொருள் அறிந்து, இடித்தும் விளக்கியும் நூல்பல எழுதியவர் நம் பேராசிரியர் முத்துசிவன் என்று கூற விரும்புகின்றேன்.

# முத்துசிவனாரின் மேடைக் கலை

திறனாய்வு : அ. சேதுராமன், பீ. ஏ. இறுதியாண்டு

சீர்திருத்தம் செய்வதற்குச் சிறந்த இடம் மேடை. அதன் கண் நிகழும் யாவும் மேடைக் கலையே. எனினும் ஈண்டு ஆசிரியர், மேடையின் கண் நிகழும் பேச்சுக்கலையையே "மேடைக்கலை" என்ற ஆகு பெயரால் அழைக்கின்றார். எளிய நடையிலே உள்ளத்தைப் பறிக்கும் கருத்துக்களை ஆசிரியர் அள்ளிக் கொட்டியிருக்கின்றார், எண்ணற்ற எடுத்துக்காட்டுகளுடன். "பாலைப் பொழிந்து தரும் பசுவைப் போல் ஞானத்தைப் பொழிந்து தரும் பேச்சாளிகள்." என்று ஆசிரியர் முத்துசிவம் குறிப்பிட்டு, பேச்சாளிக்குரிய இலக்கணங்களையும், பேச்சாளியாவதற்குரிய வழிதுறைகளையும் ஆராய்கிறார், தம் நூலாகிய "மேடைக் கலை"யில்.

**அவை நடுக்கம் :**

போர்க்களத்தில் காணப்பெறாத நடுக்கமெல்லாம், புலவர்கள் கூடிய அவைக்களத்தில் நிற்கும்போது புகுந்துவிடும்.

"பகை அகத்துச் சாவார் எளியர் அரியர்
அவை அகத்து அஞ்சா தவர்"

என்பது வள்ளுவர் துணிபு. முதன் முதலில் மேடையில் ஏறும்பொழுது நடுக்கம் தோன்றி எண்ணிய எண்ண மெல்லாம் மறந்துவிடும். நாக் குழறும். மழலை திருந்தி வடிவான சொல் வாய்ப்பது போன்று நடுக்கமும் தேய்ந்து தொலைய, அதன்பயனாக நிமிர்ந்து நிற்கும் உள்ளத் தெம்பு கைவரும். நாளாக நாளாகக் கூட்டத்தைக் கண்டு துளங்கிய நெஞ்சம் அதே கூட்டத்தைக் கண்டு சுடக்கிட்டுத் துள்ளும். பேச்சாளியாகவேண்டும் என்ற உறுதியான எண்ணம் நிலைத்து, எண்ணிய எண்ணம் ஈடேறிவிட்டால், வானமும் வையமும் வளரும் வான்புகழ் கிடைக்கும். அதன் வழி ஊரையும், உலகையும் மாற்றியமைத்து மறு கோலம் செய்யலாம்.

**கருத்துத் தெளிவு :**

அவையச்சத்தை அகற்றிவிட்டதாக வைத்துக்கொள்வோம். அதுமட்டிலும் போதுமா? "அவை அஞ்சா ஆகுலச் சொல்" எல்லாம் "பூத்தலில் பூவாமை நன்று" ஆதலால் எவராலும் அதனை வெல்லக் கூடிய சொல் ஒன்றைச் சொல்லமுடியாதபடி அத்தனை தூரம் அழுத் தமும் ஆழமும் விரிந்த ஆற்றல் நிறைந்த சொல்லாக இருக்கவேண்டும். கருத்துத் தெளிவு எவ்வாறிருக்க வேண்டுமென்றால், கருத்துக்கள் அனைத்தையும் ஒரு தபால் தலைக்குள் அடக்கிக்கொள்ளும்படி அவ்வளவு தெளிவாக இருக்கவேண்டும் என்று ஒருவர் கூறுகிறார். நினைத்த உடனே கடலாகப் பெருக்கவோ, கடுகாகக் குறுக்கவோ இயலக்கூடிய அளவில் அதனுடைய முழு வடிவத்தையும் பார்த்துத்

தெளிந்துகொள்ளவேண்டும். சொற்பொழிவு என்பது கதைசொல்வது போன்ற அமைப்புடையதாக, தலை, நடு, கடை என்று தொடர்பாக அமைந்திருக்கவேண்டும். எவ்வளவுக் கெவ்வளவு தொடர்பு சிறந்து விளங்குகிறதோ அவ்வளவுக்கவ்வளவு கருத்துச் செறிவு புலப்படும். கருத்துத் தெளிவு, தொடர்பு முதலியன கருதி, பலர் தம் சொற்பொழிவுகளைப் பாடஞ் செய்தும், குறிப்பு வைத்துக்கொண்டும் பேசுகின்றனர். இப்பழக்கத்தைப்பயிற்சிக்காலத்தோடுவிட்டுவிடவேண்டும். இது நிலைத்துநிற்கும்படி விட்டுவிடக்கூடாது. நடக்கப்பழகும் குழந்தை தூணையோ, சுவரையோ பிடித்துக்கொண்டு நடந்து, நடை பழகியதும் விட்டுவிடுமாப் போல இப்பழக்கத்தையும் விட்டுவிடவேண்டும்.

**கவர்ச்சி ஊட்டல் :**

**எதனிடத்தும் உள்ளம் கவிய வேண்டுமானால் உள்ளத்தை ஈர்க்கும் கவர்ச்சி அதன்பால் மிளிர வேண்டும்.** அம்முறையில் பேசுவோன் கவர்ச்சியுடையோனாக இருக்க வேண்டும். "ஆள்பாதி ஆடைபாதி" என்பர். அதற்காகப் பட்டும், பொன்னும், மணியும் அணிய வேண்டும் என்று பொருளில்லை. எளிமையும் கவர்ச்சியும் நிறைந்த உடையை அணிய வேண்டும். உள்ள அழகை உடை அழகு திருத்துகின்றது. அடுத்து வேண்டுவது நல்ல தோற்றம். நல்ல தோற்றத்திற்குச் சிறந்த உடற்கட்டு வேண்டும். வெடி மருந்தின் துணையால் குண்டுகள் துளைத்துச் செல்வது போன்று உடற்கட்டின் துணையால் வார்த்தைகள் உள்ளத்தைத் துளையிட்டுப் பாயும். சொற்பொழிவுத் துறையில் வெற்றி கிடைப்பதெல்லாம் சொல்லும் பொருளால் அன்று; சொல்லும் முறையால்தான். "பொருளிலில்லை கவர்ச்சி; பொருளை வழங்கும் முறையில்தான் கவர்ச்சியெல்லாம் என்பதை நன்கு உணர வேண்டும். தனியான மெய்ப்பாடுகளும்,அங்க அசைவுகளும் ஓரோரு கால் கவர்ச்சி ஊட்டும். அகநடிப்பின் காரணமாக இயற்கையாகஉருவாகும் மெய்ப்பாடுகளையே வெளிக்காட்ட வேண்டும். வலிந்து காட்டுதல் கூடாது.

**பேசும் முறை :**

**பேச்சுக் கலையானது இதயத்தைக் கொடுத்து இதயத்தை வாங்கும் கலை.** அதற்கு மேடைப் பேச்சில், பேச்சுநடைக் கலப்பு வேண்டும். முற்ற முழுக்கிலும் பேச்சுநடை பயிலக்கூடாது. பேச்சு நடை என்றதும் "கொச்சை நடை" என்று கொள்ளக்கூடாது. சொற்பொழிவில் கருத்தும் உணர்ச்சியும் கலந்து விளங்க வேண்டும். பேச்சில் இன்பம் பிறக்க வேண்டுமானால் ஏற்றியும் இறக்கியும், நீட்டியும் நெளித்தும், வலித்தும் மெலித்தும் குரலைப் பயன்படுத்த வேண்டும். அதோடு குரலின் போக்கை வேறுபடுத்திக் காட்டுவதெல்லாம் சுவை நீர்மைக்குப் பொருந்தியதாகவும் இருக்கவேண்டும். எதிர்பாராத நிலையில் கேட்கும் வினாக்களுக்கு "சதுர விடைகள்" அளிக்கவும் தயாராக இருக்கவேண்டும். சொல்லும் பொருளைச் சுவையுடன் சொல்ல வேண்டும்; திறம்படச் சொல்லவேண்டும்; தெளிவாகவும் சொல்லவேண்டும். ஏன் என்பதை எடுத்துக்காட்டவேண்டும்; எப்படி என்பதை விரித்துக்காட்ட வேண்டும். உணர்ச்சி ஒளி மின்ன வேண்

டும்; ஊக்கம் துடிக்கவேண்டும். இடையிடையே வினாக்களை எழுப்பி விடைகூறும் போக்கிலும் பேச்சைக் கொண்டு செலுத்தவேண்டும்.

வெறும் கோடுகளைக்கொண்டே ஓர் உருவத்தைக் காட்டி விடலாம். ஆயினும் வண்ண நிறந் தீட்டும்போது சித்திரம் முன்னிலும் சிறந்த அழகு பெறுவதில்லையா? அம்மாதிரியே உணர்ச்சி அற்ற முறையில் வார்த்தைகளைக் கொட்டும்போது உருவம் வெளியாகாமல் போகாது. ஆயினும் மங்கலாகவே தோன்றும். அதே வார்த்தை களுக்கு உணர்ச்சி என்னும் வண்ணம் ஏற்றப்படும்போது அவை களின் ஆற்றல் ஒன்றுக்குப் பத்தாகப் பெருக்கெடுத்தோடும்.

**நடை:** சொற்பொழிவின் குறிக்கோள் என்னவெனின் படித்தவன் படித்தோனிடமே தன்னுடைய திறனைக் காட்டிக்கொள்ள வேண்டும் என்பது அன்று; படிப்பின் நலனை நன்குபெறாத பாமரனும் ஞானம் பெறவேண்டும் என்பதாம். சொற்பொழிவு பண்டிதருக்கு விருந்தாக அமையாது போயினும் பரவாயில்லை; பாமரர்க்கு மருந்தாக அமைய வேண்டும். அதுவே காலத்தின் போக்கு.

**முடிப்பு:** சொற்பொழிவு முற்றிலும் விரைப்பு நடையாகவோ, முற்றிலும் பேச்சுவழக்கு நடையாகவோ அமையக்கூடாது. யாவர்க்கும் புரியும் வண்ணம் அமைந்த நூல் நடையும், இலக்கண வழுவற்ற பேச்சு வழக்கு நடையும் கலந்திருக்க வேண்டும்.

பேச்சின் பகுதிகளுள் முடிவுரை மிக மிக இன்றியமையாத தாகும். எடுப்பின் அழகை முடிப்பில் காணலாம். எடுப்பின் குறையை முடிப்பு நிறைசெய்யும். இது ஒரு சிறந்த உண்மை எடுப்பின் எடுப்பை விட முடிப்பின் எடுப்பு சிறக்க வேண்டும். அவையோர் அனைவரின் அறிவும் மின்சாரத் தட்டில்லை. கலம் அளவு கொட்டினாலும் படி அளவு தான் பற்றும். பேச்சாளன் ஒருமணி நேரம் பேசினாலும் அவையோர் மனத்தில் ஒரு சிலவே பதியும். ஆகையால் அவர்கள் முன் அண்டமாக விரித்துக் காட்டியதைப் பிண்டமாகத் திரட்டித்தருதல் பேச்சாளனின் கடமை. முடிவுரைக்குள்ளே விரிவுரையின் வடிவம் தோன்றவேண்டும் என்பதையே முடிவுரையின் இலக்கணமாகக் கொள்ளலாம்.

இத்தகைய நாநலம் பயில நல்வழி காட்டுகிறார், காலஞ்சென்ற பேராசிரியர் ஆ. முத்துசிவம், தம்முடைய "மேடைக்கலை" என்ற நூலில். பேச்சாளராக ஆக விரும்பும் யாவர்க்கும் இந்நூல் ஒரு நல்ல வழி காட்டி. ஓரளவு எழுதப்படிக்கத் தெரிந்தவர்களும்கூட நன்கு புரிந்துகொள்ளும் பாங்கில் இந்நூல் எழுதப் பெற்றுள்ளது. எல்லோ ரும் புரிந்துகொள்ள வேண்டும் என்ற நோக்கத்தால் பிறமொழிச் சொற்கள் ஏராளமாக மிளிர்கின்றன. பேச்சாளர்க்கு மட்டுமின்றி, பேச்சுக்களைக் கேட்கப் போவார்க்கும் இந்நூலில் நல்ல அறிவுரைகள் காணப்படுகின்றன. முத்தமிழ் வல்ல முத்துசிவம், தாம் பெற்ற இன் பத்தை இவ்வையகத்திற்கு வாரி வழங்க முயன்றுள்ளார் என்றுதான் இந்நூலைப் படித்து முடித்ததும் எண்ணத் தோன்றுகிறது.

